

அன்பும் அறனும் தழைத்தோங்கி
இன்பம் பொங்கிப் பெருகிட
பொங்கட்டும் பொங்கலோ பொங்கல்
அனைவருக்கும்
இனிய பொங்கல்
நல்வாழ்த்துக்கள்
TMBன்
KIDS
RECURRING DEPOSIT
வளரும் இலட்சியம்
வளரும் குழந்தைகளின் இலட்சியங்கள் நிறைவேற. வாழ்வு சிறக்க TMBன் KIDS RECURRING DEPOSIT திட்டத்தில் சேமித்திடுங்கள். மாதந்தோறும் நீங்கள் சேமிக்கும் தொகை வளரும்... வளர்ந்து கொண்டே இருக்கும். தடையின்றி தொடரும் அவர்களின் இலட்சிய பயணம் வெற்றி இலக்கு நோக்கி.
இன்றே வாருங்கள் தமிழ்நாடு மெர்க்கன்டைல் வங்கிக்கு. சேமிப்பு கணக்கை துவக்குங்கள். வெற்றிக்கு வித்திடுங்கள்.
தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிட்.
Customer Oriented & Committed to Excellence
பதிவு அலுவலகம் : 57, வி.இ. ரோடு, தூத்துக்குடி-628 002 இணையதளம் www.tmb.in
lectronic Money Transfer • Anywhere Banking • Free ATM Card • 100% RTGS enabled branches • Countrywide accessible ATMs

# கோழிச் சண்டை!

பெண் கவிஞர் குட்டி ரேவதியின் பெயரைக் குறிப்பிட்டு, 'சண்டைக் கோழி' படத்தில் வசனம் எழுதியதாக எழுத்தாளர் எஸ்.ராமகிருஷ்ணன் மீது குற்றச்சாட்டு. அவரோ குற்றச்சாட்டை மறுக்கிறார். எஸ்.ராமகிருஷ்ணன், குட்டி ரேவதி இருவரில் யார் பக்கம் நியாயம் இருக்கிறது? சினிமா இலக்கியம் என இரண்டு தளங்களிலும் இயங்கும் எழுத்தாளர்களிடம் கேட்டோம்.

**கவிஞர் தாமரை :** சினிமா ஒரு டீம் ஓர்க். பாடலாசிரியராக சொல்வதென்றால், நாங்கள் எழுதித்தரும் வார்த்தைகளை, ஏன் வரிகளையே கூட எங்கள் கவனத்துக்குக் கொண்டு வராமல் மாற்றிவிடுவார்கள். பாடல் ஒலிப்பதிவு செய்யப்பட்டு

* ராமகிருஷ்ணன்



வெளியே வரும் போதுதான் நமக்கே தெரியும். இப்படி நேரும் விபத்தில் ஏதேனும் ஒரு வார்த்தையோ, வரியோ தவறான அர்த்தத்தைக் கொடுத்தால் பாடலாசிரியர் என்ற முறையில் என்னிடம் கேட்பார்கள். ஆனால் நான் எப்படி அதற்கு பொறுப் பேற்க முடியும்? வசனம் எழுதுபவரின் நிலைமை இன்னும் மோசம். வசனகர்த்தா எழுதிக் கொடுத்த வசனத்தை, படப்பிடிப்பு தளத்தில் மாற்றுவார்கள். ஏன் டப்பிங் சமயத்தில் நடிகர், நடிகையரின் உதட்டசைவுக்குப் பொருந்துகிற மாதிரி கூட மாற்றுவார்கள்.

எஸ்.ராமகிருஷ்ணன் அந்த வசனத்தை நான் எழுதவில்லை என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார். அதன் பிறகு அவரை அறிக்கை விடக்கோருவது முறையல்ல. மாறாக படத்துக்கு யார் இயக்குனரோ அவர் தெளிவுபடுத்த வேண்டும். அதற்குமுன்பு எஸ்.ராமகிருஷ்ணனை மன்னிப்புக் கேட்கச் சொல்வது எப்படிச் சரியாகும்?

எழுத்துலகில் பெண் கவிஞர்களை மோசமாகத் தாக்கிப் பேசும், எழுதும் குழுவைச் சேர்ந்தவரல்ல அவர். தமது எழுத்துகளிலும் பெண்களை இழிவுபடுத்துகிறவர் அல்ல.

**கவிஞர் லீனா மணிமேகலை :** எழுத்தாளர் எஸ்.ராமகிருஷ்ணன் இப்படி எழுதியிருந்தால் மிக மிகத் தவறு. ஆனால் எழுதவில்லை என்று அறிவிக்கிறார். நிச்சயமாக படத்தின் டபுள் பாசிட்டிவ் பிரதியைப் பார்த்திருப்பார். அப்போதே அதைக் கவனித்து இது வேண்டாம் என்று அவர் தடுத்திருக்க வேண்டும். அதையும் அவர் செய்யவில்லை. அவருடைய கவனத்தையும் மீறி நடந்திருக்குமானால், படத்தின் வசனகர்த்தா என்ற முறையில் தார்மீகப் பொறுப்பேற்று வருத்தம் தெரிவிக்க வேண்டும்.

இன்னொரு பக்கம் பெண் கவிஞர்களைப் பற்றி செய்தி வெளியிடுவதை,



* கவிதாயினிகள் போர்க்கொடி!

யூனிக் செல்லிங் பாய்ண்ட் எனும் விற்பனை உத்தியாகவும், ஒரு பரபரப்பான விற்பனை பொருளாகவும் எடுத்துக் கொண்டு அதிக முக்கியத்துவம் கொடுத்து செய்தி வெளியிடுவது வேதனை அளிக்

கிறது. சராசரி பெண்களுக்கு நடப்பதையே மீடியா ஒழுங்காக வெளிக்கொண்டு வருவதில்லை. அதை விட்டுவிட்டு பெண் கவிஞர்களை மீடியா விக்டீமாகப் பார்ப்பது தவிர்க்கப்பட வேண்டிய போக்கு. அதேபோல சர்ச்சைகளில் சிக்காமல் நிறைய வேலைகளைச் செய்வதில் பெண் கவிஞர்கள் கவனம் செலுத்த வேண்டும்.

**எழுத்தாளர்கள் சுபா :** நான் மட்டும் வசனம் எழுதவில்லை. என்னோடு சேர்ந்து பலர் வசனம் எழுதியிருக்கிறார்கள். அந்தக் குறிப்பிட்ட வசனத்தை நான் எழுதவில்லை என்று எஸ். ராமகிருஷ்ணன் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். அவர் சொல்வதில் எங்களுக்கு உடன்பாடு உண்டு. அவர் நல்ல மனிதர். யார் மீதும் எவ்வித விரோதமும் பாராட்ட விரும்பாதவர். வெகுஜன பத்திரிகைகளும் இலக்கிய உலகமும் இணைய வேண்டும் என்று நினைப்பவர். சினிமா உலகில் இதுபோன்று நிகழ்வது சகஜம்.



• சுபா



• லீனா



• தாமரை

குட்டி ரேவதியை நாங்கள் அறிவோம். என்றாலும், சண்டைக்கோழி படத்தை பார்த்த போது, குட்டி ரேவதி என்று வசனம் வந்த காட்சியில் மௌன ராகம் படத்தின் தொடக்கத்தில் துள்ளலும் துடிப்புமாக வலம் வரும் ரேவதியின் பாத்திரம்தான் நினைவுக்கு வந்தது. இது தன்னைப் பற்றி அவதூறாக எழுதப்பட்டது என்று குட்டி ரேவதியே வெளியே வந்து சொன்ன பிறகுதான், ஓ அப்படியும் இருக்குமோ என்று எல்லோரும் புரிந்து கொள்கிறார்கள். குட்டி ரேவதி இதைக் கவனிக்காமல், சட்டை செய்யாமல் விட்டிருந்தால் இதை யாருமே பொருட்படுத்தியிருக்க மாட்டார்கள்.

**- ஜெய்**

படங்கள் : **ஸ்ரீஹரி**


# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2110/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# ‘தமிழ் சினிமாவை ஆண்டவனாலும் காப்பாற்ற முடியாது!’

## –குமுறும் தயாரிப்பாளர்கள்

“கரகாட்டக்காரன் படம் வெளி வந்தபோது வாழைப்பழ காமெடியைப் பற்றி ஊரே பேசியது. ஜனம் தியேட்டருக்கு ஓடியது. இன்று இந் நிலைமை தலை கீழ். மக்கள் சினிமா காட்சிகளை டி.வி யிலேயே ஒன்று விடாமல் பார்த்து விடுகிறார்கள். தொலைக்காட்சிகளும் ஆட்டைக் கடிச்சு மாட்டைக் கடிச்சு கடைசியில் மனுஷனையே கடிக்க தயாராகி விட்டன. அதற்குள் எங்களைக் காப்பாற்றிக் கொள்ளா விட்டால் மேலும் பல திரையரங்குகள் மண்டபங்களாக மாறுவதை வேடிக்கை மட்டுமே பார்க்க முடியும். இதற்கெல்லாம் இப்பொழுதாவது முற்றுப்புள்ளி வைக்கா





விட்டால் பிறகு தமிழ் சினிமாவை ஆண்டவனாலும் காப்பாற்ற முடியாது.”

தொலைக்காட்சிகளுக்குப் படத்தின் பாடல் காட்சிகள் உள்பட எந்தவொரு கிளிப்பிங்ஸும் தரக்கூடாது என்று திடீரென போர்க்கொடி தூக்கியது தமிழ் தயாரிப்பாளர் சங்கம். இது தொடர்பாக திரையுலகினர் பலரைச் சந்தித்து பேசிய போது குமுறிய வார்த்தைகள்தான் மேலே உள்ளவை. “இன்று சினிமாவை பகடைக் காயாய் பயன்படுத்திக் கொண்டு வருடத்துக்கு இரு நூற்றி ஐம்பது கோடி ரூபாய் வரி கட்டும் தொலைக்காட்சிகள் உள்ளன. ஆனால் இதற்கெல்லாம் ஆதாரமாய் முதல் போடும் தமிழ் தயாரிப்பாளரின் நிலைமையோ தூக்குக் கயிற்றில் ஊசலாடிக் கொண்டிருக்கிறது. விதைப்பதற்கு மட்டும் அப்பாவி தயாரிப்பாளர் வேண்டும். ஆனால் பழம் பறிப்பவன் யாரோவா?” என்று கொதித்து போயிருக்கின்றனர் தமிழ் தயாரிப் பாளர்கள்.

தற்பொழுது சற்று மனமிறங்கி டி.வி ரைட்ஸ் வாங்கும் தொலைக்காட்சிகளுக்கு மட்டும் கிளிப்பிங்ஸ் கொடுக்கலாம் என்று தீர்மானம் போட்டுள்ளது தயாரிப்பாளர் சங்கம். ஆனாலும், “இதுவும் பிரச்னைக்கான தீர்வு அல்ல. தமிழ் சினிமாவை முழு வதுமாக காப்பாற்ற வேண்டிய கடமையிலிருந்து தயாரிப்பாளர் சங்கம் விலகப் பார்க்கிறது. சினிமாக்காரர்களே தொலைக் காட்சிகளுக்குச் சாதகமாக வேலை செய்யும் கொடுமைகளும் இப்பொழுது நடைபெற்றுக்



கொண்டுதானிருக்கிறது” என்று எச்சரிக்கை ஒலி எழுப்புகின்றனர் சில தயாரிப்பாளர் கள். “எங்கள் பெயரை எதுவும் போட்டு விடாதீர்கள்” என்ற வேண்டுகோளோடு



அவர்கள் நம்மிடையே முன்வைத்த சில நம்ப முடியாத தகவல்கள்...

"இப்பொழுது தமிழ் சினிமாவுக்கும் தொலைகாட்சிகளுக்கும் உள்ள பிரச்னையே தமிழ் படங்களின் சேடிலைட் ரைட்ஸை வாங்க எந்தவொரு டீ.வியும்



விருப்பம் காட்டுவதில்லை என்பதுதான். சமீபத்திய உதாரணங்களாக 'ஆறு', 'தவமாய் தவமிருந்து' படங்களைச் சொல்லலாம். சென்ற வருடத்தில் வெளியான படங்களில் மூன்றில் ஒரு பங்கு படங்களை எந்தவொரு தொலைக்காட்சியும் சீண்டாததால் பெட்டிக்குள்ளேயே முடங்கிக் கிடக்கின்றன. ஆனால், அந்தப் படங்களின் கிளிப்பிங்ஸ் மட்டும் இலவசமாக வாங்கி காசு பார்த்துள்ளன டீ.விகள். அதாவது பட ரிலீஸ் சமயத்தில் முப்பத்தாறு நிமிடங்கள் கொண்ட ஆறு பாடல்கள் டீவிகளுக்குக் கொடுக்கப்படும். அதன்பின்பு திரைவிமர்சனம் என்கிற பெயரில் இருபது நிமிட காட்சிகள். கூடுதலாக பதினைந்து நிமிட காமெடி காட்சிகள் போனஸ். இது தவிர, டாப்டென்களுக்காக வாரா வாரம் புதிதான காட்சிகள் வேண்டுமென்று மேலுமொரு நாற்பது நிமிட கிளிப்பிங்லை வாங்கிக் கொள்வார்கள். ஆக மொத்தம் கிட்டதட்ட ஒன்றரை மணி நேர காட்சிகள் இலவசமாக டீ.விகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. இதை வைத்துக்கொண்டு நூறு வருடங்களுக்கு மேலாக அவர்கள் பிஸினஸ் பார்க்க உரிமை உண்டு. ஆனால் தமிழ் சினிமாவுக்கு இதிலிருந்து ஒரு பருக்கையும் கிடைக்காது.

மேலும் இந்த கிளிப்பிங்லை கையில் வைத்துக்கொண்டு தினுசு தினுசாக சினிமா நிகழ்ச்சிகள் தயாரிக்கிறார்கள். டாப் டென் நிகழ்ச்சி மூலமாக ஒரு வாரத்திற்கு அறுபது லட்சத்துக்கு வருமானம் கிடைக்கிறது. இந்த ஒரு நிகழ்ச்சி மூலமாகவே வருடத்துக்கு முப்பது கோடியை அள்ளுகிறார்கள். தீபாவளி, பொங்கல் போன்ற பண்டிகை சமயங்களில் பிரபல நடிகர், நடிகையின் பேட்டிகளைப் போட்டு ஒரு பேட்டியில் நாற்பது லட்





சங்களை அள்ளும் தொலைக் காட்சிகளும் உண்டு. டாப் டென்னில் உங்கள் படங்களை முதலிடத்தில் அமர்த்து

இறோம் என்று ஆசைகாட்டி பேட்டி களை வாங்குகிறார்கள். டாப்டென் நிகழ்ச்சியினால் மறைமுகமாக முட்டிக் கொள்ளும் நடிகர்களும் உண்டு. இப்படி சோறு போடும் சினிமாவின் வயிற்றில் அடிப்பதும் கலகத்தை உருவாக்குவதும் போய் இப்பொழுது புதிதாக ஒரு சட்டம் பேசுகிறார்கள். சேட்டிலைட் உரிமை யோடு சேர்த்து இனிமேல் இவர்களுக்கு வெளிநாட்டு சேடிலைட் உரிமையும் அளிக்க வேண்டுமாம். படத்தின் ஓவர்சீஸ் உரிமையை யாருக்கு வழங்குகிறோமோ அவர்களுக்குத்தான் ஓவர்சீஸ் சாட்டி லைட் உரிமையையும் வழங்குவது வழக்கம். இதை சுலபத்தில் மாற்ற முடியாது.

அதேசமயம் அரசல் புரசலாகவும் சில அதிர்ச்சியூட்டும் செய்திகள் காதில் விழுகின்றன. சினிமாவுக்குள் இருந்து கொண்டே ஒரு சில தயாரிப்பாளர்கள் டி.விகளுக்குச் சாதகமாக நடந்து வருவதாக தெரிகிறது. அந்தப் பெரிய டி.வியில் சீரியல்களைத் தயாரித்து வரும் தயாரிப்பாளர்கள் இந்த இக்கட்டான தருணத்திலும் டி.விக்கு சாதகமாகவே காய்களை நகர்த்துகிறார்கள். அவர்களுக்கு டி.வி சீரியல்கள் வழியாக அனுதினமும் கிடைக்கும் லட்சக்கணக்கான வருமானம் எக்காரணம் கொண்டும் தடைபடக் கூடாது என்பதில் மட்டும் உறுதியாக இருக்கிறார்கள். தமிழ் சினிமா பற்றியெல்லாம் அவர்களுக்கு அக்கறையில்லை.

அதோடு பெரிய ஸ்டார்களை வைத்து படம் எடுக்கும் சில தயாரிப்பு நிறுவனங்கள் பெரிய டி.வியின் முக்கிய பொறுப்பில் உள்ள சிலரை கைக்குள் போட்டுக்கொண்டு அப்பாவி தயாரிப்பாளர்களை ஏமாற்ற ஒரு நாடகமே போடுவதாக தெரிகிறது. இதை உதாரணத்தோடு சொல்லிவிடுகிறோமே. சுமாராக ஓடிய படத்தின் டி.வி ரைட்ஸுக்குண்டான பேரத்தில் டி.வியின் முக்கிய பொறுப்பிலுள்ளவர்கள் பதினைந்து லட்சம் தருவதாக சொல்வார்கள். அடிமட்ட ரேட்டாக உள்ளதே என்று தயாரிப்பாளர் கெஞ்சிப் பார்ப்பார். பேரம் படியாது. விட்டு விடுவார். அவர் கிளம்பிச் சென்ற பின் நிர்வாகிகள் விஷயத்தைத் தயாரிப்பாளரின் காதில் போட்டு விடுவார்கள். இப்பொழுது தயாரிப்பாளர், அந்தப் பாவப்பட்ட தயாரிப்பாளரிடமிருந்து எப்படியாவது பேசி சாடிலைட் ரைட்ஸ் இருபது லட்சத்திற்கு வாங்கி நிர்வாகியின் உதவியோடு டி.வி நிறுவனத்துக்கு அதிக விலைக்கு விற்று விடுவாராம். இதையெல்லாம் கேட்டால் தலைதான் சுற்றுகிறது.

டி.வியினால்தான் படங்கள் ஓடுகிறது என்றும் வாதிடுகிறார்கள். வருடத்துக்கு குறையாமல் நூறு தமிழ் படங்கள் ரிலீஸாகின்றன. பெரும்பாலும் அத்தனை படங்களின் கிளிப்பிங்ஸ்களும் டி.வியில் நாள் முழுக்க ஓடுகின்றன. அப்படியானால் ரிலீஸான அத்தனை படங்களும் டி.வியின் புண்ணியத்தில் நன்றாக ஓடியிருக்க வேண்டுமே. ஏன் இல்லை? ஓடுகிற படங்களுக்கு டி.வியினால் பெரும் பாதிப்புதான். டி.வியினால் இன்று ரிப்பீட் ஆடியன்ஸ் சுத்தமாக குறைந்துவிட்டார்கள். இப்பொழுது எந்த டி.விக்கு சேட்டிலைட் ரைட்ஸ் கொடுக்கிறோமோ அவர்களுக்கு மட்டும் கிளிப்பிங்ஸ் கொடுக்கலாம் என்று தீர்மானம் போடப்பட்டுள்ளது. இதுவும் டி.விகளுக்கே சாதகமாகப் போய்முடியும். மிகப்பெரிய நடிகர், இயக்குனர்களின் படங்களை மொத்தமாக வாங்கும் ஒரு டி.வி இம்முடிவால் மேலும் லாபமடையப் போகிறது. மற்ற சேனல்களில் கிளிப்பிங்ஸ் கிடைக்காத கோபத்தில் படத்தை எதிர்மறையாக விமர்சிக்க வாய்ப்புண்டு. அதோடு இன்னொரு முக்கிய டி.விக்கு இத் தீர்மானங்கள் சாதகமாக அமையாத பட்சத்தில் விளைவுகள் வேறு கோணத்தில் திரும்ப வாய்ப்பு உண்டு. ஒருவேளை அரசு, சினிமா வரிகளை உயர்த்தி விட்டால் தயாரிப்பாளர் சங்கத்தால் என்ன செய்ய முடியும்?'' என்கின்றனர்.

• தியாகராஜன்



• அபிராமி ராமநாதன்



திரையரங்கு அதிபர்களுக்கு இப்பிரச்னை சாதகமா, பாதகமா? 'அபிராமி

ராமநாதனிடம் கேட்டோம். "கஜினி படத்தின் வெற்றிக்கு அதன் பாடல்கள் தொடர்ந்து டி.விகளில் ஒளிபரப்பப்பட்டதும் ஒரு காரணம் என்று சொல்லப்படுகிறது. தயாரிப்பாளர்களின் இந்த அதிரடி முடிவை திரையரங்கு அதிபர்கள் பாராட்டவும் செய்கிறார்கள். அதேசமயம் விமர்சனங்களும் உண்டு. இந்த விஷயத்தில் தயாரிப்பாளர்களின் நலனும் அவர்களது முடிவுகளுமே முக்கியம்" என்றார்.

இப்பிரச்னை ஆரம்பித்த பிறகு சேனல்கள் சார்பாக பலர் தயாரிப்பு சங்கத்துக்கு வந்து விவாதித்துள்ளனர். சன் டி.வியில் கோரிக்கைகளுக்குச் செவி சாய்த்து ஆவண செய்வதாக கூறியுள்ளார்களாம். ஜெயா டி.வி நிர்வாகிகள் வந்து பேசியதில் தயாரிப்பாளர்கள் மனமுருகி போய் விட்டார்களாம். "பத்து செகண்ட்ஸுக்கு ஆறாயிரம் ரூபாய்தான் வாங்குகிறோம். எங்கள் வருமானத்திற்கேற்ப நிச்சயம் சேடிலைட் ரைட்ஸ்களை வாங்கிக் கொள்வோம்" என்றார்களாம்.

இப்பிரச்னை குறித்து தயாரிப்பாளர் சங்கத் தலைவர் டி.ஜி. தியாகராஜன் பத்திரிகையாளர்களிடம் பேசும்போது,

"படங்களின் டி.வி ரைட்ஸ், ஓவர்சீஸ் ரைட்ஸ் வழங்குவதில் சிக்கல்கள் உள்ளதாக உறுப்பினர்கள் தெரிவித்தனர். இதற்கென ஒரு குழு அமைக்கப்பட்டு தீர்மானங்களும் வகுக்கப்பட்டுள்ளது. படத்தின் மூன்று நிமிட ட்ரெய்லர் மட்டும் எல்லா தொலைக்காட்சிகளுக்கும் கொடுக்கப்படும். மற்றபடி படங்களின் விளம்பரத்துக்காக முக்கிய டி.வி சேனல்களில் 'ஸ்லாட்' எடுத்துத் தர சங்கம் ஏற்பாடு செய்யும்" என்று தெரிவித்தார்.

ஆனாலும் முழுமையாக சிக்கல்கள் தீர்ந்தபாடில்லை. அடுத்தடுத்து வரும் கூட்டங்களில் இவ்விவகாரம் மேலும் கிளறப்படும் என்று தெரிகிறது. எது எப்படியோ, தமிழ் சினிமாவை பிழைக்க வைத்தால் ரசிகர்கள், தயாரிப்பாளர்களுக்கும் கட்அவுட் வைத்து, பாலாபிஷேகம் செய்ய தயங்க மாட்டார்கள்!

- செந்தில்

இந்நேரம் டெல்லிக்கோ, ஹைதரா பாத்துக்கோ கைநழுவிப்போயிருக்க வேண்டிய போட்டி. விஜய் அமிர்த ராஜின் விடாமுயற்சியாலும் (தற்போதைய) தமிழக அரசின் ஆதரவாலும் சென் னைக்கே திரும்ப கிடைத்து, சமீபத்தில் ஊர்த் திருவிழா மாதிரி கோலாகலமாக நடந்து முடிந்துள்ளது சென்னை ஓப்பன் டென்னிஸ் போட்டி. (வரிசையாக கிரிக்கெட், ஹாக்கி போட்டிகளையெல் லாம் ஒரு கை பார்த்த அடைமழை, டென்னிஸை மட்டும் போனால் போகட்டும் என்று விட்டது அதிசயம்!).

## ஏமாற்றம்

சென்னை ஓப்பனில்தான் முதன் முறையாக லியாண்டர் பெயஸும் மகேஷ் பூபதியும் கைகோத்து, ஜெயித்து, பின்னர்



• ''இந்தியா ஜெயிச்சுரு''

உலகையே தங்கள் பக்கம் திருப்பினார் கள். ஆனால் இம்முறை மகேஷ் போட்டி யில் கலந்து கொள்ளவில்லை. லியாண் டரின் ஆட்டத்திலும் தேய்மானம் ஏற் பட்டுவிட்டது- ஆரவாரமாக வந்தார். பெரிதாக எதுவும் சாதிக்கவில்லை. அதே போல சென்னை ஓப்பனில் இந்தியர் களின் ஆதிக்கம் எப்பொழுதுமே குறை வாகவே இருக்கிறது. டபுள்ஸில் பிரகாஷ் அமிர்தராஜ்-ரோஹன் பொபண்ணா இரு வரும் டபுள்ஸ் ஃபைனல்ஸ் வரைக்கும் வந்ததே அவர்கள் முன்னோர்கள் செய்த புண்ணியம். கால் இறுதியில் வாக் ஓவர் கிடைத்தது. அரையிறுதி யில் ஐந்து மேட்ச் பாயிண்ட்ஸ் களை எதிர் அணிக்கு விட் டுக் கொடுத்த பிறகே மயிரிழையில் ஜெயித்தார் கள். ஃபைனல் லில் மிக சொதப்பலாக ஆடி தோற்றார்கள். ஆனா லும் அடுத்த லியாண்டர் - பூபதி இவர் கள்தான். அதில் சந்தேகமில்லை!



• செல்லப் பிள்ளை

## நெகிழ்ச்சி

வருடா வருடம் சென்னை யில் இப்படியொரு உலகத்தரமான போட்டி நடைபெறுவதற்காக விஜய் அமிர்தராஜுக்கு ஒரு சலாம் போட வேண்டும். குடும்பத் தின் மூத்த மகன் போல சென்னை யின் பெருமையைக் கட்டிக் காப் பதில் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டார். தள்ளாத வயதிலும் விஜய் அமிர்தராஜின் பெற்றோர் களான ராபர்ட்-மேகி இருவரும் தங்கள் பேரன் (பிரகாஷ் அமிர்தராஜ்) ஆடும் நாட்களில் தவறாது வந்து கண்டுகளித்தனர்.



• 'மொட்டைடய்ப்'

## ஆரவாரம்

சென்னை மக்களின்

# சென்னையில் ஒரு டென்னிஸ் த்ரில்லர்!



• அடுத்த பெயஸ் - பூபதி

தாராள மனதை ஒருவாய் பாராட்டாமல் இருக்க முடியாது. எப்படி இப்படியொரு தாராள மனது வந்ததோ தராசுமுள்போல நடுநிலைமையோடு இந்தியர்கள் ஆடினாலும் ஆடாவிட்டாலும் பெருந்திரளாக வந்து போட்டியைக் கைதட்டி, ஆர்ப்பரித்து ரசித்தனர். அதிலும் க்ரௌடின் செல்லப்பிள்ளை கார்லஸ் மோயாதான். "மோயா... மோயா..." என வாண்டுகள் முதல் அத்தனை பேரும் உதடு குவித்து டெசிபல் உயர்த்தி இருமுறை பட்டம் வென்ற ஸ்பெயின் வீரரை உற்சாகப் படுத்தினர். ஒரே ஒரு நாள் இயக்குனர் மணிரத்னம், ராஜீவ் மேனனோடு ஸ்டேடியம் வந்துவிட்டுப் போனார். அத்தனை உற்சாக வெள்ளத்துக்கு மத்தியிலும் மணி மட்டும் வழக்கம்போல் மோவாய் கட்டையில் கை வைத்துக் கொண்டு அமைதியாகவே ஆட்டத்தை ரசித்துக் கொண்டிருந்தார்.



• தேய்மானம்...



## சர்ச்சை

சிங்கிள்ஸ் மேட்ச்சுகளுக்கு உள்ள ஆதரவும் விறுவிறுப்பும் டபுள்ஸ் மேட்சுகளுக்கும் கிடைக்க வேண்டி சமீபத்தில் சில மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. மூன்றாவது செட் ஆடவே வேண்டியதில்லை. பத்துப் புள்ளிகள் எடுத்தால் போதுமானது. விளைவு? "ஆட்டத்தின் தரம் சுருங்கிவிட்டது. லாட்டரியில் ஜெயிப்பது போலிருக்கிறது. டபுள்ஸ் ஆட்டங்கள் பிரபலமடைய மேலும் மார்க்கெட்டிங் செய்ய வேண்டுமே தவிர இப்படி கேமை சிதைக்கக் கூடாது" என ஓங்கிக்

குரல் கொடுத்தார் லியாண்டர் பெயஸ். அதே சமயம் முதல் ரவுண்டில் இவருக்கும் இப்படியொரு லாட்டரி அடிக்கவே செய்தது.



• சலாம்

### மிரட்டல்

Ivan lijubicic - இந்தப் பெயரை மட்டும் முதல் தடவையே சரியாக உச்சரித்தவர்களுக்கு ஏதாவது தாம்பாலத் தட்டோ அல்லது எவர்சில்வர் டபராவோ பரிசளித்திருக்கலாம். 'மொட்டைய்ய்ய்...' என்று ரசிகர்களால் செல்லமாக அழைக்கப்பட்ட குரோசிய வீரர் இவான் லுபிசிச் ஃபைனல்ஸில் சூறாவளியாய் மாறி மோயாவைக் கவிழ்த்தார். ஒவ்வொரு மேட்ச்சையும் திருமதி. லுபிசிச் கேலரியிலிருந்து கண்டு களித்ததோடு லுபிசிச்சின் ஒவ்வொரு தவறுக்கும் அங்கிருந்தே பார்வையிலே மிரட்டிக் கொண்டிருந்தார். நல்ல வேளை மனிதர் ஜெயித்தார். இல்லாவிட்டால் வீட்டில் சாண்ட்விச் கிடைத்திருக்காது.

செமிஃபைனலில் மோயாவிடம் தோற்ற செக் வீரர் ஸ்டெபனிக்காக ஒரு சொட்டுக் கண்ணீர் விடலாம். தூறல்களுக்கு நடுவே 4 - 6, 7 - 6, 7 - 6 என்ற ஸ்கோரில் முடிவுற்ற இந்த த்ரில்லர் மேட்ச்சை ஆயுசுக்கும் சென்னை ரசிகர்கள் மறக்க மாட்டார்கள்!

- ச.ந. கண்ணன்

படங்கள் : ஸ்ரீஹரி



## சின்ன ஜோக்; பெரிய பரிசு!

நாங்க ரெடி! நீங்க ரெடியா?

வாரம் ஒரு ஜோக் போட்டி!

### போட்டி 2

எழுதுங்க செல்போனை மையப்படுத்தின ஜோக்ஸ். உங்க எஸ்.எம்.எஸ்.-ல வர்ற ஜோக்குகளைச் சுட்டு அனுப்பாம ஒரிஜினல் ஜோக்குகளை மட்டும் சிரிச்சு வயிறு புண்ணாகற மாதிரி அனுப்பி வைங்க. தேர்வாகும் ஜோக்குகளுக்கு சன்மானம் உண்டு.

பளீர் ஜோக்குக்கு

**தூத்துக்குடி மெட்டல்ஸ்,** சென்னை - 19

வழங்கும்

**'ப்ரீத்தி' மிக்ஸி பரிசு!**

---

• 'செல்போன் ஜோக்ஸ்'னு குறிப்பிட்டு அஞ்சலட்டையில் மட்டுமே எழுதணும்.

• ஒரு அட்டையில் ஒரு ஜோக் மட்டுமே எழுதவும்.

• ஆசிரியர் தீர்ப்பே இறுதி. • கடைசித் தேதி : 25.1.2006

As per BIS,
IS:2888-1983.



## உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




**மேனிப் பராமரிப்பு என்றென்றும்**

சீசன் சிந்தனைகள்

# பிரித்தாளும் சூழ்ச்சி!

ஜனவரி 8 இதழில் 'பக்தியில்லாமல் சங்கீதமா? சட்டியில்லாமல் குழம்பு சமைக்க முடியுமா?' என்று ஒரு கேள்வி எழுப்பி வாசகர்களைக் கருத்து கேட்டதற்கு, எழுதிப்போட்ட எல்லோருமே பக்தியையும் இசையையும் பிரிக்க முடியாது என்றுதான் சொல்லியிருக்கிறார்கள்.

ஏன் அப்படி என்பதை மட்டும் சிந்தித்தாக வேண்டும். அனேகமாக எல்லா பாடல்களும் தெய்வங்களைப் பற்றியவை என்பதால் மட்டும் அல்ல இது.

கர்நாடக சங்கீதம் என்பது மிகுந்த வளம் பெற்றது மும்மூர்த்திகளின் காலத்தில்தான். தியாகராஜர், முத்துஸ்வாமி



தீக்ஷிதர், ஷ்யாமா சாஸ்திரி ஆகிய அந்த மூவர் ஏறத்தாழ ஒரே காலகட்டத்தில் வாழ்ந்தனர். மூவருமே திருவாரூரில் பிறந்தனர் என்பதும் ஆச்சர்யமான ஒற்றுமை.

பொருட்செறிவு மிகுந்த பாடல்களை (கீர்த்தனைகள்) இசைச்செறிவு ததும்பும் வர்ணமெட்டுகளுடன் சேர்த்து இவர்கள் இயற்றினார்கள். தத்துவார்த்தம், ஆன்மத் தேடல், வழிபாடு சூட்சுமம் என பல உயர்ந்த விஷயங்களை உள்ளடக்கிய பாடல்களும் அவற்றுக்கான மெட்டும் ஒரு சேர இவர்களிடமிருந்து உதித்து வந்தன. இத்தகைய கலையாழமும் ஆன்ம விசாரமும் இணைந்த இசைப்படைப்புகள் உலகில் வேறெந்த கலாசாரத்திலும் உள்ளதா என்பது சந்தேகம்தான்.

மொழி அறிவும் இசை ஞானமும் படைத்த யார் வேண்டுமானாலும் இத்தகைய கீர்த்தனைகளை இயற்றிவிட முடிகிறதா...? என்று கேட்டால், இல்லை என்பதே பதில். மும்மூர்த்திகள் வழியில் பிற்காலத்தில் சிலர் இயற்றினார்கள்; இயற்றுகிறார்கள். ஆனால் அளவிலும் செறிவிலும் மும்மூர்த்திகளை ஈடு செய்ய இன்னும் யாரும் தோன்றவில்லை.

ஜனவரி 6 ஹிந்து இதழில் விமர்சகர் எஸ்.வி.கே குறிப்பிட்டது போல், மும்மூர்த்திகள் தங்கள் படைப்புகளைக் கச்சேரி மேடைக்காக இயற்றவில்லை. ஆனால் இன்றைக்கு இந்த மும்மூர்த்திகளின் கீர்த்தனைகள் அல்லது அவர்கள் வழியில் இயற்றியவர்களின் பாடல்களே கச்சேரிகளுக்கு அடிப்படையாக அமைகின்றன.

அப்படி இருக்க, அந்தக் கீர்த்தனைகளின் உணர்வுகளுடன் ஒன்றாமல் வழங்கப்படும் நிகழ்ச்சிகள் கர்நாடக சங்கீதமாக இருக்க முடியுமா?

'கச்சேரிகளில் அழகியல் நோக்கில் மட்டுமே கையாளப்படும் தியாகராஜ கீர்த்தனையைக் கேட்டு ரசித்து கைதட்டும் ரசிகர்கள்தான், அதே கீர்த்தனை பக்திபூர்வமாகப் பாடப்படும் உயரிய நாமஸங் கீர்த்தன நிகழ்ச்சிக்கும் போய் அமர்கிறார்; அங்கே கை தட்டி ஆர்ப்பரிப்பதற்குப் பதில் மனம் குவிகிறார்; பக்தியில் தோய்கிறார்?' என்றும் தமது கட்டுரையில் சுட்டிக்காட்டுகிறார் எஸ்.வி.கே.

ஆக, பக்தியும் கர்னாடக சங்கீதமும் பிரிக்க முடியாதவை. பிரித்தாளும் சூழ்ச்சியில் ஈடுபடுவோர் தாங்கள் வெற்றி பெற்றதாக நினைத்துக் கொள்ளலாம். ஆனால் அவர் நிகழ்ச்சியின் ரசிகர்களுள் ஒருவரேனும் காமாக்ஷியையும் சியாமா சாஸ்திரியையும் நினைத்துக் கண்ணீர் பெருக்கினால் வெற்றி யாருக்கு? ○



தும்புரு




# போலி ஆயுர்வேதம்!

**யோ**கமும் ஆயுர்வேதமும் நமது நாட்டின் உயரிய பாரம்பரிய சொத்துகள். மனித குலத்தின் மன வளத்தையும் உடல் ஆரோக்கியத்தையும் பேணிக் காப்பதற்காக ஏற்பட்டவை. ஆனால், இன்று இந்த இரு துறைகளுமே ஏமாற்றுக்காரர் களுக்குச் சௌகரியமான ஆயுதங்களாகி வருகின்றன என்பது வேதனை மிகுந்த உண்மை.

இதற்கு முக்கியமான காரணம் நமது மக்கள் கண்ணை மூடிக்கொண்டு எதையும் யாரையும் நம்பி விடுவதுதான்.

இந்த நம்பிக்கையே ஏமாற்றுக்காரர்களால் தவறாகப் பயன்படுத்தப்படுகிறது. அரைவேக்காட்டு யோகா வகுப்புகள் காளான்களாக முளைத்துள்ளன. ஆயுர்வேத தயாரிப்புகள் என்ற பெயரில் போலி மருந்துகள் சுறுசுறுப்பாக வியாபாரமாகிக் கொண்டிருக்கின்றன. போலிச் சாமியார்கள் பற்றியோ கதை கதையாகக் கூறலாம்!

போலிச் சாமியார்களை இனம் காண்பது கொஞ்சம் கஷ்ட மான காரியம்தான். ஆனால் யோகா வகுப்புகள், ஆயுர்வேத மருந்துகள் போன்றவற்றை சட்டரீதியாக நெறிப்படுத்துவது சாத்தியமே.

ஆயுர்வேத மருந்துகள் என்று விற்கப்பட்ட பலவற்றில் உடல் நலத்துக்கு நிரந்தர கேடு விளைவிக்கும் ஸ்டீராய்டுகள் இருப்பது அண்மைக்காலங்களில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. சில வகை ஆயுர்வேத மருந்துகளில் கலப்படமும் மிக அதிகமாக இருப்பது



கல்கி



2006 ஜனவரி 22
பார்த்திப தை 9
மலர் : 64
இதழ் : 25




பரிசோதனைகளில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இந்நிலையில், உத்தராஞ்சலில் உள்ள சுவாமி ராம்தேவ் என்பவருடைய திவ்ய யோகா மருந்தகத்தில் விற்கப்பட்ட மருந்துகளில் மனித எலும்புகள் கலக்கப்பட்டிருப்பதாகத் தெரிய வந்துள்ளது பேரதிர்ச்சி தரும் விஷயம்.

இந்த விஷயத்தைப் புலனாய்ந்து, கண்டுபிடித்து, வெளிப்படுத்திய மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவியான பிருந்தா காரத், நன்றியுடன் பாராட்டப்படுவதற்குப் பதில் 'ஹிந்து விரோதி' என்று முத்திரை குத்தப்பட்டிருக்கிறார்! 'பன்னாட்டு நிறுவனம் ஒன்றின் கைப்பாவையாக சி.பி.ஐ.எம் இவ்விஷயத்தில் செயல்படுகிறது! என்று அபாண்ட பழியும் சுமத்தப்பட்டுள்ளது. இத்தனைக்கும் சி.பி.ஐ.எம் கொள்கை அளவிலேயே பன்னாட்டு நிறுவனங்களை எதிர்க்கிற கட்சி!

காரத்தும் அவரது கட்சியினரும் ராம்தேவ் ஆசிரமத்தின் யோகா பயிற்சி மையம் சிறப்பாகச் செயல்படுவதாகவும், அதன் பேரில் தாங்கள் புகார் கூறவில்லை என்றும் தெளிவு படுத்திவிட்டனர். மனித உடல் பாகங்களை ஆயுர்வேத தயாரிப்பில் பயன்படுத்தும் கொடூர வக்கிரத்தைத்தான் எதிர்ப்பதாகத் தெரிவித்துள்ளனர்.

எனினும், விவகாரத்தை அரசியலாக்குவது என்று முடிவு செய்துவிட்ட பரிவார் அமைப்புகள் வீதியில் இறங்கி போராட்டமும் நடத்தியுள்ளன.

பிருந்தா காரத் முதலானோர் செயல்பட்டதே ஆசிரம ஊழியர்கள் சிலர் கொடுத்த எழுத்துபூர்வமான வாக்குமூலத்தின் அடிப்படையில்தான். விலங்குகள், மனித உடல் ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட ஓரிரு இடுபொருள்கள் சுவாமி ராம்தேவின் 'ஆயுர்வேத' தயாரிப்புகளில் கலக்கப்படுவதாக அந்த வாக்குமூலம் கூறுகிறது!

ஹைதராபாத்தில் உள்ள டி.என்.ஏ பரிசோதனைக் கூடத்தில் இம் மருந்துகள் பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டபோது, மனித டி.என்.ஏ அதில் இருப்பதாகக் கண்டறியப்பட்டது. சுகாதார அமைச்சர் அன்புமணியே இத்தகவலை வெளியிட்டிருக்கிறார்.




இந்தப் பரிசோதனைக்காக வாங்கப்பட்ட மருந்துகள் ராம்தேவ் ஆசிரமத்தின் மருந்துக்கடையில் முறைப்படி வாங்கப்பட்டு, சுகாதார அமைச்சகத்தின் 'ஆயுஷ்' பிரிவிடம் பரிசோதனைக்குத் தரப்பட்டிருக்கிறது. 'ஆயுஷ்' என்பது நாட்டு மருந்துகளைப் பரிசோதிக்கும் பிரிவு ஆகும்.

பொதுநல நோக்கில் இதற்கெல்லாம் முயற்சிகள் மேற்கொண்டு செயல்பட்ட மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் எம்.பி.யை தேச துரோகி என்றும் ஹிந்து விரோதி என்றும் முத்திரையிடுவது வடிகட்டிய அரசியல் அன்றி வேறென்ன! வட இந்தியா எங்கும் கம்யூனிஸ்ட் அலுவலகங்களில் பா.ஜ.கவினர், பரிவார் அமைப்பினர் சென்று கோஷங்கள் எழுப்பி போராட்டம் நடத்தியதும் பிருந்தா காராத்தின் கொடும்பாவிகளை எரித்ததும் பதிலுக்கு மார்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியினர் போராட்டம் நடத்தி கோஷம் போட்டதும் அனாவசிய, அநாகரிக வெளிப்பாடுகள்.

ஆரோக்கியத்தை வழங்க வேண்டிய மருந்தில் - அதுவும் அசைவத்தை முற்றிலும் தவிர்க்கும் ஆயுர்வேத மருந்தில் - மனித உடல் பாகங்களைக் கலப்பதென்பது வக்கிரமான செயல்பாடு. மனவளத்தைப் பெருக்குவதற்காகத் தொடங்கப்பட்ட யோகா மையத்தின் தலைவரான ராம்தேவின் மேற்பார்வையில் இக் குரூரம் நடைபெறுவது இரட்டிப்பு அதிர்ச்சி!

இவ்வளவு நடந்து முடிந்திருக்கையில் உத்தராஞ்சல் முதல்வர் என்.டி. திவாரி, இப்பிரச்னையிலிருந்து தம்மை முற்றிலுமாக விலக்கிக்கொண்டு, "இது பிருந்தா காராத்துக்கும் ராம்தேவ் சுவாமிக்குமிடையேயான தனிப்பட்ட பிரச்னை" என்று பொறுப்பில்லாமல் பேசியிருக்கிறார்!

இந்தப் பிரச்னைக்கு விரைந்து ஒரு முடிவு கட்டும் விதமாகவும் இனியும் இதுபோன்ற கோர வியாபார மோசடிகள் நம் நாட்டில் நிகழாமல் தடுக்கும் விதமாகவும் சுகாதார அமைச்சர் புலனாய்வுகளை விரைவுபடுத்த வேண்டும். ஆயுர்வேத தயாரிப்புகளையும் ஆசிரமங்களையும் நெறிப்படுத்தும் விதிகளை வலிமைபடுத்துவதுடன் பயனீட்டாளர்கள் அனைவரும் அறியும் வண்ணம் அவற்றைப் பிரசாரம் செய்ய வேண்டும். ○

# பட்டாம்பூச்சி பறக்குது!

அம்மாவுக்குப் புதிய தலைவலி உண்டாக்கிய ஆறு அமைச்சர்கள், கலைஞரின் தலையிலும் பட்டாம்பூச்சியைப் பறக்க விட்டு விட்டார்களே!

திருச்சி, பறம்பை இரா.சு.பிரகாசம்

'சுடோகு சுந்தரி' எதார்த்தமாக இருந்தது. கணவன் - மனைவி இடையே விவாகரத்துக்கு சுடோகுவும் காரணமாகலாம் இனி வரும் காலத்தில்.

சென்னை, வெ.கோபாலன்

சொந்த சித்தப்பாவாலேயே சக்கையாகத் தூக்கி எறியப்பட்ட சைதய்யா தொண்ட பூவின் சக்ஸஸ் ஸ்டோரியைப் படித்து பிரமித்தேன்.

நெல்லை, செ.சத்தியசிலன்

அத்வானி மிக மூத்த பா.ஜ.க. நாடாளுமன்ற உறுப்பினர், திறமையாளர், வாதத் திறமை உள்ளவர், அவர் பா.ஜ.க.வின் நாடாளுமன்ற தலைவராக நீடிப்பதில் தவறேது? பொதுவாக பா.ஜ.க.வை அழிக்க காங்கிரஸ் மறைமுக போரைத் தொடுத்துள்ளது. அதற்கு சரியான மாற்று, அதிரடி அரசியல்தான். அதனால்தான், பா.ஜ.க.வும் தனது அறிவுபூர்வமான அரசியல் அணுகுமுறையை மாற்றி வருகிறது.

சென்னை, ஆர்.நாகராஜன்

'குத்துப் படங்களால் கொத்துப்பட்டோர் சங்கம்' இரண்டு பக்கங்கள் சும்மா சொல்லக்கூடாது, பரோட்டா மாஸ்டர் சும்மா புரட்டி புரட்டி அடிச்சுட்டாரு போங்க.

சென்னை, வே.முருகேசன்

நடிகர் விவேக்கிடம் மாட்டிய தீவிரவாதி கல்கி சிரிப்பு ஸ்பெஷலின் ஹை லைட்டான சூப்பர் சமாச்சாரம்.

மதுரை, ஆர்.லட்சுமி




கல்கி இதழின் விலையேற்றம் எங்களுக்கு வருத்தத்தைத் தரவில்லை. எட்டு ரூபாயாக கல்கியின் விலையை ஏற்றியிருப்பது நியாயம்தான். தரமான செய்திகளை மட்டுமே எங்களுக்கு படிப்பதற்கு கொடுத்துக் கொண்டிருக்கும் கல்கியை எட்டு ரூபாய் கொடுத்து வாங்கிப் படிக்க நாங்க தயார்.

மொரட்டுப்பாளையம், சு.நா.இராஜேஸ்வரன்

கிரேஸி டிரெய்லரில் அவரது ஜெர்ரி பட நகைச்சுவை வசனத் துளிகளைப் படித்து சிர்ரி சிர்ரி எனச் சிரித்தோம்.

அயன்புரம், த.சத்தியநாராயணன்

ஆர்.சி.ஜெயந்தன் கவிதைகள் நான்கும் தேன் சிந்தும் மலர்கள். அனந்த பத்மநாபனின் ஓவியம் கண்ணுக்கும் கருத்துக்கும் இனிமை சேர்ப்பது.

வில்லிவாக்கம், க.குமரேசன்

# ஆறு!

கிருஷ்ணா

அந்த பங்களாவின் வெளிப்புற வாசலில் வந்து நின்றான் துரை. டிரைவராக இங்கு வேலைக்குச் சேர்ந்து இரண்டு நாட்களே ஆகியிருந்தன.

புல்வெளியில் நாய் விளையாடிக் கொண்டிருந்தது. இவனைப் பார்த்ததும் குரைத்தது. உயர் ஜாதி நாய் என்று பார்த்ததுமே தெரிந்தது. கறுப்பும், பழுப்புமான நிறத்தில், அவன் இடுப்பு உயரம் வளர்ந்திருந்தது.

திடீரென்று குரல்... "டிரைவர், மசமசன்னு நிற்காதே. இந்தக் கூடையை எடுத்துட்டுப் போய் கார் பின்னாடி வை"

முதலாளியம்மாதான். கடுகடுத்தாள். இன்று ஊருக்குப் போகிறார்கள். ரயிலடி வரை காரில் அவன்தான் கொண்டு விட வேண்டும்.

இரண்டே மாதங்களில் அவன் நிலை தலைகீழாகத்தான் போனது. பஞ்சு மில்லில் வேலை. மாதம் பிறந்தால் சம்பளம். கைக்கும், வாய்க்கும் சரியாகிப் போனாலும், கௌரவமான வாழ்க்கை. கிட்டத்தட்ட பத்து வருடங்களாய் ஓடை நீராய் சீரான வாழ்க்கை ஓட்டம். வேலை நிறுத்தம் வந்ததும் நிலையே மாறிப்போனது. புது யூனியன் தலைவர் வந்தார். அமைதி குலைந்து போனது. யூனியன் தலைவர் மகுடி ஊதும் பேச்சின் முன், தொழிலாளர்கள் ஏமாந்து போய், நிம்மதியைத் தொலைத்துத் தவிக்கின்றனர்.

புலிவால் பிடித்த கதையாகிப் போனது. மாதச் சம்பளம் இல்லை என்றதும், அவனது கௌரவ சாயம் வெளுத்துப் போனது. குடும்ப நண்பர் ஒருவரின் சிபாரிசின் மூலம் இந்த டிரைவர் வேலை கிடைத்துள்ளது.

துரைக்கு உத்தரவுகளைப் பிறப்பித்தபடி காரில் ஏறிக் கொண்டாள் முதலாளியம்மா.

கார் கதவை மூடிவிட்டு, அவன் டிரைவர் இருக்கைப் பக்கம் சுற்றி வரும்போது, முதலாளியம்மா கூப்பிட்டாள்.

"ஆறுமுகம்"

அவன் திடுக்கிட்டுப் போய் நின்றான். அந்த முரட்டு நாய், வாலைக் குழைத்தபடி ஓடிவந்து, காரினுள் ஏறிக் கொண்டது. முதலாளியம்மாவுடன் கொஞ்சிக் குலாவும் அந்த நாயை உற்றுப் பார்த்தான்.

"ச்சீ, சனியன்" என்று திட்டிவிட்டான்.

"ஏய், என்ன சொன்னே?"



"அது... நாய் வந்ததும் பயந்துபோய்... திட்டிட்டேன்மா"

"இதோ பாரு. இந்த ஆறுமுகம் என் குழந்தை மாதிரி. இதை நாய்னு சொன்னாலோ, திட்டினாலோ எனக்குப் பிடிக்காது, புரியுதா?" முதலாளியம்மா உக்ரப் பார்வை பார்த்தாள். அப்போது

நாயும், அவனைப் பார்த்துக் குரைத்தது.

மனத்துக்குள் திட்டியபடி காரில் ஏறி அமர்ந்தான். முன் சீட்டில், வேலையாள் ஒருவனும் ஏறிக் கொண்டான்

"ஆறுமுகத்தை நல்லாப் பார்த்துக்க. நான் இல்லாம ஏங்கிப் போயிடும், பாவம்."

முதலாளியம்மாவை ரயிலில் ஏற்றிவிட்டு, திரும்பி வரும் வழியில் கேட்டான், துரை.

"அண்ணே, இந்த நாய் பேரு நிஜமாவே ஆறுமுகமா?"

"ஆமாங்க. அம்மாவுக்கு முருகன் மேலே பக்தி அதிகம்."

வீடு வந்ததும், காரை நிறுத்திவிட்டு, வெறுப்புடன் அந்த நாயை நோக்கினான். அதுவும் இவனை விரோதமாய்ப் பார்ப்பது போலிருந்தது.

"போடா டேய் ஆறு முகம்" என்று உதட்டை அசைக்காமல் திட்டினான்.

நாயும் 'லொள்' என்றது பளபளத்த கண்களுடன்.

"டிரைவரண்ணே, உங்களுக்கு நாய் என்றால் பிடிக்காதா? ஏன் இப்படி முறைக்கறீங்க இதைப் பார்த்து" என்று கேட்டான் வேலையாள்.

"அப்படியெல்லாம் இல்லைங்க. எங்க வீட்டிலேயே கூட நாய வளர்த்திருக்கோம். என்னவோ, இதை எனக்குப் பிடிக்கலே. போடா, லொள்" என்று பரிகாசமாய்ச் சிரித்தான் துரை.

அடுத்த நாள் மாலை யூனியன் கூட்டம் இருப்பதாகத் தகவல் வந்தது. துரை சென்றான்.

'பஞ்சு மில்லை மூடப் போறாராம் முதலாளி' என்ற வதந்தி எங்கும் பரவி, தொழிலாளர்களைக் கலவரப்படுத்தியது.

"தோழர்களே, 'செய் அல்லது செத்து மடி' என்பதே நமது கொள்கை. முதலாளித்துவத்தை எதிர்ப்பதில் ஓரணியாய் நிற்போம்."

தொழிற்சங்கத் தலைவர் அடுக்குமொழி வசனமாய் பேசிக் கொண்டே போனார். அவரது முகப் பவுடர் பூச்சும், தலை 'டை'யும், கழுத்து தங்கச் சங்கிலியும், பளபள சட்டையும், வெள்ளை வேட்டியும் கண்டு, துரைக்குள் பொசுபொசுவென கோபம் ஏறியது.

தொழிலாளர்கள் கஞ்சிக்கே வழி இல்லாமல் திண்டாட, இந்த ஆளுக்கு மட்டும் காசு எப்படிக் கிடைக்கிறது? செழிப்பு கொஞ்சம் கூடக் குறையவில்லையே!

இந்த மில்லை மூடும் முதலாளியின் எண்ணத்தைச் செயலாக்கும் கருவியோ இவன். ஐயோ, மில்லை மூடிவிட்டால், வாழ்க்கை என்னாவது? நம்பிக்கை சிதறும் பதற்ற நிலைக்குத் தள்ளப் பட்டான் துரை.

"நிறுத்து உன் பசப்புப் பேச்சை. நாலு ரூபாய் காசுக்கு நாயாய் அலையறோம் நாங்க. ஏதோ கௌரவமாய் கிடைச்ச சம்பளத்தை வைச்சு வாழ்ந்துக்கிட்டிருந்தோம். உன் பேச்சைக் கேட்டு, வேலை நிறுத்தத்திலே இறங்கி, இப்ப கண்ட இடத்திலேயும் அவமானப்படறோம். போதும் இந்த அவல நிலை. ஸ்டிரைக் ஒழிக. வேலைக்குத் திரும்புவோம், வாங்க"

துரை எழுந்து ஆவேசமாய்க் குறுக்கிட்டுக் கத்தவும், அந்த இடமே அமைதியானது.

"முதலாளியின் கைக்கூலிடா இவன். அடிங்கடா இவனை!" என்று யூனியன் தலைவர் ஆணையிட, நாலு பேர் எங்கிருந்தோ ஓடி வந்தனர்.

துரையை அடித்துத் தரதரவென தலைவரிடம் இழுத்துச் சென்றனர். அவன் காதருகில் குனிந்து, தலைவர் கொக்கரித்தார்.

"பிறவியிலேயே நான் தலைவன்டா. என்னிடமா வாலை ஆட்டறே? நான் யாரு? ஆறுமுகம்!"

"கைல காசில்லாம ஏன் கைரேகை பார்த்தே?"

"இதையே உன் ஜோசியத்தாலே கண்டு பிடிக்க முடியல. நீ எப்படி என் எதிர்காலத்தை கணித்துச் சொல்லுவே?"



- அ.ராதா


உற்சாகமூட்டும்
உன்னத காபி – சிக்கரி கலவை
புதிய பேக்கில்
ஜோஸப்®
காபி
காபி : 80%
சிக்கரி : 20%
JOSEPH
GOOD MORNING
Premium
Coffee Chicory Blend
காபி : 55%
சிக்கரி : 45%
JOSEPH
Rising Sun
COFFEE CHICORY BLEND
50g
ஜோசப் காபி : 164, W. B. ரோடு, திருச்சி – 620 002 Ph : 2708255
JC - 168

தமிழ்ப் பதிப்புலகம் இன்றைக்கு ஆரோக்கியமான திசையில் பயணித்துக் கொண்டிருக்கிறது. டெலிவிஷனின் தாக்கம் அதிகமாக இருந்தபோதிலும்கூட மக்களிடம் படிக்கும் ஆர்வம் அதிகரித்திருக்கிறது. ஆண்டுதோறும் சென்னை புத்தகக் கண்காட்சிக்கு லட்சக்கணக்கில் வாசகர்கள் வருகிறார்கள். தமிழ்நாட்டின் பல்வேறு நகரங்களிலும் புத்தகக் கண்காட்சிகள் வெற்றிகரமாய் நடத்தப்படுகின்றன.

தமிழில் புத்தகங்களை வெளியிடும் பதிப்பகங்களின் எண்ணிக்கை சற்றேறக் குறைய ஐயாயிரம் என்றும் இவற்றில் முன்னணியிலுள்ள ஐம்பது பதிப்பகங்கள் தமிழ்ப் புத்தகச் சந்தையின் எண்பது சதவிகித வியாபாரத்தைப் பிடித்திருக்கின்றன என்பதும் செய்தி. பதிப்பகத் தொழிலில் ஏமாற்றி விட்டார்கள் என்று சொல்ல முடியாது. எனக்கு ராயல்டி அளித்திருக்கிறார்கள். சில சமயங்களில், ராயல்டியில் வருமான வரி பிடித்தம்கூடச் செய்திருக்கிறார்கள். ஆனால் எத்தனை பதிப்பு போட்டார்கள்? எத்தனை பிரதிகள் விற்றார்கள் என்று கணக்குக் கொடுத்ததில்லை.

அந்தக் காலத்தில் வாசகர் வட்டம் தான் பதிப்பித்த நூல்களின் விற்பனை விவரத்தைக் குறிப்பிட்டு, ராயல்டி அனுப்பி வைப்பார்கள். இன்றும் சில பதிப்பாளர்கள் விற்பனை விவர ஸ்டேட்மெண்ட் அனுப்பி வைக்கிறார்கள். ஆனால், இந்த விஷயத்தில் சந்தேகத்துக்கு இடமில்லாமல் கணக்குகளைப் பாரமரிப்பது, அதனை எழுத்தாளருக்குத் தெரிவிப்

# எழுத்தாளர்களை ஏமாற்றுகின்றனவா பதிப்பகங்கள்?



நஷ்டம் ஏற்பட்டு, மூடிய பதிப்பகத்தினர் சமீப காலத்தில் எவருமில்லை. இப்படிப்பட்ட வளமான நிலை இருந்தபோதிலும், "எழுதின புத்தகங்களுக்கு ஒழுங்காக ராயல்டி வரவில்லை" "பதிப்பகத்தினர் எல்லாம் எழுத்தாளர்களை ஏமாற்றுகிறார்கள்" எனகிற பொத்தம் பொதுவான குற்றச்சாட்டுகள் தொடர்ந்து சொல்லப்பட்டு வருகின்றன. உண்மை நிலவரம்தான் என்ன?

"என்னைப் பொறுத்தவரை ராயல்டி விஷயத்தில் பதிப்பாளர்கள் என்னை

பது போன்ற கடமைகளிலிருந்து பதிப்பாளர்கள் தவறுகிறார்கள்" என்கிறார் எழுத்தாளர் சுஜாதா.

"எனக்குக் கறாராக, ராயல்டி கேட்டுப் பழக்கமில்லை. இத்தனை வருடமும் அவர்களாக ஏதோ ஒரு கணக்கு வைத்துக்கொண்டு, நான் முழுநேர எழுத்தாளன் என்பதைப் புரிந்துகொண்டு அவ்வப்போது ராயல்டியாகப் பணம் கொடுத்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். பதிப்பாளர்களுக்கும் பிரச்னைகள் உண்டில்லையா? அவர்



களை அனுசரித்துப் போக வேண்டும்'' என்கிறார் அசோகமித்ரன்.

''உங்களுடைய மென்மையான குணத்தைப் பதிப்பாளர்கள் முறைகேடாகப் பயன்படுத்த எப்படி அனுமதிக்கலாம்?'' என்று தார்மீகக் கோபத்துடன் கேட்டால், ''நான் ஒன்றும் பரபரப்பாக விற்றுத் தீர்க்கிற ரக புத்தகங்களை எழுதும் எழுத்தாளனில்லையே! தமிழ்ப் பதிப்பாளர்களை மட்டும் ஏன் நான் குறை சொல்லணும்? எனது படைப்புகளை இதர இந்திய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட போதும்தான் ராயல்டி சரியானபடி தரப்படவில்லை. நானே ஆங்கிலத்திலும் எழுதியிருக்கிறேன். லண்டனில் வெளியிட்டிருக்கிறார்கள். அதே கதைதான்! எல்லார்கிட்டேயும் போய் சண்டை போட்டுக் கொண்டிருக்க முடியுமா? அப்புறம் எழுத்தாளன் என்கிற பெயர் போய், சண்டைக்காரன் என்கிற பெயர்தான் மிஞ்சும்'' என்று வெகு யதார்த்தமான தொனியில் விளக்கம் தருகிறார் அசோகமித்ரன்.

''எனக்குத் தெரிந்த ஒரு எழுத்தாளர், பதிப்பாளரிடம் ராயல்டி கேட்டபோது, 'உங்க புத்தகம் விக்கவே இல்லை! அப்படியே குடோன்ல அடுக்கி வெச்சிருக்கேன்' என்று சொல்லிவிட்டார். எழுத்தாளரின் நண்பர், அதே பதிப்பகத்தில், அதே புத்தகத்தை வாங்கச் சென்றபோது, 'ஸ்டாக் இல்லை' என்று சொல்லி இருக்கிறார் அதே பதிப்பாளர். மொத்தத்தில், ராயல்டி தருகிறார்கள்; ஆனால் விற்பனைக்கும் அந்தத் தொகைக்கும் என்ன சம்பந்தம் என்பது அந்தந்த பதிப்பாளர்களுக்கே வெளிச்சம்'' என்று கூறும் திருப்பூர் கிருஷ்ணன், சமீபகாலமாகத் தமது எழுத்துகளை தாமே பதிப்பித்து வெளியிட்டு வருகிறார்.

''ராயல்டி தருவதை விடுங்கள். இப்போது பதிப்பகத் துறையில் ஒரு வைரஸ் புகுந்திருக்கிறது. எழுத்தாளரிடமே பணத்தை வாங்கிக் கொண்டு புத்தகம் போடுகிற பழக்கம். இது எழுத்தாளர்களுக்கே அவமானம். நானும் சொந்தப் பதிப்பகம் நடத்தி இருக்கிறேன். அந்த அனுபவத்தில் சொல்லுகிறேன்... எழுத்தாளருக்கு ராயல்டி கொடுத்தாலும், பதிப்பாளர்களுக்கு 33% லாபம் கிடைக்கும்.'' - இது ஜா.ரா.சுந்தரேசனின் கருத்து.

''பதிப்பாளர்கள் புத்தகம் அச்சிடுவதற்குத் தேவையான காகிதம் சப்ளை


அசோகமித்ரன்


* சுஜாதா


* திருப்பூர் கிருஷ்ணன்


* ஜா.ரா.சு.


* பத்ரி சேஷாத்ரி

செய்பவருக்கு உடனே பணத்தைக் கொடுத்து விடுகிறார்கள். கம்ப்யூட்டர் அச்சுக்கோப்பு கம்பெனிக்குப் பணம் தர இழுத்தடிப்பதில்லை.




அச்சகத்துக்குப் பணம் தராமல் இழுத்தடிப்ப தில்லை. இவர்களுக் கெல்லாம், 'ஆயிரம் பிரதிகள் அச்சடித் திருக்கிறேன். இவை

விற்றுத் தீர்ந்தவுடன் பணம் கொடுத்து விடுகிறேன்' என்று சொல்லுவதில்லை. ஆனால், எழுத்தாளர்களுக்கு மட்டும், புத்தகம் விற்றதும்தான் ராயல்டி என்பது என்ன நியாயம்?" என்று கேள்வி எழுப்புகிறார் ஜேஎஸ். ராகவன். புத்தகத்தின் அட்டையில் உள்ள படங்கள் வரையும் ஓவியருக்குக்கூட பணம் கொடுத்துவிட்டுத்தான் படங்களை வாங்கிக் கொண்டு போகிறார்கள் என்பதையும் அவர் சுட்டிக் காட்டத் தவறவில்லை.

**ரா**யல்டி விஷயத்தில் மட்டுமில்லாமல், வேறு முறைகளிலும் எழுத்தாளர்கள் ஏமாற்றப்படுவதுண்டு. "என்னுடைய கர்நாடக இசை மற்றும் சில புத்தகங்களை, அப்படியே காப்பியடித்து, வேறு பதிப்பகம் ஒன்று ஆசிரியர் குழு என்ற பெயரில் பல வருடங்களுக்கு முன்பு வெளியிட்டது. கர்நாடக இசை குறித்து ஆய்வு செய்து நான் எழுதியிருந்தாலும்கூட, அது ஒரு பொதுவான சப்ஜெக்ட் என்பதால் நான் சட்டப்படி ஒன்றும் செய்ய வில்லை. எனது புத்தகத்தினை வெளியிட்ட பதிப்பகத்துக்கும் கோர்ட்டுக்குப் போவதில் ஆர்வமில்லை" என்கிறார் எழுத்தாளர் அறந்தை மணியன்.

தமிழறிஞர் அ.ச.ஞா. எழுதிய 'ராவணன் குறித்த நூலை அப்படியே பாரதிதாசன் எழுதியதாக வேறு ஒரு பிரசுரம் வெளியிட்டது குறித்து சில மாதங்களுக்கு முன்பு கல்கியில் வெளியான கட்டுரை இங்கே நினைவு கூரத்தக்கது.

**இ**து குறித்தெல்லாம் பதிப்பாளர்கள் என்ன சொல்கிறார்கள்?

"பெரும்பாலான பதிப்பகங்கள் எழுத்தாளர்களுக்கு ராயல்டி என்று பணம் கொடுக்கிறார்களேயொழிய விற்பனை குறித்த சரியான விவரங்களைக் கொடுப்ப தில்லை. ஆனால், புதிய சப்ஜெக்ட்களில், புதிய எழுத்தாளர்களை உருவாக்கி, புத்தகங்களை வெளியிட வேண்டிய கட்டாயம் இப்போது ஏற்பட்டிருக்கிறது. பதிப்பகங்கள் வெளிப்படையாக நடந்துகொண்டு, சரியானபடி ராயல்டி தந்தால் மட்டுமே இது சாத்தியம். இதை அனைத்துத் தரப்பினரும் புரிந்துகொள்ள வேண்டும்" என்கிறார் கிழக்கு பதிப்பகத்தின் பத்ரி சேஷாத்ரி.

**கா**ந்தளகம் பதிப்பகத்தை நடத்திவரும் மறவன்புலவு சச்சிதானந்தமோ,

"இதுபோன்ற பிரச்னைகளுக்குக் காரணம், பதிப்பாளர்களுடன், எழுத்தாளர்கள், எழுத்து மூலமாய் எந்தவித ஒப்பந்தமும் செய்து கொள்ளாமல், நட்புரீதியில் எழுத்தைப் பிரசுரிக்க அனுமதிப்பதுதான்.

ஒரு சில பதிப்பாளர்கள், எழுத்தாளர்களுக்குச் சேர வேண்டிய ராயல்டியை ஒழுங்காகத் தருவதில்லை. இதனால், நல்ல நேர்மையான பதிப்பாளர்களின் பெயரும் கெடுகிறது. இது கண்டிக்கத்தக்கது" என்கிறார் கவலையோடு.

- நமது நிருபர்



Om Sai Sri Sai Jai Jai sai

# SHRI SAI CHARAN TRUST

140, First Floor, Seshan Complex, Anna Salai, Saidapet,
Chennai - 15. Ph : 55638612. Mobile : 9444376887
Email : sainov23@hotmail.com
http://saidarbarusa.org/saicharan

அன்புடனும், பக்தியுடனும் யாரொருவர் எனக்கு ஒரு இலை, ஒரு மலர், ஒரு பழம் அல்லது தண்ணீரை சமர்ப்பிகிறார்களோ அந்தத் தூய்மையான தன்னடக்கமுடையவருடைய அன்புக் காணிக்கையானது ஆர்வத்துடனும், தாமதமின்றியும் என்னால் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

**- பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், பகவத் கீதை**

**பேரன்புடைய சாயி பக்தர்களே,**

பகவான் ஷீரடி சாயி பாபாவின் மகத்தான கருணையாலும் நல் ஆசியாலும், மேற்படி அறக்கட்டளையினால் ஷீரடி சாயி பாபாவின் ஆலயம் (உத்திர ஷீரடி) மற்றும் இலவச மருத்துவமனை ஒன்றையும் சென்னை திருச்சிராப்பள்ளி மார்க்கத்தில் (சென்னையிலிருந்து 89 கி.மீ. தொலைவில்) மதுராந்தகம் அருகில் உள்ள நேத்தப்பாக்கம் என்ற கிராமத்தில் ரூ.50 இலட்சம் அளவில் கட்ட இருக்கின்றோம்.

மேற்படி ஆலய கட்டுமான வேலையினை வருகின்ற பிப்ரவரி மாதம் 2ம் தேதி, 2006 ஆரம்பிக்க திட்டமிடப்பட்டுள்ளது.

தனது மட்டற்ற அருளை மனித சமுதாயத்தின்பால் ஜாதி, மத, இன வேறுபாடின்றி வழங்கி வரும் பகவான் **ஸ்ரீ ஷீரடி சாயி பாபாவின்** ஆலயத் திருப்பணிக்கு சாயி பக்தர்களாகிய தாங்கள் தாராளமாக நன்கொடைகளை தர வேண்டுகிறோம். பணமாக உதவும் அன்பர்கள் தவிர, மேற்படி கட்டட நிர்மாணத்திற்கு பொருட்களாக தர விரும்புவர்கள் அவ்விவரத்தை அறக்கட்டளை யினரிடம் தெரிவிக்க கோருகிறோம். இவ்விதம் வழங்கப்படும் உதவிகளுக்கு தனிப்பட்ட ரசீதுகள் வழங்கப்படும்.

நன்கொடைகள் 'Account-Payee' Crossed Cheque / Demand Draft-ஆக **"SHRI SAI CHARAN TRUST"** சென்னை என்ற பெயரில் எடுக்கப்பட்டு மேற்கண்ட முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

ஜெய் சாயிராம்

# தலைமுறைகள்

"ஒன்பது மணிக்கு அலுவலகம். நீங்கள் எட்டுமணிக்கு வந்துவிடுங்கள்" என்றார் தீபா ஜெயகாந்தன். பரந்த மனித நேயத்தை இலக்கியம் வழியே பதியம் போட்ட ஆளுமை மிக்க எழுத்தாளர் ஜே.கே.யின் கடைக்குட்டிப் பெண். தொலைபேசியில் கேட்ட குரலைப் போலவே தோழமையான தோற்றம். பேட்டிக்கு முன்பு "டீயா? காபியா?" எனக் கேட்டு நிமிடங்களில் தேநீர் கோப்பைகளோடு திரும்பி வந்தவர், சூடும் சுவையுமாய்ப் பேச ஆரம்பிக்கிறார்.

"ஜெயகாந்தனின் மகளாகப் பிறந்ததே ஒரு கொடுப்பினை என்று சொல்ல வேண்டும். அம்மா பள்ளி ஆசிரியை. 'மற்ற அப்பாக்களெல்லாம் ஆபீஸ் போறாங்க. நம்ம அப்பா மட்டும் வீட்டில் இருக்காங்களே...' என்று அம்மாவிடம் கேட்டேன். சிறுவயதில் என் கேள்விக்கு அம்மா சொன்ன பதில், 'உங்க அப்பா ஒரு எழுத்தாளர்.' ஆனால் எழுத்து என்றால் என்ன என்று எனக்குப் புரிய கொஞ்சம் வயதானது. அப்பா, அம்மா, அக்கா என எல்லோரிடமும் கதை கேட்டு வளர்ந்தவள். அப்பா எழுதும் கதைகள் எப்படியிருக்கும் என்று எனக்குத் தெரியாது. பள்ளி நாட்களில் அப்பாவின் கதையைப் படிக்க வேண்டும் என்ற உந்துதல். அம்புலிமாமா புத்தகங்களில் நாம் படித்த கதை போல அப்பாவின் கதை இருக்காது என்று தெரியும். மாறாக அவர் எழுதிய கதை நமக்குப் புரியுமா என்றொரு தயக்கம். அப்போது பல எழுத்தாளர்களின் கதைகளோடு அப்பாவுடைய ஒரு கதையும் இடம் பெற்றிருந்த சிறுகதைத் தொகுப்பொன்று என் கைகளில் கிடைத்தது. அதில் 'பொம்மை' என்ற அப்பாவின் கதை இடம் பெற்றிருந்தது. தலைப்பைப் பார்த்ததும் இது நம்மைப் போன்ற சிறுவர்களுக்கான கதை என்றெண்ணி படிக்க ஆரம்பித்தேன். முதல் வாசிப்பிலேயே பளிச்சென்று புரிந்தது. மிகவும் சோகமான முடிவு கொண்ட கதை. அந்தக் கதை எனக்குப் பிடித்தது. அன்றிரவு முழுக்க அந்தக் கதை பற்றிய சிந்தனையே ஓடிக்கொண்டிருந்தது.

அதன் பிறகு அப்பாவின் கதைகளை ஒரு நேசத்தோடு வாசித்திருக்கிறேன். இன்னும் கொஞ்சம் பெரியவளான பிறகு அவரது கட்டுரைகளையும் படிக்க ஆரம்பித்தேன். அவரது எழுத்துக்கள் எல்லாவற்றையும் மொத்தமாய் வாசித்துவிட்டேன் என்று சொல்லிவிட முடியாது. வாசித்த வரையில் அல்லது மீண்டும் மறுவாசிப்பு செய்கிறபோதெல்லாம், நம் விரல் பிடித்து அழைத்துப் போய், 'இதுதான் உலகம், இவர்கள்தான் மனிதர்கள், இதுதான் மனிதநேயம்' என்று தாய்மையின் பரிவோடு கற்றுக் கொடுக்கிற நவீன எழுத்து அப்பாவுடையது.

உயர்நிலைப் பள்ளியில் பயில்கிறபோது அப்பாவின் பல கதைகள் எனக்குள் ஆச்சர்யத்தையும், கொஞ்சம் அதிர்ச்சியையும் ஏற்படுத்தின என்று சொல்ல

தீபா ஜெயகாந்தன்

# பிரபலங்களின் வாரிசுகள் பேசும் பகுதி

வேண்டும். உதாரணத்துக்கு 'போர்வை' என்றொரு கதை. பாலுணர்வின் பிடியில் சிக்கித் திணறும் ஒரு டீன் ஏஜ் இளைஞன், பெண்ணின் நிர்வாணத்தை மனத்தில் அசைபோட்டு உணர்ச்சிக் கொந்தளிப்புக்கு ஆளாகிக் கிடக்கிறான். அச்சமயம் அவனது வீட்டின் அருகே நிர்வாணமாய் நின்று புலம்பிக் கொண்டிருக்கும் மன நோய்ப் பெண்ணொருத்தியைக் கண்டவுடன் அவனுக்குள் திடீர் மாற்றம். சகோதரபாசத்துடன் தான் அணிந்திருக்கும் வேஷ்டியை உருவி அவளைப் பரிவுடன் போர்த்தி விடுகிறான். 'அக்னிப் பிரவேசம்' கதையில் தவறுக்கு ஆளான தமது டீன்ஏஜ் மகளை பரிவோடு அணைத்து சுத்திகரிக்கும் பாசமான தாய். இது போன்ற கதைகளில் வரும் பாத்திரங்களும், அவர்களின் செய்கைகளும் முதலில் எனக்கு அதிர்ச்சியை ஏற்படுத்தினாலும், அந்தப் பாத்திரங்களின் மனமாற்றம் எனக்குப் பிடித்தது.

இந்த இடத்தில் இலக்கிய ரசனை குறித்து - அப்பா சொன்ன கருத்தைச் சொல்லியாக வேண்டும். 'இலக்கிய ரசனைக்கும் பள்ளிக்கூடக் கல்விக்கும் சம்பந்தமே இல்லை. வாழ்க்கை நம்மை எந்த அளவு பக்குவப்





* அண்ணா, அப்பா, அம்மா, கணவருடன்...

படுத்தியிருக்கிறது என்பதைப் பொறுத்தே ஒருவரின் இலக்கிய ஈடுபாடும் ரசனையும் அமையும்' இதே கதைகளை நான் கல்லூரியை எட்டிய பிறகு மீண்டும் படித்தபோது அந்தக் கதைகளின் தரமும் வீச்சும் புரிந்தன. அப்பாவின் எழுத்து, காலங் கடந்த நியாயங்களைப் பேசிக் கொண்டிருக்காமல், காலத்துக்கேற்ப மனிதனை உருவாக்குகிறது என்று புரிந்து கொண்டிருக்கிறேன்.

அப்பாவை முரட்டுத்தனமானவர், பிடிவாதக்காரர் என்றெல்லாம் பலரும் சொல்வதைக் கேட்டிருக்கிறேன். ஆனால் பாசிஸப் போக்கை தமது எழுத்து வழியே எதிர்கொள்வதிலும், தோற்றத்திலும் முரட்டுத்தனமானவரே தவிர சொந்த வாழ்க்கையில், அவரை நாங்கள் அப்படிப் பார்த்ததே இல்லை. ஒருபோதும் எங்களைத் தொந்தரவாக நினைத்து கடிந்து கொள்ளாதவர். பின்னாளில் அவரே சொல்லியிருக்கிறார். 'நமது அன்புக்குரிய குழந்தைகளிடம்கூட நமது கோபத்தைத் தவிர்க்க முடியவில்லையெனில் நம்மைவிட முதிர்ச்சி அடையாத குழந்தைகள் உண்டா?

நான் இப்போது கம்ப்யூட்டர் துறையில் டெக்னிக்கல் ரைட்டராகப் பணிபுரிகிறேன். எனது பணிச்சூழலில் அலோய்சியஸ் ஜோசப் என்ற கிறிஸ்துவ இளைஞரைச் சந்தித்தேன். அவர் நல்ல நண்பராக இருந்தார். நட்புக்கும் காதலுக்குமான நூலிழை வேறுபாடு புரிந்தபோது, பரஸ்பரம் காதலை உணர்ந்தோம். அம்மா - அப்பாவிடம் வந்து எங்கள் காதலைச் சொன்னபோது, அவர்கள் கோபப்படவில்லை. அவர்களது சம்மதத்தோடு திருமணம் செய்துகொண்டோம்.

ஜெயகாந்தன் மகளாக என்னை நான் எங்கேயும் காட்டிக் கொண்டதில்லை. அது கண்டிப்பாகத் தேவையில்லை என்பது மட்டுமல்ல. தவிர்க்கப்பட வேண்டியதும் என நினைப்பவள் நான்.

அப்பாவின் படைப்புகளுக்கு இன்று வாசகியாக இருப்பதே உயர்ந்த ஸ்தானம் என்பது என் எண்ணம். அவரைப் போல நாமும் எழுத வேண்டும், இலக்கியம் படைக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியதே இல்லை. படைப்பாளிகள் வாரிசுகளாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அண்ணன் ஜெயசிம்மன் சிறுகதை, மொழிபெயர்ப்பு, ஊடகம் போன்ற துறைகளில் இயங்குகிறார். அக்கா காதம்பரி, அம்மாவைப் போலவே ஆசிரியப் பணியைத் தேர்ந்து எடுத்துக் கொண்டு விட்டார். அப்பா சிந்திப்பது போலவே அக்காவின் சிந்தனையும் பேச்சும் விசாலமாக இருக்கும். ஆனால் அக்கா எழுதத் துணியவில்லை.

இடதுசாரி கம்யூனிஸ்ட்களின் ஆட்சி இந்தியாவில் ஏற்பட வேண்டும். அது நிகழ்ந்தால் இந்தியா மறுமலர்ச்சியும் சுபிட்சமும் அடையும். உலகமயமாக்கலில் இருந்தும் நம்மை விடுவித்துக் கொள்ளலாம்'' என்று அழுத்தமான கருத்தை முன் வைக்கும் தீபா ஜெயகாந்தன், ஒரு பொறியியல் பட்டதாரி.

சந்திப்பு: **ஆர்.சி. ஜெயந்தன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# கண்ட நாள் முதல்!

**ரம்யா நாகேஸ்வரன்**

குளிர்... குளிர்... இந்த ஒரு செய்தி மட்டும் மூளைக்குச் சென்றது. இலவச இணைப்பாய் 'இருட்டு'. மாலை மணி ஆறு தான் என்று சத்தியம் செய்தால்கூட யாரும் நம்பமாட்டார்கள். நட்டநடு ராத்திரி போன்ற அடர் இருள். ஐந்து வருட ஸ்விஸ் வாழ்க்கையில் பழகியதுதான். மாற்றம் சீதோஷ்ண நிலையில் இல்லை. என் உடம் பில்தான். இந்த முறை குளிரும் இருட்டும் சற்று மிகையாகத் தெரிந்தது. நான் திருமணமாகி ஐந்து வருடங்களுக்குப் பிறகு கருவுற்றிருக்கிறேன் என்பதோ, தற்பொ ழுது அதிகமாகச் சோர்வுற்றிருக்கிறேன் என்பதோ ஸ்விஸ் குளிருக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது நியாய மில்லை.

அலுவலகத்திலிருந்து ட்ரெயின் பிடித்து வீட்டுக்குச் செல்ல வேண்டும். சூரிக் நகரில் வரு டத்துக்கு எட்டு மாதங் கள் மழை அல்லது குளிர்தான். ஒரு மூன்று, நான்கு மாதங்கள்தான் வெயிலடிக்கும். ஒரு மாதமாவது இந்தக் குளிரிலிருந்து தப்பிக்க நானும் என் கணவரும் கவனமாக வருட ஆரம் பத்திலிருந்தே திட்டமிடுவோம். முதலில் இந்த வருடம் இருவருக்கும் அலுவல கத்தில் எவ்வளவு விடுமுறை நாட்கள் இருக்கின்றன என்று பார்ப்போம். இரு வருக்குமே பன்னாட்டு வங்கிகளில் வேலை. அதுவும் என்னுடன் வேலை செய்பவர் களில் பெரும்பாலோர் வெவ்வேறு நாடுகளைச் சேர்ந்தவர்கள். ஆண்டிறுதி விடுமுறைக்கு அனைவரும் தங்கள் நாடு களுக்குச் செல்ல விரும்புவார்கள். அதனால், சில மாதங்கள் முன்னதாகவே அவர்களுடன் கலந்து பேசி யார் எப் பொழுது செல்கிறார்கள் என்று பார்த்து நாம் அதற்கேற்றபடி விடுமுறையில் செல்ல வேண்டும். எல்லோரும் ஒரே சமயத்தில் செல்வதை எங்களுடைய அமெரிக்க பாஸ் விரும்பமாட்டார். நாங்கள் இருவரும் ஜூன் மாதமே எங்கள் இஷ்ட தேதிகளை முடிவு செய்து, அலுவலகத்தில் கலந்து பேசி, ஜூலைக்குள் டிக்கெட் புக் செய்து விடுவோம். அதைச் செய்துவிட்டால் பாதி தூரம் இந்தியா சென்றது போல் ஒரு திருப்தி. அப்பொழுதிலிருந்தே எந்த நண்பரிடம் பேசினாலும், "டிசம்பர் 5ஆம் தேதி இந்தியா போறோம்" என்று சொல்ல ஆரம்பித்து விடுவோம், ஏதோ அடுத்த வாரமே செல்வது போல! அவர்களும், "அப்படியா! எந்த ஏர்லைன்ஸ்? நாங்களும் புக் பண்ண வேண்டியதுதான். இந்த வீக்-எண்ட் பண்ணிடுவோம்" என்பார்கள்.

இப்படி கவனமாகத் திட்டமிட்ட விடுமுறை முடிந்து இந்தியாவிலிருந்து சூரிக் திரும்பும்பொழுது எனக்கு மிகுந்த மனச்சோர்வு ஏற்படும். ஊரில் வீட்டார், நண்பர்களுடன் அரட்டை, அம்மாவின் ஃபில்டர் காபி, சரவண பவனில் தோசை, பாண்டி பஜார் ஷாப்பிங், சீசன் கச்சேரிகள் என்று நேரம் போவதே தெரியாது. வீட்டிற்கு வந்தால் ஜெட்லாக் புண்ணியத் தில் தூக்கம் வராது. வந்த சில நாட்கள் முகத்தில் அறைவது போல் தெரிவது இங்குள்ள குளிர் மற்றும் நிசப்தம். 'எல் லோரும் உயிருடன்தான் இருக்கிறார் களா?' என்று ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள சிறிது நேரம் ஜன்னலருகே நிற்பேன். குளிர் காலம் முடியாததால் நடமாட்டம் கம்மியாகத்தான் இருக்கும். கண்ணில் தென்படும் ஓரிருவரும் தலையைக் குனிந்து கொண்டு, நீளமான குளிர் கோட்டுக்குள் கைகளை மறைத்துக் கொண்டு, வேகமாக நடந்து சென்று கொண்டிருப்பார்கள். அல்லது விர்... விர்ரென்று கார்கள்தான் தலைதெறிக்கச் சென்று கொண்டிருக்கும்.

இந்நாட்டு மக்களின் மனநிலைக்கும் சீதோஷ்ணத்திற்கும் நெருங்கிய தொடர் புண்டு. சூரியன் வந்துவிட்டால் போதும்! அனைவரையும் ஒரு உற்சாகம் தொற்றிக் கொள்ளும். எதிரே வருபவர்களைப் பார்த்துப் புன்னகைப்பார்கள். குழந்தை களைக் கவனிப்பார்கள். ட்ராம் நிறுத்தங் களில் சிறிது பேசக் கூட செய்வார்கள். மணிக்கணக்கில் நதிக்கரையில் அமர்ந் திருப்பார்கள். கும்பல் கும்பலாக சைக் கிளில் நீண்ட தூரம் செல்வார்கள் அல்லது கால்களில் சக்கரத்தைக் கட்டிக் கொண்டு வேகமாக ஓடிக் கொண்டிருப்பார்கள். இரவு ஒன்பது மணி வரை வெளிச்சம் இருக்கும். ராத்திரி பன்னிரண்டு மணி வரை ரோட்டில் ஏதாவது நடமாட்டம் இருந்துகொண்டே இருக்கும். இதுவே குளிர் காலம் வந்துவிட்டால் நேர் எதிர். யாரும் ஒருத்தரோடு ஒருத்தர் பேசிக் கொள் ளாமல் விரைந்து வீட்டைச் சென்று அடைவதிலேயே முனைப்பாக இருப் பார்கள். தங்கள் உடம்பை ஒடுக்கிக் கொண்டு, குளிர் கோட்டுக்குள் ஒளிந்து கொண்டு, உருவமும், உணர்வுகளும் முற்றிலும் தலைகீழாக மாறி விடும்.

நாங்கள் இப்பொழுது தான் எங்கள் வருடாந்திர விடுமுறையை முடித்துக் கொண்டு இந்தியாவிலிருந்து திரும்பி னோம். வந்த சில நாட்களிலேயே ஆறு வார கர்ப்பம் உறுதியானது. எல்லா விடு முறையும் எடுத்துக் கொண்டு விட்டதால் அலுவலகத்துக்குக் கண்டிப்பாகச்



செல்ல வேண்டும். கூட வேலை செய்யும் ஸ்பானியப் பெண்மணி அரியானா விடுமுறையில் சென்று இருக்கிறாள். நான் இந்தியாவில் இருந்த பொழுது என் அத்தியாவசிய வேலைகளையும் சேர்த்துச் செய்தவள். இப்பொழுது என் முறை.

மசக்கை என்பதை சினிமாவில் மட்டுமே பார்த்திருக்கிறேன். ஓரிரு முறை லேசாக வாந்தி எடுத்துவிட்டு, வெட்கத்துடன் புளியைத் தின்றுவிட்டு ஓய்வெடுக்கும் ஹீரோயினைத்தான் எனக்குத் தெரியும். என் அதிர்ஷ்டம் மசக்கை கண்ட நாள் முதல் ஒவ்வொரு மாலையும் தலை சுற்றலும், வாந்தியும் தவறாமல் வந்து எனக்கு மிகுந்த தொல்லை கொடுத்தது. சமயலறைக்குள் நுழையவே முடியவில்லை. ஏதோ ஒரு வாசம் வயிற்றைப் பிரட்டியது. ஊரிலிருந்து வந்ததுமே கணவர் லண்டனுக்குச் செல்ல வேண்டிய சூழ்நிலை.





தெருவில் நுழைந்தவுடன் வீடு தெரிந்தது. இருட்டாக இருந்தது. வழக்கம் போல் வீட்டின் சொந்தக்காரரும் ஊரில் இல்லை போலிருக்கிறது. நாங்கள் இருந்தது ஒரு தனி வீடு. வீட்டின் சொந்தக்காரர் கீழே இருந்தார். நாங்கள் மாடியில் இருந்தோம். அவர் விவாகரத்தானவர். அவரின் மகன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவ்வப்பொழுது வருவான். அவன் நன்றாகவே ஆங்கிலம் பேசுவான். ஆனால், அவரோ ஸ்விஸ் - ஜெர்மன் மட்டும்தான் பேசுவார். உற்சாகமான மனிதர். அவர் மொழியை எங்களால் சரளமாகப் பேச முடியாவிட்டாலும் எங்களைப் பார்க்கும் பொழுதெல்லாம் ஒரு ஐந்து நிமிடம் பேசிவிட்டுத்தான் நகர்வார். ஆனால், பாதி நாட்கள் வீட்டிலேயே இருக்க மாட்டார்.

வீட்டிற்குள் நுழைந்து வேகமாக விளக்குகளுக்கும், அறை ஹீட்டர்களுக்கும் உயிரூட்டினேன். நிசப்தத்தைப் போக்க டி.வியை உயிர்ப்பித்தேன். கணவர் ஊரில் இல்லாத நாட்களில் அது ஒன்றுதான் எனக்குத் துணை.

ஒரு கப் பாலைச் சூடப் பண்ணிக்கொண்டு டி.வி முன் அமர்ந்தேன். இதுவும் ஒரு மணி நேரம்கூட வயிற்றில் தங்காது. மத்தியான வேலைகளில்தான் சிறிது சாப்பிட முடிந்தது. ஆனால் வீட்டிலிருந்து ஏதாவது செய்துகொண்டு செல்ல பாதி நாள் நேரம் இருப்பதில்லை. எழுந்திருக்கும்போதே மிகவும் சோர்வாக வேறு இருந்ததால் சமையல் செய்யவே முடியவில்லை. அம்மாவின் ஞாபகம் திரும்பத் திரும்ப வந்தது. அம்மாவின் கையால் சூடாகச் சமைத்து எடுத்துக் கொண்டு போனால் எப்படி இருக்கும்? அலுவலகத்தின் அருகே நல்ல வெஜிடேரியன் உணவு என்பது குதிரைக் கொம்பு. அதற்கு ட்ராமில் ஏறி எட்டு ஸ்டாப் தாண்டி இருக்கும் இந்தியக் கடைகள் உள்ள ஏரியாவுக்குச் செல்ல வேண்டும். அதற்கெல்லாம் நேரம் ஏது? குளிரில் செல்ல வேண்டும் என்று நினைத்தாலே வெளியே தலை காட்ட மனசு வராது. அதனால், அலுவலக காண்டீனில் கிடைக்கும் சூப்பும், சாலடுமே பாதி நாட்கள் பகல் உணவு.

'இதெல்லாம் தெரிந்துதானே வெளிநாட்டுக்கு வந்தாய்?' என்று கேட்டது உள் மனம். பெரியதாக யோசித்தோ, திட்டமிட்டோ ஒன்றும் வரவில்லை. மூன்று பெண்கள் இருந்த வீடு. எல்லோரையும் நல்லபடியாகத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்பது மட்டுமே அம்மாவின் தினப்படி கவலை. அவளுடன் ஐந்து

நிமிடம் யார் பேசினாலும், ஆறாவது நிமிடம், "நம்ம வசந்தாவுக்கு நல்ல வரன் இருக்கா?" என்று ஆரம்பித்து விடுவாள். முதலில் வசந்தாவுக்கு மும்பை வரன் அமைந்தது. கூட்டுக் குடும்பம், மாமியார் நல்ல திறமைசாலி. மாமனார் தன் வேலை உண்டு தான் உண்டு என்று இருப்பவர். ஒரு தனியார் நிறுவனத்தில் அத்திம்பேருக்கு வேலை. பெரியதாகப் பிரச்னைகள் எதுவுமில்லாத சராசரி வாழ்க்கை. இரண்டாவது அக்கா விஜயா. அவளுக்கு துபாய் மாப்பிள்ளை. அங்கே அவளும் டீச்சராகப் பணியாற்றுகிறாள். மூன்றாவதாக நான், வனிதா. எனக்கு நல்ல இடம் தானாக வந்தது. என்னுடன் சென்னையில் வேலை பார்த்த ஒரு தோழியின் உறவினர் என் கணவர். என்னை அவருக்கு மிகவும் பிடித்துவிட்டதால் அவரின் குடும்பத்தாரிடம் தீவிரமாக என்னைப் பற்றிச் சொல்லி, திருமணத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டார். என் கணவரின் தந்தை கனடாவில் ஒரு எண்ணெய் நிறுவனத்தில் வேலையில் இருந்தார். அந்தக் காலத்து ஐ.ஐ.டி மாமியார் வீட்டிலிருந்தபடியே ஸாப்ட்வேர் துறையில் கன்ஸல்டண்டாக இருந்தார். இவர் ஒரே மகன். பல நாடுகளில் வளர்ந்திருந்தாலும் இந்தியாவை மிகவும் விரும்புகிறவர். திருமணச் செலவைப் பற்றி கவலைப்படாமல் மிகவும் ஆடம்பரமாக அவர்களே திருமணத்தை நடத்தினார்கள். பிறகு அவரின் அப்பா, அம்மா கனடா சென்று விட்டனர். நாங்கள் சூரிக்கில் தனிக்குடித்தனம் தொடங்கினோம். வருடத்தில் இரண்டு வாரங்கள்தான் எங்களுடன் இருக்க மாமியார், மாமனாருக்கு நேரம் இருந்தது. நாங்கள் கனடா சென்றாலும் இரண்டு வாரங்கள்தான் இருப்போம். கணவருக்கு இந்தியா செல்வதில்தான் அதிக விருப்பம். அங்கே அவரின் உறவினர்கள் நிறையப் பேர் இருந்தார்கள். கும்பகோணம் அருகில் அவர் மாமா வீட்டினரும் பாட்டியும் இருந்தார்கள்.

எல்லோரும் திருமணத்தின்பொழுது வனிதாவுக்குத்தான் நல்ல அதிர்ஷ்டம் என்றார்கள். 'அப்படித்தான் போலிருக்கு' என்று மட்டும் நினைத்துக்கொண்டேன். அவர்களின் அபிப்ராயத்தை ஒப்புக் கொள்வதற்கோ அல்லது மறுத்துப் பேசுவதற்கோ அதுவரை ஏற்பட்டிருந்த என் அனுபவம் போதுமானதாகயில்லை. எனக்கு அதிர்ஷ்டமா இல்லையா என்று முடிவு செய்ய இவர்களிடம் என்ன எதிர்காலத்தைக் காட்டும் கருவியா இருக்கிறது? வாழ்ந்து பார்த்த பிறகுதானே முடிவு செய்ய முடியும்!

யார் எனக்கு அதிர்ஷ்டம் என்று திட்டவட்டமாக நம்பினார்களோ இல்லையோ, நிச்சயமாக வசந்தா அக்கா அதைத் தீவிரமாக நம்பினாள். விஜயாவுக்கு வெளிநாட்டு மாப்பிள்ளை வந்ததே அவளுக்குச் சிறிது வருத்தம். ஆனால், விஜயாவின் புகுந்த வீட்டினர் சற்று வசதி குறைந்தவர்கள். அத்திம்பேர் சம்பாதித்துத் தன் தம்பியைப் படிக்க வைத்துகொண்டு, குடும்பம் நடக்க பணமும் கொடுத்துக் கொண்டிருக்கிறார். விஜயாவும் கண்டிப்பாக வேலைக்குச் செல்ல வேண்டிய சூழ்நிலை. அதனால், தன் ஏமாற்றத்தை வசந்தா அவ்வளவு தூரம் காண்பிக்கவில்லை. எனக்கு வரன் வந்தபொழுது ஒரு பக்கம் உண்மையிலேயே சந்தோஷப்பட்டாலும் இன்னொரு பக்கம் தன் அப்பா - அம்மா தனக்கு அவ்வளவு அக்கறையுடன் வரன் தேடவில்லை என்ற அவளின் நெடுநாள் ஆதங்கத்தை நூறாவது முறையாகச் சொன்னாள். அம்மாவும் நூறாவது முறையாக, "உனக்கு



"உங்க தொகுதியில் வச்சே உங்களைக் கொல்லுவோம்'னு தீவிரவாதிகள் மிரட்டல் விடுத்தும் தலைவர் முகத்துல பயமே இல்லை?"
"அவர்தான் தொகுதி பக்கமே தலைகாட்ட மாட்டாரே."
- அஜித்லால்

என்னடி குறைச்சல்? மாப்பிள்ளை தங்கமானவர். அதுக்கும் மேலே ப்ராப்தம்னு எது இருக்கோ அதுதான் வசந்தா நடக்கும்'' என்று சமாதானமாகச் சொன்னாள்.

**பா**ல் வயிற்றைக் குமட்ட ஆரம்பித்தது. மீண்டும் வாந்தி எடுத்துவிட்டுச் சோர்வாக சோபாவில் சாய்ந்தேன். 'ஒரு வென்னீர் கொடுக்கக்கூட நமக்கு ஆளில்லையே' என்ற சுய பச்சாதாபம் மேலிட லேசாகக் கண்ணில் நீர் கசிந்தது. டி.வியில் இத்தாலிய சித்தி, சித்தப்பா எதற்கோ பெரியதாகச் சிரித்துக் கொண்டிருந்தனர்.

அடுத்தநாள் அலுவலகத்தில் அரியானா வந்துவிட்டாள். சற்று வேலைச் சுமை குறைந்தது. அரியானா புகை பிடிக்கும் பழக்கம் உடையவள். இரண்டு மணி நேரத்திற்கு ஒருமுறை புகை பிடிப்பதற்கு என்று ஒதுக்கி இருந்த அறைக்குள் சென்று பிடித்துவிட்டு வருவாள். இத்தனை நாட்கள் தெரியாத சிகரெட் நாத்தம் மசக்கையினால் பூதாகரமாகத் தெரிந்தது. குமட்டலுடன் இப்பொழுது தலைவலியும் சேர்ந்து கொண்டது. 'எப்படா சனி, ஞாயிறு விடுமுறை வரும்' என்று மனம் ஏங்கியது.

ஒரு வழியாக சனிக்கிழமை வந்தது. கணவரும் இன்றிரவு வந்து விடுவார். சென்னையில் என் அத்தை பேத்தியின் திருமணம். அதற்காக எல்லோரும் வந்திருப்பார்கள். நாங்கள் எப்பொழுதும் மார்கழி மாதம் இந்தியா செல்வதால் திருமணங்களில் கலந்து கொள்ளும் வாய்ப்பே வரவில்லை. சில வாரங்கள் முன்பே திரும்ப வேண்டி இருந்ததால், இதோ இந்தத் திருமணத்தில் கலந்து கொள்ளும் வாய்ப்பையும் இழந்துவிட்டேன். கல்யாண சாப்பாடு சாப்பிட்டுத்தான் எத்தனை வருடங்கள் ஆகிவிட்டன?

அம்மாவிடம் பேசலாம் என்று போன் செய்தேன். மசக்கை பற்றி, என் உடம்பு பற்றி எல்லாம் விசாரித்துவிட்டு, ''வசந்தா வந்திருக்கா கல்யாணத்துக்கு. இந்தா பேசு'' என்றாள். ''ஆங்... வனிதா கங்கிராட்ஸ்... அம்மா சொன்னா போன்ல... உனக்கு என்னடிம்மா? ஸ்விஸ் சீசும், சாக்லேட்டும் சாப்பிட்டு அமுல் பேபி மாதிரி குழந்தையப் பெத்துப்பே. நீ இருக்கிறது சொர்க்க பூமின்னா... எங்களை மாதிரியா தூசியிலேயும், கும்பலிலேயும் அல்லாடிண்டு..'' என்று ஏதேதோ பேசிக் கொண்டே போனாள்.

நான் பெரிதாகச் சிரித்ததைக் கேட்டு 'வனிதா இப்படி வாய்விட்டுச் சிரிக்கற மாதிரி நாம ஒண்ணும் சொல்லலையே' என்று புரியாமல் நிச்சயம் முழித்திருப்பாள் வசந்தா! ○



## அமெரிக்காவிலிருந்து அனிதா...

**டி**சம்பர் சீஸனில் தில்லியிலிருந்தும் மும்பையிலிருந்தும் சென்னைக்கு வந்திறங்கி கலைஞர்கள் சபாக்களில் பாடி வருவது பழைய செய்தி மட்டுமல்ல; பழகிய செய்தியும் கூட. ஆனால், அனிதா வெங்கட்ரமணி சற்று வித்தியாசமானவர். தமிழ்ப் பெண்ணான இவருக்கு, சென்னை அந்நிய தேசம்; அமெரிக்கா தாய் வீடு. கொல்கத்தாவில் ச,ரி,க,ம... பழகி வந்தவர், நியூ யார்க்குக்கு மாறிய பின்னும் சங்கீதத்தைக் கைவிடவில்லை. சாவித்திரி ராமானந்த் இவரது குரு. ''அமெரிக்க மண்ணில் தமிழர்கள், இந்தியர்கள், அமெரிக்கர்கள்... என ஒன்றாக கர்னாடக சங்கீதம் பயில்வது கண்களுக்கு விருந்து'' என்று விழிகளை உருட்டி ஆச்சர்யம் கொள்கிறார் அனிதா. சென்னையில் ஹம்சத்வனியின் என்.ஆர்.ஐ விழாவில் பாடி பாராட்டு பெற்றிருக்கும் இவர், கொலம்பியா பல்கலைகழகத்தில் க்ளினிகல் சைகாலஜியில் மாஸ்டர்ஸ் பட்டம் பெற்றவர்.

– சாரு

# நடக்குமென்பார்; நடக்கும்!

## 15.01.2006 முதல் 21.01.2006 வரை

**மேஷம்:** தொட்டது துலங்கும். பணப் பற்றாக்குறை இருக்காது. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். திருமண காரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வீடு / வாகனம் வாங்கலாம். வியாபாரிகளுக்கு வணிகத்தில் முன்னேற்றம் இருக்கும். வழக்கு, வியாஜியம் வெற்றி அளிக்கும். ஆஞ்சநேயர் ஸ்தோத்திரம் படித்து வந்தால் நன்மை அளிக்கும்.

**ரிஷபம்:** தொழிலில் இருந்து வந்த சங்கடங்கள் குறையும். ஆரோக்கியம் பாதிக்காது. முயற்சிக்கும் காரியம் பலிதமாகும். சிலருக்கு வேலை மாற்றம், இடமாற்றம் இருக்கும். குழந்தைகள் பற்றின மனக்கவலை தீரும். தடை விலகி திருமணம் கைகூடும். மனத்தில் தைரியமும் துணிவும் ஏற்படும். வியாபாரத்தில் முன்னேற்றம் இருக்கும். குரு/ கேது / ராகுவை வழிபட்டு வரவும்.

**மிதுனம்:** செல்வாக்கு பெற்ற வாரம். தொழில்





**தஞ்சை பரத்வாஜ்**

படம்: ஸ்ரீஹரி

**✱ எனது மகளின் எதிர்காலம், வேலைவாய்ப்பு, திருமணம் பற்றிக் கூறவும்?**
**- உஷா, திருவனந்தபுரம்**

தங்கள் பெண்ணுக்கு மேல்நாடு சென்று படிக்கும் வாய்ப்பு உள்ளது. தொழில்நுட்பக் கல்வி நன்கு வரும். வெளிநாடு சென்று சம்பாதிக்கும் ஜாதகம். 24 வயது 8 மாதம் வரை திருமணம் செய்யக் கூடாது. தற்போது கேது தசை நடைபெறுகிறது. சுக்ர தசை ஆரம்பத்தில் திருமணம் நடக்கும். செவ்வாய் தோஷம், நாகதோஷம் உள்ள வரனைச் சேர்க்க வேண்டும்.

**✱ எங்களுக்கு வீடு வாங்கும் யோகம் உண்டா? என் மகனின் கல்வி எப்படி இருக்கும்?**
**- க. செல்லப்பாண்டி, சிவகாசி**

உங்களுக்கு 2006-ல் வீடு வாங்கும் யோகம் உள்ளது. உங்கள் மகனுக்கு மருத்துவத் துறையில் படிக்கும் வாய்ப்பு உள்ளது. எதிர்காலம் நன்றாக இருக்கும்.

**✱ எனது மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்?**
**- சரஸ்வதி, கோவை**

உங்கள் மகளுக்கு 2006-ல் திருமணம் நடக்கும். சர்ப்பதோஷம்

ஸ்தானம் மற்றும் வீடு மாற்றம் ஏற்படும். தனம், வாக்கு, கல்வி மேலோங்கும். வீடு, வாசல், வாகனம் வாங்க நல்ல காலம். தாயின் உடல்நிலை பாதிக்கும். நண்பர்கள், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். ராகு / கேதுவை வழிபட்டு வர நற்பலன் அளிக்கும்.

**கடகம்:** ராசிநாதன் ராசியில் சஞ்சாரம். மனக்குழப்பம் தீரும். தெய்வபலன் ஏற்படும். பொருளாதார பாதிப்பு இருக்காது. குடும்ப வாழ்வு ஒற்றுமையாக இருக்கும். உத்தியோகத்தில் செல்வாக்கு ஏற்படும். தடைபட்ட காரியங்கள் உடன் நடக்கும். வீடு, வாசல் வாங்க நல்ல காலம். வியாபாரத்தில் முன்னேற்றம் தெரியும். கலைஞர்களுக்கு ஏற்றம் தரும். சனி / குருவை வழிபட்டு வரவும்.

**சிம்மம்:** போட்டிக்கு இடையே வெற்றிகள் கிடைக்கும் வாரம். உடல் நிலையில் கவனம் தேவை. யாரிடமும் அநாவசியமான பேச்சு வைத்துக்கொள்ளக்கூடாது. புதிய முதலீடுகளைத் தவிர்ப்பது நல்லது. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் இருக்கவும். சனி / குரு / ராகு / கேதுவை வழிபட்டு வரவும்.

**கன்னி:** மனக்குழப்பம் தீரும். கணவன் / மனைவி உறவில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. உடல்நிலை பாதிக்காது. மன உளைச்சல் இருக்கும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் ஏற்படும். வேலை தேடுபவர்களுக்கு வேலை கிடைக்கும். அயல்நாடு செல்லும் வாய்ப்பு சிலருக்கு அமையும். எதிர்ப்புகள் இருக்காது. ராகு / கேது / வழிபாடு செய்து வர நற்பலனை அளிக்கும்.

**துலாம்:** சுபகாரியம் கைகூடும். வழக்கு சாதகமான பாதையில் செல்லும். தனம், வாக்கு, கல்வி மேலோங்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். இருக்கும் இடம், வீடு, வாசல் வழியில் நல்ல பலன் தெரியும். உடல்நிலை பாதிப்பு தராது. குழந்தைகளால் சுபச் செலவு ஏற்படும். நண்பர்களால் ஆதாயம் ஏற்படும். சனி / குருவை வழிபட்டு வரவும்.

**விருச்சிகம்:** உடல் நிலையில் பாதிப்பு இருக்காது. மனச் சலனம் தீரும். குழந்தைகள் பற்றிய மனக்கவலை தீரும். திருமண காரியம் கைகூடும். தொழிலில் மனக் கசப்பு வரலாம். எதிரிகளால் தொல்

உள்ள ஜாதகமாகப் பார்க்கவும். படித்த, பண்புள்ள, நல்ல வேலையிலுள்ள, உடன்பிறந்த இருவர் உள்ள இடத்தில் திருமணம் நடக்கும்.

***✸ எனது தங்கை மகனுக்குத் திருமணம் எப்போது நடக்கும்?***

**- கோபால்ராஜ், ஆந்திரா**

உங்கள் தங்கை மகனுக்கு 37 வயதில் திருமணம் நடக்கும். சர்ப்பதோஷம் உள்ள ஜாதகத்தைச் சேர்க்கவும். படித்த, வேலைக்குப் போகும் பெண் அமைவாள்.

***✸ நான் சில இடங்களில் வேலை பார்த்தும் நிரந்தரமாக அமையவில்லை. வெளிநாடு செல்லலாமா? திருமணம் எப்போது?***

**- ஆர். மதனராஜன், முள்ளிக்குளம்**

உங்கள் ஜாதகப்படி இந்தியாவில் நிரந்தர பணி அமையாது. வெளிநாடு சென்று வேலை பார்க்கும் அமைப்பு உள்ளது. முயற்சி செய்யவும். 27 வயதில் திருமணம் நடக்கும். நல்ல பெண்ணாக அமைவாள்.

பதில்கள்

லைகள் இராது. வெளிநாட்டு அழைப்பு இருக்கும். பணவரவு வரும். கணவன் / மனைவி உறவு நன்றாக இருக்கும். மனதில் தைரியமும் துணிவும் ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு / கேது வழிபாடு நல்லது.

**தனுசு:** திருமண காரியம் கைகூடும். புதிய முயற்சிகள் கைகூடும். சிலருக்கு இடமாற்றம் இருக்கும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். தொழிற்துறையில் வேலைப்பளு குறையும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் தெரியும். சனி / குரு / ராகு / கேதுவை வழிபட்டு வரவும்.

**மகரம்:** ராசிநாதன் சந்திரனுடன் 7-ல் சஞ்சாரம் செய்வதால் நினைத்தது கைகூடும். தனம், கல்வி, வாக்கு மேலோங்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. பணக்கஷ்டம் வராது. திருமண காரியம் கைகூடும். உத்தியோக உயர்வு, இடமாற்றம் நேரிடலாம். சிலருக்கு பழைய வீட்டைப் புதுப்பிக்க நேரிடலாம். எதிரிகள் தொல்லை இருக்காது. கலைஞர்கள் முன்னேற்றம் அடைவார்கள். சனி / குரு வழிபாடு சிறந்தது.

**கும்பம்:** எதிலும் கவனமும் நிதானமும் தேவை. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் இருக்கவும். புதிய முயற்சியைத் தள்ளிப் போடவும். உடல்நிலையில் கவனம் தேவை. வாகனத்தில் செல்லும் போது கவனம். வாக்குவாதம் தவிர்க்கவும். சகோதரர்களால் ஆதாயம் கிட்டும். எதிர்ப்பு இருந்தாலும் சமாளித்து வெற்றி வாகை சூடுவீர்கள். ராகு / கேதுவை வழிபட்டு வரவும்.

**மீனம்:** மனக்குழப்பம் விலகும். வேலையில் இருந்து வந்த எதிர்ப்பு, தொல்லை விலகும். பதவி உயர்வு, இடமாற்றம் இருக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. தொழிலில் போட்டி, பொறாமை விலகும். பணக்கஷ்டம் வராது. வழக்கு வெற்றி அளிக்கும். குழந்தை பாக்கியம் கிட்டும். வெளிநாட்டு முயற்சிகள் நல்ல பலன் தரும். நண்பர் / உறவினர்களால் ஆதாயம் கிட்டும். மாணவ / மாணவிகள் படிப்பில் மேன்மை பெறுவார்கள். ராகு / கேது / குருவை வழிபட்டு வந்தால் நற்பலன் கிடைக்கும். ○

# குறையொன்றுமில்லை

முக்கூர்
லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



**மா**ங்கல்ய ஸ்தவம் என்கிற ஸ்தோத்திரத்தைச் சொல்லிவர, ராக்ஷஸ குணமெல்லாம் அழியும். நமக்கும் அழியும்; நம்மை அணுகி வரும் ராக்ஷஸ குணம் படைத்தவரிடத்திலும் அது அழியும் என்று பார்த்தோம்.

அடுத்த பலன் அபயாந்தி தாரய :

அபய : என்றால் சத்ருக்கள். சத்ருக்களெல்லாம் இருக்கிற இடம் கேஸரி.

கேஸரங்களை உடையவன் கேஸரி - பகவான் நரசிம்ஹன். பிடரி மயிர்கள் கேஸரங்களை உடையவன். அப்படிப்பட்டவன் - அந்த அத்புத கேஸரியை யாரொருவர் ஹ்ருதயத்திலே நினைத்து அவனை இந்த மாங்கல்ய ஸ்தவ ஸ்தோத்திரத்தைச் சொல்லி வழிபடுகிறார்களோ, அவனிடத்திலிருந்து துஷ்டப்ரவிருத்தி தெரியாமல் ஓடிவிடுகிறார்கள்.

யத் கீர்த்தனாது ஸோத்புத ரூபகளெல்லாம் ஓடி விடுகின்றன; நல்லோர்களெல்லாம் வந்து அடிபணிந்து





காத்திருக்கிறார்கள். எல்லா காரியங்களும் ஈடேறும். நரசிம்ஹனை உபாஸிப்பதாலே, ஸேவிப்பதனாலே. ஹரி: என்று சொல்லக்கூடிய அந்தச் சொல்லுக்கு சிம்ஹம் என்று ஓர் அர்த்தம். சிம்ஹமாகிய நரசிம்ஹன் நம்மைக் காத்தருள்வான். பரம மங்களத்தையும் தருவான். ஆரம்பத்திலே

மங்களம் பகவான் விஷ்ணு :
மங்களம் மதுசூதன :
மங்களம் புண்டரீ
காக்ஷ:
மங்களாயதனோ
ஹரி :

என்று மங்கலங்களுக்கெல்லாம் இருப்பிடமாய் அவனைக் குறிப்பிட்டிருக்கிறது.

தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை பாடினார் எம்பெருமானுக்கு. 48 பாசுரம். அதிலே அவர் சொல்கிறார் : "திரு மாலை அறியார் திருமாலை அறியார்!" என்று. அதாவது அவர் பாடிய திரு மாலையை யார் அறியவில்லையோ, அவர்கள் திருமாலாகிய எம்பெருமானை உணர மாட்டார்கள். நிறைய பாசுரங்களிலே இவர் நிர்வேதப்பட்டுக் கதறி அழுது ரங்கநாதன் விஷயமாகவே பாடியிருக்கிறார். ரங்கநாதனைத் தவிர மற்றொன்றை அவர் பாடவேயில்லை.

## எட்டாம் பாகம் 2

திருவேங்கடமுடையானுக்கு எதிரிலே பெரிய கேள்வி ஜீயர் என்ற மகான் வந்தார். அப்போது ஒருத்தர் அங்கே நின்றுகொண்டு, "அப்படிப் பாடாதீர்கள் அந்தப் பெருமை இந்த எம்பெருமானுக்கு இல்லை; ஸ்ரீரங்கத்திலே உள்ள நம்பெருமானுக்கே உண்டு... சோழி

யன் கெடுத்தான் காணும்" என்றார்!

சோழியன் என்பது தொண்டரடிப்பொடியாழ்வாரைக் குறிக்கும். எல்லா ஆழ்வார்களும் ரங்கநாதனைப் பாடினார்கள். ஆனால் தொண்டரடிப் பொடியாழ்வார் ரங்கநாதனையே பாடினார். ஆகவே திருவேங்கடமுடையானுக்கு எல்லா ஆழ்வார்களாலும் பாடப்பட்ட பெருமை இல்லாது போயிற்று!

தொண்டரடிப்பொடியாழ்வாரின் திரு மாலை மொத்தம் ரங்கநாதன் விஷயம்தான். பகவானுக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடினால் அது மொத்தம் ரங்கநாதன் விஷயம் தான். ஆகையாலே, ஆழ்வார் கோஷ்டியிலே இவருக்குப் 'பரம ஏகாந்தி' என்று பெயர். பரம ஏகாந்தமாக ரங்கநாதனையே அனுபவித்தார்.

புலனைக் காவலில் வைத்து, இந்தக் கலியுகத்திலிருந்து நாம் விடுபட வேண்டுமானால் அவன் திருநாமத்தை நாம் கற்க வேண்டும். திருநாமத்தை நாம் கற்றோமானால் யம பாதை இல்லை.

அதற்கு யார் நிதர்சனம் இங்கே...?

காவலிற் புலனை வைத்து கலி தன்னைக் கடக்கப் பாய்ந்து,
நாவலிட்டு உழிதர்கின்றோம் நமன் தமர் தலைகள் மீதே
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ நின் நாமம் கற்ற...
ஆவலிப்பு உடைமை கண்டாய் அரங்கமா நகருளானே

என்றார்.

இதிலே ஒரு சரித்திரமானது காட்டித் தரப்படுகிறது. கல்யாண காலத்திலே த்ருவ - அருந்ததி பிரதர்சனம் என்று கல்யாண தம்பதிக்கு ஹோமம் நடக்கும். ராத்திரி வேளையிலே பண்ணுவார்கள் இந்த ஹோமத்தை.

இப்போது அவகாசமில்லாமல் மத்தியானம் மூன்று மணிக்கே சத்திரத்தைக் காலிபண்ண வேண்டியிருக்கிறது. அவசர யுகத்தில் இருக்கிறோம். வேகமாக எல்லா காரியமும் ஆகி, அடுத்து சாயங்காலம் நாலு மணிக்கு இன்னொருத்தர் கல்யாணம் பண்ணுவதற்கு சத்திரத்தைக் காலிபண்ண வேண்டும். ஆகவே பகலிலேயே எல்லாம் காட்டப்படுகிறது. அப்போது அந்த நக்ஷத்திரம் வராது. ஆனால் நாம் அந்த மந்திரத்தைச் சொல்லி அருந்ததி காட்டுகிறோம். இப்போதும் நடந்து கொண்டுதானிருக்கிறது.

அந்தச் சமயத்தில் த்ருவ நக்ஷத்திரத்தைக் காட்டணும். அருந்ததி வசிஷ்டருடைய தர்ம பத்னி. மஹா பதிவ்ரதை. அருந்தியைப் போன்று அந்த மணப்பெண்ணும் பதிவ்ரதையாக விளங்க வேண்டும் என்பதற்காக அருந்ததி நக்ஷத்திரமும், த்ருவனைப் போன்ற சத்புத்திரனை அவள் பெறவேண்டும் என்பதற்காக த்ருவ நக்ஷத்திரமும் காட்டித் தரப்படுகின்றன.

த்ருவ நக்ஷத்திரத்துக்கு வேத்ய நக்ஷத்திரம் என்று பெயர் - பரம பவித்ரமான நக்ஷத்திரம். எல்லா நக்ஷத்திரங்களுக்கும் முளைக்குறுத்தாக அது இருக்கிறது.

மற்ற நக்ஷத்திரங்களையெல்லாம் - கிருத்திகாதி நக்ஷத்

"ரோட்டுல போறப்போ, என் பையனை லாரி கடந்து போனா போதும், சத்தமா கத்துவான்."

"ஏன்?"

"லாரியின் பின்பக்கம், ஒலி எழுப்புகன்னு போட்டு இருக்குதாம்."

- ஆர்.தங்கராஜ்



திரங்களெல்லாம் இந்த நக்ஷத்திரத்தைப் பிரதக்ஷிணம் பண்ணி வருகின்றன. அந்த த்ருவனுக்காக பிரத்யேகமான இடத்தை பகவான் சிருஷ்டி பண்ணிக் கொடுத்திருக்கிறான். அதற்கு த்ருவ பதம் என்று பெயர்.

அப்பா மடியில் ஏறி உட்கார முடியாத அந்தக் குழந்தைக்கு, இதுவரைக்கும் யாராலும் அனுபவிக்க முடியாத - யாருமே ஏறாத உயர்ந்த பதத்தை உண்டாக்கிக் கொடுத்தான் பகவான். அந்தக் குழந்தை, அம்மாவோடு அந்த உத்தமமான இடத்துக்குப் போகிறது. பல வருஷம் பூலோகத்திலே பரிபாலனம் பண்ணி 36,000 வருஷ காலம் பரிபாலனம் பண்ணி, ராஜ்ய யோகத்தையெல்லாம் அனுபவித்த பிறகு, த்ருவ பதத்துக்கு அவன் போகிறபோது, அந்த த்ருவ பதத்திலே அவன் ஏறி உட்காருவதைப் பார்ப்பதற்காக எல்லா தேவதைகளும் வந்து சூழ்ந்து நிற்பார்கள். அப்போது அந்த த்ருவன் கிட்டேபோய் பதம் ஏறப்போகிற சமயத்தில், அந்த த்ருவ பதத்துக்கும் இவன் வந்த விமானத்துக்கும் இடையே இடைவெளி சற்று அதிகமாய் இருந்தது. இவனுக்குக் கால் எட்டவில்லை. ஒரு படிக்கட்டு இருந்தால் சௌகரியமாக இருக்கும் போல் தோன்றியது. அவன் அப்படி நினைத்துக்கொண்டேயிருந்த போது, யமலோகத்திலேயிருந்து யமன் கொஞ்சம் கால தாமதமாக வந்து, அத்தனை தேவதைகளையும் தள்ளிக் கொண்டு த்ருவன் அந்தப் பதத்திலே ஏறுவதைப் பார்ப்பதற்காகத் தலையைக் கொண்டு வந்து முன்னே நீட்டினான்! த்ருவனுக்கு அந்தத் தலையே படிக்கட்டு மாதிரி சௌகரியமாய் இருந்தது! அதன் மேல் காலை வைத்து ஏறி உட்கார்ந்தான். 'நமன் தமர் தலைகள் மீதே' என்னும்படியான அந்த பாக்கியம் கிடைத்தது.

எதனாலே... த்ருவனுக்குக் கிடைத்தது...? உன்னுடைய திருநாமம் கற்றதனாலே! என்கிறார் தொண்டரடிப்பொடியாழ்வார்.

இவ்வாறு பகவானை நினைத்தால், அவன் திருநாமத்தை உச்சரித்தால், யமனுடைய தலையிலேயே கால் வைத்து ஏறும்படியான அளவுக்குப் பெருமை ஏற்படுகிறது என்றால், அவன் நாமாவை ஸ்மரிப்பவர்களுக்கு நரக லோகத்தில் யாதனம் ஏற்படுமா?

ஆகையினால், எம்பெருமானுடைய திருநாமத்தில் ஒன்றைச் சொன்னாலும் உயர்ந்த கதி நமக்கு ஏற்படுகிறது. இதில் சர்ச்சையே கிடையாது.

இருபத்தோரு நரகங்களை விஷ்ணுபுராணம் விவரிக்கிறது. அதையெல்லாம் கேட்டால் நடுநடுங்கிப் போய் விடுவோம். அத்தனை நரகங்களிலிருந்தும் காக்கப்பட அதற்கு ஒரே ஒரு பிராயஸ்சித்தமும் சொல்லியிருக்கிறது :

'கிருஷ்ணானுஸ்மரணம்!'

இவ்வளவு நரகங்களிலிருந்தும் விடுபட வேண்டும் என்று சொன்னால் ஒரே வழி - கிருஷ்ணனை ஸ்மரியுங்கள்!

(வளரும்)



"கவச உடையை எடுத்து வரச் சொல்லுங்கள் அமைச்சரே!"

"எதற்கு மன்னா? எதிரி நாட்டு மன்னர்கள் யாரையாவது சந்திக்கப் போகிறீர்களா?"

"இல்லை அமைச்சரே, மகாராணியைச் சந்திக்கப் போகிறேன்."

- வீ.விஷ்ணுகுமார்

# “தொகுதிப் பங்கீட்டில்







**'கூட்டணியில் ம.தி.மு.க.வுக்கு கௌரவமான இடங்கள் வேண்டும்' என்று வைகோ சொன்னாலும் சொன்னார். அடுத்த நிமிடமே தமிழக அரசியலில் தீ பற்றிக் கொண்டு எரியத் துவங்கிவிட்டது. ம.தி.மு.க.வின் அவைத் தலைவர் எல். கணேசனுடன் தொகுதிப் பங்கீடு, சன் டி.வி., கூட்டணி ஆட்சி, விஜயகாந்த் என்று அனைத்தையும் பேசினோம். ஒவ்வொரு வார்த்தையும் பம்பரமாய் சுழன்று தீப்பந்தாய் கொதித்தது. அந்தத் 'தகதக' பேட்டியிலிருந்து...**

**ம.தி.மு.க. அமைச்சரவையில் இடம் பெறாததில் உங்களுக்கு இன்னமும் வருத்தம் இருக்கிறது தானே?**

ம.தி.மு.க. அமைச்சரவையில் சேருவது - சேராமல் இருப்பது எல்லாமே வைகோ உள்ளிட்ட மேல்மட்ட நிர்வாகிகள் எடுக்கும் முடிவுதான். அந்த முடிவுக்கு நான் மாறுபட்ட கருத்து கொண்டவன் அல்ல. அப்படியே வருத்தம் இருந்தாலும் அது நடவடிக்கைகளில் காட்டிக் கொடுத்து விடுமே. ஆனால் நான் கட்சி வளர்ச்சிக்காக 51 சதவிகிதம் உழைக்கிறேன். மற்றவர்கள் 49 சதவிகிதம் உழைக்கிறார்கள். ஆகவே நான் அமைச்சராகாததால் வருத்தம் ஏதுமில்லை.

**உங்கள் கூட்டணியில் யார் தமிழகத்தில் மூன்றாவது பெரிய கட்சி என்ற போட்டி தொகுதிப் பங்கீட்டுக்கு முன்னரே வந்துவிட்டதே...**

கூட்டணிக்குள் இருக்கிறோம் என்பதற்காக எந்தக் கட்சியும் தன்னுடைய தனித்தன்மையை இழக்க வேண்டும் என்கிற கட்டாயமில்லை. அதே சமயம் இப்படியான பேச்சுகள் 'முதலுக்கே மோசம்' என்று வரும் பட்சத்தில் அதை கலைஞர் தலையிட்டு பக்குவமாகச் சரி செய்துவிடுவார். அதே சமயம் கூட்டணியில் இருக்கும் கட்சிகளும் பொறுப்புடன் கருத்துக்களைத் தெரிவிப்பது நல்லது.

**சட்டமன்றத்திற்குள் நுழைந்தே ஆக வேண்டும் என்ற கட்டாயத்தில் தி.மு.க. தலைமையிலான கூட்டணிக்குள் பல்லைக் கடித்துக் கொண்டு இருக்கிறது ம.தி.மு.க. என்கிறார்களே...?**

இப்போதைய சூழ்நிலையில் தி.மு.க. கூட்டணியில் ம.தி.மு.க. இருப்பதில் எவ்வித நெருடலும் இல்லை. ஆனால் எத்தனை தொகுதிகள்... எந்தெந்த தொகுதிகள் என்று பேச்சு வரும்போது மனவருத்தம் வரத்தான் செய்யும். இதைத் தடுக்கவோ, தவிர்க்கவோ முடியாது. கேட்பது எங்களது உரிமை; தருவது தி.மு.க.வின் கடமை. என்னுடைய நம்பிக்கை, எல்லாவற்றையும் அனுபவசாலியான கலைஞர் சமாளிப்பார் என்பதுதான்.

**கூட்டணியில் ம.தி.மு.க.வுக்கு கௌரவமான இடம் வேண்டும் என்று வைகோ சொல்ல வேண்டிய அவசியம் இருப்பதாக நினைக்கிறீர்களா?**

(பெரியதாய் யோசித்துவிட்டு) நாங்கள் ஒன்றும் பிச்சைக்காரர்களும் அல்ல; கலைஞர் ஒன்றும் புரவலரும் அல்ல.

# மனவருத்தம் வரும்!"

எங்களுடைய கௌரவத்தைக் குறைக்கும் வகையில் கலைஞர் எதையும் செய்ய மாட்டார். எங்களுடைய கௌரவம் எவ்வளவு என்பது கலைஞருக்கு நன்றாகவே தெரியும்.

**ம.தி.மு.க. ஓ-நெகட்டிவ் போன்றது. எதில் வேண்டுமானாலும் சேரும் என்று கூறியிருக்கிறாரே வைகோ?**

எங்களுக்கு வேறு நாதியே இல்லை என்று யாரும் கருதிவிடக் கூடாது என்பதற்காகக் கூட அப்படிச் சொல்லியிருக்காம். ம.தி.மு.க.வின் நேர்மையை வைத்தே யாரும் எங்களை ஏமாற்றிவிடக் கூடாது என்பதற்காகக் கூடச் சொல்லியிருக்கலாம். இருந்தாலும் இதை வைத்து எங்களைப் பற்றி யாரும் சிண்டு முடிந்து விட வேண்டாம்.

**கடந்த நாடாளுமன்றத் தேர்தலின் போது வைகோ மீது ஓர் அனுதாபம் இருந்தது. ஆனால் இப்போது அப்படி இல்லையே. இது ம.தி.மு.க.வுக்கு பலவீனமா?**

வைகோ பொடாவில் கைதாகி சிறையில் இருந்தபோது மக்கள் அவர்மீது அபரிமிதமான அன்பு, இரக்கம் செலுத்தினார்கள். அதன் காரணமாக மக்களின் ஆதரவு வைகோவிற்கு அதிகமாக இருந்தது என்பது உண்மைதான். அதற்காக அந்த அனுதாபம் இப்போதும் இருக்கிறது என்று நாங்கள் சொல்லவில்லை. உண்மையில் சொல்லப்போனால் எங்களுக்குத் தேவை அனுதாபம் அல்ல... ஆதரவுதான்.

**சன் டீ.வி. குறித்த ம.தி.மு.க.வினரின் அதிருப்தி இன்னமும் அப்படியேதான் இருக்கிறதா?**

எங்களை சன் டீ.வி. இருட்டடிப்பு செய்கிறது என்ற வருத்தம் ம.தி.மு.க. தொண்டர்களுக்கு மட்டும் இல்லை; தலைவர்களுக்குக்கூட இன்னமும் இருக்கிறது. ஆனால் அதற்கும் கூட்டணிக்கும் சம்பந்தமில்லை. காரணம் சன் டீ.வி. தி.மு.க.வின் டீ.வி. இல்லை. அதை நடத்துபவர் தி.மு.க.வைச் சேர்ந்தவராக இருந்தாலும் சன் டீ.வி. தி.மு.க.வின் சொத்து இல்லை.

**இத்தனை ஆண்டுகள் இல்லாமல் இப்போது ம.தி.மு.க. மீது ஜாதிச்சாயம் பூசப்படுகிறது... குறிப்பாக வைகோவையும், விஜயகாந்தையும் இணைத்து. ஆகவே விஜயகாந்தால் ம.தி.மு.க.வுக்கு இழப்பு என்கிறார்களே?**

வைகோவும் விஜயகாந்தும் ஒரே இனமாக

ம.தி.மு.க. பஷீர்



* எல்.கணேசன்

இருக்கலாம். ஆனால் உண்மை என்னவென்றால் வைகோ இந்த இனத்தவர் என்று இன்னமும் பலருக்குத் தெரியாது. வைகோ அப்படிப்பட்ட உணர்வுகளையெல்லாம் கடந்த ஒரு தலைவர். ஒருவேளை விஜயகாந்தால் பாதிப்பு ஏற்படும் என்றால் அது எங்களுக்கு மட்டுமல்ல. எல்லா கட்சிகளுக்கும்தான். அதேபோல பாதிப்பு இல்லை என்றால் எங்களுக்கும் இல்லை.

“எங்க பகுதியில வெள்ளம் ஏற்பட்டு ஆறு மாசம் கழிச்சுதான் நிவாரணம் தந்தாங்க...”

“அப்போ ‘மெல்ல நிவாரணம்’னு சொல்லுங்க.”

- பாலா. சூர்யா



**கடந்த சட்டமன்றத் தேர்தலைக் காட்டிலும் இப்போது ம.தி.மு.க. அதிகமாக வளர்ச்சி பெற்றுள்ளது என்று சொல்ல முடியுமா?**

தி.மு.க. கூட்டணிக்குள் நான்காவது இடத்தில் வைத்து மதிக்கப்பட்டாலும் கூட தமிழகத்தில் இருக்கும் கட்சிகளுள் தி.மு.க., அ.தி.மு.க., காங்கிரஸ், ம.தி.மு.க. ஆகிய நான்கு கட்சிகளுக்கு மட்டுமே 234 தொகுதிகளிலும் வாக்கு வங்கி இருக்கிறது. கட்டமைப்பும் பலமாக இருக்கிறது. ம.தி.மு.க. வளர்ச்சி அடைந்து வருகிறது என்பதற்கு ஓர் உதாரணம், நான் போட்டியிட்ட திருச்சி நாடாளுமன்ற தொகுதி தேர்தல் முடிவுதான். அந்தத் தொகுதியில் தி.மு.க. கூட்டணி சார்பாக யார் நின்றிருந்தாலும் வெற்றி பெற்றிருக்க முடியும். ஆனால் மறுமலர்ச்சி தி.மு.க. போட்டியிட்டதால்தான் இந்த அளவுக்கு வாக்குகள் வாங்கி வெற்றி பெற முடிந்தது. வைகோவை நேசிப்பவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.

**தமிழகத்தைச் சேர்ந்த 12 மத்திய அமைச்சர்களும் வேஸ்ட் என்கிறார் முதல்வர்... இதை அமைச்சரவையில் இடம்பெறாத நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள்?**

காமராஜர் - ஆர்.வி. காலத்திற்குப் பிறகு நீண்ட இடைவேளைக்குப் பின் இப்படியொரு வாய்ப்பு தமிழகத்துக்கு இப்பொழுதுதான் கிடைத்திருக்கிறது. இதை நான் எண்ணிக்கையை வைத்து மட்டும் சொல்லவில்லை. தரப்பட்டிருக்கும் முக்கியத்துவத்தையும் வைத்துத்தான் சொல்கிறேன். அரசியலில் நேரெதிர் களத்தில் இருப்பவர்கள் இப்படித்தான் சொல்லிக் கொண்டிருப்பார்கள். ஆனால் இரண்டு தரப்பு கருத்துகளையும் மக்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய தீர்ப்பு தெளிவாகவே இருக்கும்.

**தமிழகத்தில் கூட்டணி ஆட்சி பற்றி...?**

இது குறித்தெல்லாம் முன் நிபந்தனை போட்டுவிட்டு கூட்டணி அமைக்க முடியாது. அப்படிப் போட்டால் எந்தக் கட்சி தலைமையில்... யார் முதல்வர் என்கிற கேள்விகள் எழுந்து சங்கடங்களை உருவாக்கும். ஆகவே இதுபற்றியெல்லாம் பேச வேண்டிய அவசியமில்லை.

**ம.தி.மு.க. தனித்துப் போட்டியிட வேண்டும் என்பது தொண்டர்களின் விருப்பம் என்கிறாரே இயக்குநர் சேரன்?**

சேரன் பேசலாம். அதற்காக நாங்களும் அப்படிப் பேச முடியாது. பெரிய கட்சிகளே கூட்டணி சேர முயற்சி செய்து கொண்டிருக்கும் நேரத்தில் ‘தனித்துப் போட்டியிடுவோம்’ என்று சொல்ல நாங்கள் ஒன்றும் ஞான சூன்யங்கள் கிடையாது.

- இரா.முத்துக்குமார்
படம் : ஸ்ரீஹரி

# மிரளும் மும்பை... மிரட்டும் சென்னை!

ரீமா சென்- குஷ்பு, ஜோதிகாவுக்குப் பிறகு, தமிழ் சினிமாவில் காலூன்றி நிற்கும் மும்பைவாசி. இவரது படங்களாகட்டும் பாடல்களாகட்டும் அங்கு இளமை டெண்ட் அடித்திருக்கும். ஆனாலும் எப்பொழுதாவதுதான் படப்பிடிப்புக்காக சென்னையைத் தொட்டுவிட்டுப் போவார்.

"ம்... தமிழ் ரசிகர்கள் என் மேல எவ்ளோ பாசம், நேசம் வைச்சுருக்காங்கன்னு நல்லாவே தெரியும். என்னோட எல்லா தமிழ்ப் படங்களும் ஹிட் ஆயிருக்கு. எந்த மியூசிக் சேனலைத் தட்டினாலும் நான் ஆடிப் பாடிட்டு இருக்கேன். நான் ஒரு ஊருக்கு மட்டும் சொந்தமில்லை. தமிழ், தெலுங்கு, ஹிந்தின்னு பறந்து பறந்து நடிச்சுட்டிருக்கேன். ஆனா பாருங்க நான் ஹிந்திப் பெண். மொழியும் தெரியும். ஆனா இன்னைக்கும் ஒரு ஹிந்தி வெற்றிக்காக அல்லாட வேண்டியிருக்கு. சௌத் இந்தியன்ஸ் ச்சோ ஸ்வீட்... தெலுங்குல என் முதல் படமான சித்திரம், தமிழ்ல மின்னலே ரெண்டுமே சூப்பர் டூப்பர் ஹிட்."

தமிழ்நாட்டில் இவரது தொடர்பு மொழி ஆங்கிலம். "நானும் தமிழ் கத்துக்கணும்னு பார்க்கறேன். முடியவே மாட்டேங்குது. ஏதோ கஷ்டப்பட்டு ரெண்டு மூணு தமிழ் வார்த்தைகள் கத்துக்கிட்டு ஆந்திரா போனா தலை சுத்துது. எது தமிழ், எது தெலுங்குன்னு என்னால பிரிச்சு சொல்லவே முடியல. சென்னை வந்து, 'தம்பி இக்கட சூடு'ன்னு பேசிடறேன்" வெட்கத்தோடு பேசுகிறார்.

"ஆனா தமிழ் சினிமா, அதோட பாடல்கள்னா எனக்குக் கொள்ளை இஷ்டம். கன்னத்தில் முத்தமிட்டால் பார்த்து உருகியிருக்கேன். 'மயிலிறகே மயிலிறகே'ன்னு கைகளை அலை போல் அசைச்சு வீட்ல பாடிட்டே இருப்பேன். நான் மட்டுமில்ல, மும்பையே சென்னைல ரெடியாகற பாடல்கள்னா மிரளுது தெரியுமா?"

சிம்பு இயக்கி நடிக்கும் 'வல்லவன்' படத்தில் ரீமாவும் ஒரு நாயகி. "பொதுவா ரெண்டு ஹீரோயின்ஸ் உள்ள படங்களை நான் ஒத்துக்கமாட்டேன். ஆனா வல்லவன் ஸ்பெஷல். எனக்கு அதுல ரெண்டரை பாட்டுக்கள். செம படம்பா. சிம்புவுக்கு வயசுக்கு மீறிய திறமை; சினிமா அறிவு."

சரி, பாரா பாராவாகப் பதில் சொன்னது போதும் என்றதும் டோனி மாதிரி சர சரவென சிக்ஸர் அடிக்கத் தொடங்கினார்.

**தமிழ் நடிகைகள்...?**

"நல்ல அழகு; அபார திறமை. ஆனா வயிற்றின் சுற்றளவைக் கவனிக்கணும். ஃபிட்னஸ் அறிவு இங்கே கம்மிதான். தமிழ் நடிகைகளுக்கு கட்டுப்பாடே இல்லை."

**வானளவு ஆசை?**

"மும்பையில் மட்டுமில்லாம உலகம் முழுக்க அப்ருவ்டு ஃப்ளாட் வாங்கணும்."






*முதல் சம்பளம்?*

''ஒரு சோப்பு விளம்பரத்துல 'லலல்லா லலல்லா'னு பாடி நடிச்சதுக்கு கான்ட்ராக்ட் போட்டு கையில அறுபதாயிரம் சொளையா கொடுத்தாங்க.''

**அடிக்கடி பயன்படுத்தும் வார்த்தை?**

''டோண்ட் கால் மீ. ஐ வில் கால் யு பேக் - யார் போன் பண்ணாலும் இதைச் சொல்லிட்டு கட் பண்ணிடுவேன்.''

**பிடித்த நடிகர்கள்?**

''கமல்ஹாசன், அமீர்கான்.''

**- ச.ந. கண்ணன்**

அட்டை, படங்கள்: **கெர்ரி**

# நாடகக்காரி

## கந்தப்ப பிள்ளை சொன்ன கதைகள் - 13

அப்புறம் சில மாத காலம் நமச்சிவாயம் - நீலமணி நாடகம் தமிழ்நாட்டையே அல்லோல கல்லோலப் படுத்திக் கொண்டிருந்தது. ரெயிலிலே, திருவிழாவிலே, திருமணக் கூட்டங்களிலே, நாலு பேர் சந்திக்கும் இடங்களிலெல்லாம் நீலமணி நாடகங்களைப் பற்றியே பேச்சாயிருந்தது. முக்கியமாக, 'கனவு' என்னும் ஒரு நாடகம் தமிழ் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. இந்தக் காலத்தில் 'சமூக சித்திரம்' என்று சொல்லுகிறார்களே, அம்மாதிரிப் பாணியில் அமைந்தது 'கனவு' என்னும் நாடகம்; அதில் ஒரு கதாநாயனும் கதாநாயகியும் சந்திக்கிறார்கள்; காதலிக்கிறார்கள்; சில காலம் சந்தோஷமாக வாழ்கிறார்கள். பிறகு அவர்களைத் தொல்லைகள் தொடர்கின்றன. வாழ்க்கைத் தொல்லைகளின் காரணமாக காதலும் கசந்து போகிறது. கதாநாயகியின் பேரில்; அகாரணமாகச் சந்தேகப்பட்டுக் கதாநாயகன் அவளைத் துன்புறுத்தி வருகிறான். இதற்கிடையில் அவர்களுக்கு ஒரு குழந்தையும் பிறக்கிறது. கதாநாயகன் பேரில் பொய் வழக்கு ஜோடிக்கப்படுகிறது.



அவன் சிறையில் தள்ளப்படுகிறான். கதாநாயகி பல இன்னல்களுக்கு உள்ளான பிறகு அவளுடைய அருமைக் குழந்தையுடன் நடுத் தெருவில் பிச்சையெடுத்து ஜீவிக்கும்படி நேரிடுகிறது.

கேளுங்கள்! வேடிக்கையை! நீலமணி சிறு குழந்தையாயிருக்கும்போது ரெயிலில் பாட்டுப் பாடிப் பிச்சை எடுத்தான் அல்லவா? நாடகத்திலும் அந்த வழக்கம் அவளை விடவில்லை. நாடக மேடையில் நீலமணி பிச்சை கேட்டுப் பாடிக் கொண்டு வந்தபோது சபையோர்களில் கண்ணீர் விடாதவர்கள் யாருமில்லை. அவர்களில் பலர் காசுகளையும், கால் ரூபாய், அரை ரூபாய்களையும் மேடையின் மீது எறிவார்கள். நீலமணியைத் தொடர்ந்து வந்த அவளுடைய சின்னஞ்சிறு மகன் (நாடகக் கதையிலே வரும் மகனைத்தான் சொல்கிறேன்) அந்தக் காசுகளைப் பொறுக்கிச் சேர்ப்பான். சிலர் ரூபாய் நோட்டுக்களை மேடை மீது எறிவதுண்டு. சில நாளைக்கு இப்படி மேடையில் எறியப்படும் பணம் ஐம்பது அறுபது ரூபாய் ஆகிவிடும்.

பிச்சை எடுக்கும் காட்சிக்குப் பிறகு கதாநாயகி தன் மகனுடன் தன்னந்தனியான காட்டுப் பாதையில் வழி நடந்து

போவாள். இருவரும் ஒரு மரத்தடியில் உட்காருவார்கள். நீலமணி களைப்புத் தாங்காமல் மரத்தில் சாய்ந்தபடி தூங்கி விடுவாள்.



அப்போது ஆகாச மார்க்கத்தில் கந்தர்வன் ஒருவன் தேவ ரதத்தில் ஏறிக் கொண்டு வருவான். அவன் தன் மனைவியுடன் சண்டை பிடித்துக் கொண்டு வந்தவன். மரத்தில் சாய்ந்து கிடந்த நீலமணியைப் பார்ப்பான். இவளைக் கொண்டு தன் மனைவிக்கு ஒரு பாடங் கற்பிக்க எண்ணுவான். அதாவது அவளைக் காட்டிலும் அழகான பெண்கள் பூலோகத்திலே உண்டு என்று நிரூபித்துக் காட்ட விரும்புவான். உடனே பூமியில் இறங்கி நீலமணியின் தூக்கம் கலையாமல் அவளைத் தூக்கிக் கொண்டு கந்தர்வ லோகத்தில் அவனுடைய மாளிகையின் பூந்தோட்டத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பான். அங்கே நீலமணிக்கு அவன் உபசாரம் செய்வதை கந்தர்வப் பெண் வந்து பார்ப்பாள். கந்தர்வனை கோபித்து அவனை அப்பாற்போகச் சொல்லிவிட்டு நீலமணியிடம் அவளுடைய கதையைக் கேட்பாள். கேட்டபிறகு அவளிடம் அனுதாபப்பட்டு, "'நீ இங்கேயே என்னுடன் இருந்துவிடு. உனக்கு ஒரு குறைவுமின்றி நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்பாள்.

நீலமணி கந்தர்வபுரியின் அற்புத அழகு வாய்ந்த பூந்தோட்டங்களில் சித்திர விசித்திரமான பல வர்ண மலர்களையும், அந்த மலர்களைச் சுற்றிச் சுற்றிப் பறந்த பட்டுப் பூச்சிகளையும் பார்த்துக் கொண்டு உலாவி வருவாள். ஆனாலும் அவளுடைய மனத்தில் நிம்மதி ஏற்படாது. பூத்துக் குலுங்கிய மந்தார விருட்சத்தின் அடியில் நின்று ராகமாலிகையில் ஒரு விருத்தம் பாடுவாள். அந்தப் பாடலை நீங்கள் அவசியம் கேட்டிருப்பீர்கள்.

"பெற்ற தாய்தனை மக(வு)
மறந்தாலும்
பிள்ளையைப் பெறுந்
தாய் மறந்தாலும்
கற்ற நெஞ்சம் கலை
மறந்தாலும்
கண்கள் நின்
நிமைப்பது மறந்தாலும்
உற்றதேகம் உயிர்
மறந்தாலும்
உயிரை மேவிய
உடல் மறந்தாலும்
நற்றவத்தவர் இதயத்தே
ஓங்கும்
நமச்சிவாயத்தை நான் மறவேனே!''

இதுதான் பாடல். இதன் கடைசி அடியான ''நமச்சிவாயத்தை நான் மறவேனே'' என்று நீலமணி பாடும்போது உடலும் உள்ளமும் உயிரும் உருகும்படி உணர்ச்சியுடன் பாடுவாள். அதைக் கேட்டுச் சபையோர் மனங் கசிந்து கண்ணீர் பெருகும் நிலையில் இருக்கும் போது, பூலோகத்தில் விடப்பட்ட கதாநாயகனையும் கந்தர்வன் அங்கே கொண்டு வந்து சேர்ப்பான். மூன்றாவது முறை நீலமணி, "நமச்சிவாயத்தை நான் மறவேனே" என்று பாடும்போது, நமச்சிவாயமே அவள் பின்னால் வந்து நின்று அவளுடைய கண்களைப் பொத்துவான்.

இந்தக் கட்டத்தில் நாடகக் கொட்டையில் உண்டான ஆரவாரத்துக்கு இணையாகத் தமிழ் நாடக மேடை சரித்திரத்தில் எப்போதும் ஏற்பட்டதேயில்லை. அதற்கு முன்னுமில்லை; பின்னுமில்லை.

மரத்தடியில் சாய்ந்து தூங்கிக் கொண்டிருந்த பிச்சைக்காரப் பெண் கண்ணை விழித்துப் பார்ப்பாள். அவ்வளவும் கனவு என்று உணர்ந்து ஏமாற்றம் அடைவாள். அருகி



விருந்த தன் அருமை மகளைக் காணாது திகைப்பாள், பைத்தியம் பிடித்தவள் போல் ஓடுவாள். அப்போது எதிரே ஒரு சிப்பாய் அவள் மகளை அழைத்துக் கொண்டு வருவான். அந்தச் சிப்பாய் அன்று தன்னை விட்டுப் போன கணவன் தான் என்பது அறிந்து கதாநாயகி மகிழ்வாள். இத்துடன் நாடகம் முடிவுறும்.

இந்தக் 'கனவு' என்னும் சமூக சித்திரம் தமிழ்நாட்டு நாடகப் பிரியர்களை அந்த நாளில் பைத்தியமாக அடித்துக் கொண்டு வந்தது.

நமச்சிவாயம் - நீலமணியின் நாடக மேடை வெற்றியைப் பற்றிக் கேட்கக் கேட்க எனக்கு எவ்வளவோ பெருமையாகவும் சந்தோஷமாகவும் இருந்தது. ஆனால் அவர்களுடைய சொந்த வாழ்க்கை அவ்வளவு திருப்திகரமாக இல்லையென்று அறிந்து உற்சாகக் குறைவு உண்டாயிற்று. ஓயாமல் அவர்கள் சண்டை பிடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும், எந்தச் சமயத்தில் என்ன நேருமோ என்று தனக்குப் பயமாயிருக்கிறதென்றும் என் தமக்கை எனக்கு அடிக்கடி சொல்லி அனுப்பிக் கொண்டிருந்தாள். முதலில் சில காலம் நான் அதை அலட்சியம் செய்து வந்தேன். காலப் போக்கில் எல்லாம் சரியாய்ப் போய் விடும் என்று மனத்தைத் திருப்தி செய்து கொண்டிருந்தேன். ஆனால் தமக்கை சொல்லி அனுப்புவது நின்றபாடில்லை.

கடைசியாக, இனி அலட்சியம் செய்வதற்கில்லையென்று தோன்றி, ஒரு நாள் சென்னைக்குப் போய்ச் சேர்ந்தேன். அப்போது சென்னை ஒற்றை வாடையில் நாடகம் நடந்து கொண்டிருந்தது. பார்க் டவுன் சந்து ஒன்றில் நாடக கம்பெனியின் ஜாகை. பக்கத்திலேயே நீலமணியின் வீடு. நான் அங்கே போனபோது உள்ளேயிருந்து பெருங் கூக்குரல் வந்து கொண்டிருந்தது. நீலமணி - நமச்சிவாயம் இவர்களுடைய குரல்கள்தான். வீட்டுக்குள் நுழையும்போது எனக்கு நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டது. என்னைப் பார்த்ததும் இருவரும் சண்டையை நிறுத்தி முகமலர்ச்சியுடன் வரவேற்றார்கள். சாமான்கள் உள்ளே வந்து சேர்ந்து வண்டிக்காரனைத் திருப்பி அனுப்பிய பிறகு, "நான் வரும்போது ஒரே கூக்குரலாயிருந்ததே. என்ன விசேஷம்?" என்று கேட்டேன்.

"நீங்களே கேளுங்கள் மாமா! உங்கள் அருமை மகளை நீங்களே கேளுங்கள்" என்றான் நமச்சிவாயம்.

"ராகமாலிகையை எந்த ராகத்தில் முடித்தால் என்ன மாமா! 'பேஹாக்'கில் முடிக்காமல் மத்திய மாவதியில் முடித்து விட்டதாகச் சண்டை பிடிக்கிறார்!" என்றாள் நீலமணி.

"எந்த ராகத்தில் முடித்தாலுந்தான் ஒன்றுமில்லையே? மத்தியமாவதியில் முடிக்காமல் நான் சொன்னபடி 'பேஹாக்'கில் முடிப்பதுதானே?" என்றான் நமச்சிவாயம்.

"பாடுகிறது நான் தானே? எனக்கு இஷ்டமான ராகத்தில் நான் பாடுகிறேன்" என்றாள் நீலமணி.

"பாடுகிறவர்களுக்



காகப் பாட்டா? கேட்கிறவர்களுக்குப் பாட்டா? நீங்கள் சொல்லுங்கள் மாமா!" என்றான் நமச்சிவாயம்.

"கேட்கிறவர்கள் அப்படியொன்றும் மத்தியமாவதியைக் கேட்டுக் காதைப் பொத்திக் கொள்ளவில்லையே? கொட்டகை இடிந்து விழும்படி கரகாஷ ஆரவாரம் செய்து மகிழ்ந்தார்களே!" என்றாள் நீலமணி.

"உன் பாட்டைக் கேட்டா கரகோஷம் செய்தார்கள்? நான் மேடையில் அச்சமயம் தோன்றியதற்காக அல்லவோ கரகோஷம் செய்தார்கள்!" என்றான் நமச்சிவாயம்.

"அப்படி இருக்கும்போது நான் எந்த ராகத்தில் பாடினால் என்ன? எப்படிப் பாடினால் என்ன?" என்றாள் நீலமணி.

"மாமா! உங்கள் மகளுக்குக் கர்வம் அசாத்தியமாகத் தலைக்கேறிவிட்டது. இனி உருப்படப் போவதேயில்லை. ஊரில் உள்ள முட்டாள் பயல்கள் எல்லாம் 'ஆஹா' என்று புகழ்ந்து இப்படி இவளைக் கர்வம் பிடிக்கச் செய்து விட்டார்கள்!" என்று குறைபட்டான் நமச்சிவாயம்.

"ஊரில் உள்ளவர்கள் எல்லாம் முட்டாள்கள் என்றால் அவர்களுக்குத்தானே நாம் நாடகம் ஆடுகிறோம்? நாம் மட்டும் என்ன?" என்றாள் நீலமணி.

"கேட்டீர்களா; மாமா! இவன் எனக்கு



முட்டாள் பட்டம் சூட்டுவதை! இவளை மேடையில் ஏற்றி நாடெங்கும் புகழ்பெற்ற நாடகக்காரியாக்கியதற்கு எனக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்! இல்லையோ?" என்றான் நமச்சிவாயம்.

அதற்குப் பதில் நீலமணி என்னமோ சொல்லத் தொடங்கிச் சொல்ல முடியாமல் விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள்.

இதையெல்லாம் கேட்டு எனக்கு உண்மையிலேயே அழுவதா, சிரிப்பதா என்று தெரியாமல் போய்விட்டது. அந்தச் சந்தேகமான நிலையில் சிரித்துத் தான் வைப்போமே என்று உடம்பு குலுங்கச் சிரித்தேன்.

"அட அசட்டுக் குழந்தைகளா!" என்று இரண்டு பேரையும் மாற்றி மாற்றிப் பார்த்துப் பார்த்துச் சிரித்தேன்.

"மாமா! எங்களைப் பார்த்து நீங்கள் மட்டுந்தானா சிரிப்பீர்கள்? ஊரே சிரிக்கும்" என்றான் நமச்சிவாயம்.

"ஆமாம், தம்பி! நீங்கள் இப்படி அற்ப விஷயத்துக்குப் பெரிய சண்டையாகப் போடுகிறீர்கள். இதன் உண்மை தெரியாதவர்கள் ஒன்றைப் பத்தாக்கி ஊசியை உலக்கையாக்கி ஊரெல்லாம் டமாரம் அடித்து வீண் வதந்திகளைப் பரப்பி விடுவார்கள். பிறகு ஊரே உங்களைப் பார்த்துச் சிரிக்கத் தொடங்கிவிடும்! ஜாக்கிரதை!" என்றேன்.

உடனே பேச்சை மாற்றினேன். யோக க்ஷேமங்களை விசாரித்தேன். அவர்களுடைய நாடகங்களைப் பற்றி நாடெல்லாம் புகழ்வதையும் கூறினேன்.

இரண்டு பேரையும் தனித்தனியாகப் பார்த்து நல்ல வார்த்தையாகப் புத்திமதி கூறினேன். நான் கூறியவற்றை இரண்டு பேரும் அப்படி அப்படியே ஒப்புக்கொண்டார்கள். தங்களுடைய குற்றத்தை உணர்ந்தவர்கள்போல் பேசினார்கள்.

"ஒரு நல்ல நாள் பாத்து ஏதாவது ஒரு கோயிலுக்குப் போய்க் கல்யாணம் செய்து கொண்டு விடுங்கள். குழந்தை ஒன்று பிறந்துவிட்டால் அப்புறம் சின்ன விஷயங்களைப் பற்றிச் சண்டை போட அவகாசம் இராது" என்றேன்.

இருவரும் ஒப்புக்கொண்டு என்னையே முகூர்த்த நாள் பார்க்கும்படி சொன்னார்கள். நான் உடனே மறு வாரத்திலேயே முகூர்த்த நாள் குறிப்பிட்டேன். இரண்டு பேரையும், பொறுக்கியெடுத்த சில சிநேகிதர்களையும் மட்டும் திருநீர் மலைக்கு அழைத்துச் சென்று திருமணத்தைச் சுருக்கமாக முடித்து வைத்தேன். பிறகு, நிம்மதியுடன் ஊருக்குத் திரும்பினேன்.



**"நம்மைப் பார்த்து அழுவதா, சிரிப்பதா என்று மாமாவுக்குத் தெரியவில்லை!"**

திருமணத்துக்கு நான் குறிப்பிட்ட முகூர்த்த நாளில் என்ன கோளாறு இருந்ததோ தெரியவில்லை. நான் ஊருக்குத் திரும்பிச் சில நாளைக்குள்ளே இடி விழுந்தாற்போன்ற செய்தி சென்னையிலிருந்து வந்து விட்டது. நீலமணி கடிதத்துக்கு மேல் கடிதமாக எழுதியிருந்த நாலைந்து கடிதங்களையும் சுசீந்திரம் உற்சவக் கச்சேரிக்குப் போய்த் திரும்பிய பிறகு சேர்ந்தாற் போல் படித்ததில் துயரமும் பீதியும் கொள்ளும்படி நேர்ந்தது.

நான் சென்னைக்குப் போயிருந்த போதே நமச்சிவாயத்தின் தொண்டை கம்மியிருந்ததையும் அவன் கமறிக் கமறி அடிக்கடி இருமியதையும் கவனித்தேன்.

உடம்பும் சிறிது இளைத்திருந்தது. சென்னையில் நாள்தோறும் இடைவிடாமல் நாடகம் நடந்து வந்ததுதான் இதற்குக் காரணம் என்று எண்ணிக் கொண்டேன்.

சில நாளைக்கெல்லாம் நமச்சிவாயத்துக்கு உடம்பு ரொம்ப பலவீனமாகிச் சுரமும் வந்துவிட்டதாம். டாக்டரை அழைத்துப் பார்த்ததில் அவர் பயங்கரமான செய்தியைச் சொன்னாராம். பையனுக்கு டி.பி. வியாதி என்றும், உடனே நாடகம் ஆடுவதை நிறுத்திப் பூரண ஓய்வு எடுக்க வேண்டும் என்றும், தகுந்த சிகிச்சையும் செய்துகொள்ள வேண்டும் என்றும், இல்லாவிடில் வியாதி முற்றி உயிருக்கே அபாயம் வந்துவிடும் என்றும் சொன்னாராம். அந்த நாளில் இப்போது வந்திருப்பது போன்ற 'ஸ்ட்ரெப்டோமைஸின்' முதலிய மருந்துகள் இல்லை. டி.பி. வியாதி வந்துவிட்டது என்றால் பிழைப்பது துர்லபம் என்றுதான் அர்த்தம்.

ஆனால் நமச்சிவாயமோ டாக்டர் சொன்னதை நம்பாமல், "எனக்கு டி.பி.யும் இல்லை; கி.பி.யும் இல்லை" என்று சொல்லி, மேடை ஏறியே தீருவேன் என்று பிடிவாதம் பிடித்தான். இதன் பலனாக, ஆளை அடியோடு கீழே தள்ளிவிட்டது.

"மாமா! உடனே புறப்பட்டு வாருங்கள்! தாமதித்தால் எங்களை உயிரோடு காண மாட்டீர்கள்!" என்று நீலமணி அலறிப் புடைத்துக் கொண்டு கடைசிக் கடிதத்தில் எழுதியிருந்தாள்.

நானும் அலறிப் புடைத்துக் கொண்டு புறப்பட்டுப் போனேன். அங்கே எல்லாம் அல்லோல கல்லோலமாகத்தான் இருந்தது. நாடகத்தை நிறுத்தி ஒரு வாரம் ஆயிற்று. நாடக கம்பெனியைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் மாதக் கணக்காகச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. கொட்டகை முதலாளியும் இன்னும் பலரும் தங்களுக்குச் சேர வேண்டிய பாக்கிக்காக வந்து கொண்டிருந்தார்கள்.

நாடக கம்பெனிகளுக்குப் பெயரும் புகழும் பெருகுவதையொட்டிப் பணச் செலவும் அதிகமாகிக் கொண்டு வரும். ஆட்கள் அதிகமாகச் சேர்ந்து கொண்டு வருவார்கள். ஆடம்பரம் பெருகிக் கொண்டு வரும். காட்சி ஜோடனைகளில் பணம் ஏராளமாகப் போய்க் கொண்டேயிருக்கும். சுற்றி உள்ளவர்கள் பிய்த்துப் பிடுங்கிக் கொண்டிருப்பார்கள்.

திடீரென்று ஒரு நாள் கம்பெனியை மூடும்படி நேர்ந்தால் கம்பெனி சொந்தக்காரரின் கதி அதோ கதிதான்.

ஏதோ கடவுள் என்னை அச்சமயத்தில் அங்கே கொண்டு போய்ச் சேர்த்தார்.



**"நம்மைப் பார்த்து அவர் மட்டும்தானா சிரிக்கிறார்... ஊரே சிரிக்கிறது!"**

நான் கணக்கு வழக்குகள் பார்த்து, கொடுக்க வேண்டியவர்களுக்கெல்லாம் ஒன்றுக்குப் பாதி கொடுத்துத் தீர்த்தேன். மொத்த முடிவில், நமச்சிவாயத்துக்குக் கடன் பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் தங்கி நின்றது.

கும்பகோணத்தில் எனக்குத் தெரிந்த நல்ல டாக்டர் இருப்பதையும், அவரிடம் வைத்தியம் பார்த்துக் கொள்ளலாம் என்றும் சொல்லி நமச்சிவாயத்தையும், நீலமணியையும் அழைத்துக் கொண்டு போனேன். கும்பகோணத்தில் எனக்கு ஒரு வீடு இருந்தது. அந்த வீட்டிலேயே அவர்களுக்கு ஜாகை ஏற்படுத்திக் கொடுத்தேன்

(தொடரும்)



## எங்கள் எம்.எஸ்.

# உள்ளம்

**தீப.நடராஜன்**

“யார் இந்தப் பொண்ணு?”

- இப்படி ஒரு கேள்வி எழுந்தது. கேள்வி எழுந்த இடம் கும்பகோணம் மகாமகத் திருவிழாவில். கேள்வி எழுந்த உள்ளங்கள் பல ஆயிரம்.

ஒரு சின்னஞ்சிறு குரல், இசைமயமான குரல். இக்கேள்வியை எழச் செய்த குரலுக்குச் சொந்தக்காரி மதுரை ஷண்முகவடிவு சுப்புலட்சுமி என்ற சிறுமி.

‘தோன்றிற் புகழொடு தோன்றுக!’ என்னும் வள்ளுவர் வாக்குக்கு விளக்கமாக அமைந்தவர் எம்.எஸ்.

புகழ்மிக்கவர் எவரும் உலகில் முதன் முதலில் தோன்றிய நாளில் புகழடைந்து விடுவதில்லை.

எம்.எஸ். ஒருவர்தான் மக்கள் முன் தோன்றிய முதல் நாளே ஏகோபித்த புகழுக்கு ஆளானவர் என்று உறுதியாகச் சொல்ல முடியும்.

இததனை உன்னதமும் - பெருமையும் - புகழும் அவரை வந்தடைந்தும் அவர் எளிமையின் உறைவிடமாக வாழ்ந்ததுதான் மகோன்னதம்.

வெளிநாடுகளில் கச்சேரி செய்யச் சென்ற சமயங்களில்தான் அவர் விடுதிகளில் தங்கியிருக்கிறார்.

இந்தியாவில் எந்த மூலைக்குச் சென்றாலும் நண்பர்கள் இல்லங்களில் தங்குவதையே வழக்கமாகக் கொண்டிருந்தனர் சதாசிவ மாமாவும் குஞ்சக்காவும்.

எந்த வீட்டில் தங்கினாலும் அந்தந்த வீட்டுப் பெண்டிரோடு தாமும் ஒருவராய் இணைந்து விடுவார். விருந்தாளி, வீட்டைச் சார்ந்தவர் என்னும் வித்தியாசம் அற்றுப் போய் விடும்.

அந்தக் காலத்தில் மாவாட்டுவது என்பது ஆட்டுக்கல்லில் தான். அதைச் செய்வதற்கு சீதா மாமி போன்றவர்கள் இருக்கத்தான் செய்தனர். இருந்தாலும் எம்.எஸ்.ஸும் ‘நான் செய்கிறேனே’ என்று உட்கார்ந்து மாவாட்டுவார்.

‘கல்கி தோட்டம்’ ஒரு மாளிகை. அதில் சதாசிவம் அவர்கள் ஏதேனும் விருந்து நடத்திக்கொண்டே இருப்பார். எல்லோருக்கும் தரையில் இலை போட்டு பரிமாறப்படும். பிறரோடு சேர்ந்து



எம்.எஸ். அவர்களும் பரிமாறத் துவங்கி விடுவார். அதுவே ஒரு அழகு தான்.

ஒருமுறை தோட்டத்திலே ஒரு குடை ராட்டினத்தைக் கொண்டு வந்து வைத்து எல்லோரையும் ஆடி மகிழச் செய்தனர். குஞ்சக்காவும் எங்களோடு குழந்தையாகக் கலந்து கொண்டதை மறக்க முடியுமா?

ரசிகமணி டி.கே.சியிடம் மிக்க மரியாதையும் மதிப்பும் அன்பும் கொண்டிருந்தார்கள் சதாசிவம் அவர்களும் எம்.எஸ்ஸும். டி.கே.சி தம் மகளாகவே பாவித்து எம்எஸ்ஸிடம்



# குழையும் இசை!

அன்பு வைத்திருந்தார்.

ஒரு கடிதத்தின் முடிவில் 'அன்புள்ள அப்பா' என்று எழுதி டி.கே.சி. கையெழுத்திட்டிருப்பது ஒரு சான்றாக நம்மிடம் இருக்கிறது.

அப்போது டில்லிக்கு ரயில் பயணம் போக இரண்டு நாட்கள் பிடிக்கும். டி.கே.சி. நீரிழிவு காரணமாக ஓட்ஸ் தோசைதான் எடுத்துக் கொண்டிருந்தார்.

எம்.எஸ். ரயில் பெட்டியிலேயே மெழுகினால் ஆன ஸ்டவ் ஒன்றைப் பற்ற வைத்து அதில் சின்ன தோசைக் கல்லில் ஓட்ஸ் தோசை வார்த்து டி.கே.சிக்கு உணவளித்த பாங்கை எண்ணிப் பார்த்தால் உள்ளம் நெகிழ்கிறது.

கவர்னர் ஜெனரலாக டில்லியில் கொலு வீற்றிருந்த ராஜாஜி, அந்தச் சமயம் திடீரென்று கவர்ன்மெண்ட் ஹவுஸ் (இப்போது ராஷ்ட்ரபதி பவன்) சிப்பந்திகளை மகிழ்விக்க ராதாவின் பரதநாட்டிய நிகழ்ச்சி நடத்த வேண்டும் என்ற ஆசையை வெளிப்படுத்தினார் சதாசிவம்

அவர்களிடம்.

சென்னைக்கு தந்தி கொடுக்கப்பட்டு வழுவூர் ராமைய்யாப் பிள்ளை அவர்களை விமானம் மூலம் டில்லிக்கு வரவழைத்தார்கள்.

நட்டுவாங்கம் செய்ய குரு வந்தாயிற்று. நாட்டியத்திற்கான இதர பக்கவாத்தியக் கலைஞர்கள் வரவில்லை.

நாட்டியத்திற்கு மிருதங்கம் வாசிப்பதில் சில வேறுபாடான முறைகள் உண்டு. தம்முடன் கச்சேரிக்கு மிருதங்கம் வாசிக்க டில்லிக்கு வந்திருந்த தம் அண்ணா சக்திவேல் அவர்களை உட்காரச் சொல்லி எம்.எஸ். அவர்களே மிருதங்கத்தை எப்படியெல்லாம் விட்டுவிட்டு வாசிக்க வேண்டும் என்பதை வாசித்துக் காட்டி பயிற்சி தந்தார்!

எம்.எஸ். வீணை வாசிப்பார் என்பது நமக்குத் தெரியும். மிருதங்கமும் வாசிப்பார் என்பது அன்று தெளிவாயிற்று.

பிறவிக் கலைஞர் என்றால் எல்லாம் கைவரும் போலும்!

**க**ச்சேரிகளில் பாடும்போது வாக்கேயகாரர்களின் முத்திரை முதல் முறையாக வரும் சமயம் இருகரம் கூப்பிக் கும்பிட்டு மரியாதை செலுத்துவார்.

அவர் பாடும் பாடல்கள் பலவற்றில் அவர் தமது முத்திரையைப் பதித்து விட்டிருக்கிறார்.

'ஜகதோதாரண'

'குறையொன்றும் இல்லை கண்ணா'

'காற்றினிலே வரும் கீதம்'

போன்ற பல பாடல்களை இன்று வேறு பலரும் பாடும்போது நமக்கு ஏமாற்றமே மிஞ்சுகிறது. எம்.எஸ். இப்படிப் பாடினாரே, அப்படிப் பாடினாரே என்ற எண்ணம் நமக்கு வந்து விடுகிறது. அவர் பாடினது போன்ற தோரணை, சுகம், ஆத்மார்த்தம் வேறு யார் பாடினாலும் கிடைக்க மாட்டேன் என்கிறதே.

சிறந்த இசைக் கலைஞர்கள் பலரிடம், ஒவ்வொருவருடன் ஒரு ராகம் ஒட்டிக் கொண்டு விடும். எம்.எஸ். அவர்களுடன் ஐக்கியப்பட்ட ராகம் சங்கராபரணம்.

அருணாசலக் கவிராயரின் 'யாரோ என்றெண்ணாமலே'யும் சியாமா சாஸ்திரிகளின் 'சரோஜ தள நேத்ரி'யும் எம்.எஸ்ஸால் பாடிப்பாடி சிறப்படைந்தவை.

சரோஜதள நேத்ரியில் நிரவல் செய்வதற்கு அந்தக் காலத்துப் பாடகர்கள் 'கோரி வச்சின வாரி' எனத் தொடங்கும் வரிகளையே எடுத்துக் கொண்டிருந்தனர்.

ஆனால், எம்.எஸ். அவர்களோ "சாமகான விநோதினி" என்னும் வரிகளை நிரவல் செய்வதற்கு ஏற்புடையது என்று எடுத்துக் கொண்டார்.

'சாமகான விநோதினி' என்று அவர் செய்யும் நிரவல் சங்கராபரணத்தில் குழைந்து குழைந்து வந்து நமது உள்ளங்களையும் குழையச் செய்து விடும்.

செய்துவிடும் என்ன? செய்து கொண்டேதான் இருக்கின்றது இப்பவும். ○



• சதாசிவ மாமா, குஞ்சக்காவுடன் நான்...

# உலகை உலுக்கிய குற்றங்கள்!

ரிப்போர்ட்-1



ஆகஸ்ட் 9, 1969 காலை எட்டுமணி. ஒதுக்குப்புறமான பகுதியிலுள்ள அந்த அழகிய வீட்டை நோக்கி வேகவேகமாக நடந்துகொண்டிருந்தாள் வின்ஃபிரட் சாப்மேன். ஏற்கெனவே நேரமாகிவிட்டது. போனவுடன் வீட்டு வேலைகளைத் தொடங்கிவிட வேண்டும். ஹாலிவுட்டை கலக்கிக் கொண்டிருக்கும் முன்னணி நடிகையான ஷேரோன் டாடேவின் வீட்டில்தான் அவளுக்கு வேலை. அவள் லேசுப்பட்ட நடிகையல்ல! ஒருமுறை நேரில் பார்த்துவிட்டால் பிறகு செத்துவிடலாம் என்கிற அளவுக்கு அமெரிக்க இளைஞர்கள் ஒவ்வொருவரும் வெறியுடன் காதலித்த இளம் நடிகை. இத்தனைக்கும் ஷேரோனுக்குத் திருமணமாகிவிட்டது. எட்டு மாத கர்ப்பிணி வேறு. ஆனாலும் அவள் கனவுக் காதலிதான்.

வீட்டுப் படியில் ஏறிய வின்ஃபிரட் ஒரு விநாடி குழம்பிப்போனாள். 'ஷேரோன் இன்று சீக்கிரமாக எழுந்து விட்டாரா? வீடு திறந்தேயிருக்கிறதே' யோசனையுடன் உள்ளே நுழைந்தாள் வின்ஃபிரட். யாருமில்லை.

மீண்டும் வெளியே வந்தபொழுது இரண்டு குழப்பங்கள் அவளைத் தாக்கின. குழப்பம் 1. வாசல் கதவில் டெலிபோன் ஒயர் அறுந்து தொங்கிக் கொண்டிருந்தது. குழப்பம் 2. வாசலுக்கு வெளியே ஒரு புதிய, அவள் இதுவரை பார்த்திராத ராம்ப்ளர் வகை கார் ஒன்று நின்று கொண்டிருந்தது.

வந்திருப்பவர் யார்? வண்டியை நிறுத்திவிட்டு கதவையும் திறந்துபோட்டு விட்டு எல்லோரும் எங்கே போய் விட்டார்கள்? மீண்டும் அறைக்குள் போக முயற்சித்தபொழுது முதல் முறையாக திடுக்கிட்டாள் வின்ஃபிரட். இதென்ன தரையில் பொட்டுப் பொட்டாக சிவப்பு நிறத்தில்? ரத்தமா? ஐயோ!

ஓட்டமும் நடையுமாக வீட்டின் பின்புறத்திற்கு ஓடினாள் வின்ஃபிரட். அங்கே... பச்சை புல்தரையில் ரத்த வெள்ளத்தில் மல்லாக்க விழுந்து கிடந்தான் ஒருவன். சப்தம் போட்டு அலறியபடி ஓடினாள் வின்ஃபிரட். காரைக் கடந்து போக முயன்றபொழுது ஒருகணம் காருக்குள் எட்டிப் பார்க்க, மீண்டும் அதிர்ந்தாள். உள்ளே மற்றொரு உடல் ரத்த வெள்ளத்தில்...

அடுத்த பத்தாவது நிமிடத்தில் லாஸ் ஏன்ஜல்ஸ் காவல் துறையினர் அங்கு வந்து சேர்ந்தனர். இதென்ன காலையில் ஒரு கொடூரம்? காரில் ஒரு பிணம், புல்வெளியில் ஒரு பிணம். அடுத்த ஐந்து நிமிடத்தில் மேலும் இரண்டு பிணங்கள் கண்டெடுக்கப்பட்டன. பலமுறை கத்தியால் குத்தப்பட்ட நிலையில் ரத்த வெள்ளத்தில் ஓர் இளம் பெண். மற்றவனுக்கு 30 வயது இருக்கலாம். அவனது உடலிலும் சரமாரியான வெட்டுகள். முகம் சிதைக்கப்பட்டிருந்தது.

அதிர்ந்துபோனது போலீஸ் துறை. ஒரே நாளில் இத்தனை கொடூர கொலைகளா? ஷேரோன் எங்கே? மூச்சிரைக்க அறைக்குள் ஓடினார் ஓர் அதிகாரி.





அங்கே... நீச்சல் குளம் போல் ரத்தம் பரவியிருக்க, தனது பெருத்த வயிரோடு விழுந்து கிடந்தாள் ஷேரோன். அவளது கழுத்தில் ஒரு கயிறு இறுக்கமாகக் கட்டப்பட்டிருந்தது. அடுத்த அதிர்ச்சி. அந்தக் கயிற்றின் மற்றொரு முனையில் ஓர் ஆணின் ரத்தம் தோய்ந்த உடல். மொத்தத்தில் வீடு முழுவதும் ரத்த வெள்ளம்.

சுற்றிச் சுற்றி ஓடிவந்த பிறகு ஒரு மூலையில் போய் படுத்துக்கொண்டது மோப்ப நாய். ஒவ்வொரு அங்குலமாக சோதனையிட்டாகிவிட்டது. ஒரு தடயமும் இல்லை. அதிர்ச்சியிலிருந்து மெல்ல மெல்ல மீண்ட காவல் துறையினர், வின்ஃபிரடிடம் தனது விசாரணையைத் தொடங்கினர். ஷேரோனின் கணவன் ரோமன் போலன்ஸ்கி (இவர் ஒரு பெரிய டைரக்டர். ஷேரோனை நடிக்க வைத்து இவர் இயக்கிய படத்தின் பெயர் தி ஃபியர்லெஸ் வாம்பயர் கில்லர்ஸ்) கேமராவைத் தூக்கிக் கொண்டு ஐரோப்பியா போயிருக்கிறார். வீட்டில் வேறு யாரும் கிடையாது. கொலையாகிக் கிடப்பவர்கள் ஷேரோனின் நண்பர்கள். சம்பவம் நடந்ததற்கு முந்தைய தினம் ஒரு சிறிய பார்ட்டிக்காக அவர்களை அழைத்திருக்கிறார்கள்.

அவசர அவசரமாக உடல்கள் வெளியேற்றப்பட்டன. விசாரணை முடிந்து ஷேரோனின் அறையைச் சாத்தும்பொழுதுதான் கதவின் பின்புறம் எழுதியிருந்த அந்த வார்த்தையைக் கவனித்தனர். ரத்தத்தில் எழுதப்பட்ட அந்த ஒற்றை வார்த்தை - PIG

அதேநாள் இரவு. லாஸ் ஏஞ்ஜல்ஸின் மற்றொரு பகுதியான வேவர்லி ட்ரைவிலுள்ள 3301 எண் கொண்ட அறையில் லெனோ லாபியான்கா என்பவனுடைய உடல் ரத்தவெள்ளத்தில் கண்டெடுக்கப்பட்டது. அவனது முகத்தில் ஒரு தலையணை, கழுத்தில் இறுக்கமான கயிறு. வயிற்றில் கறி வெட்ட பயன்படுத்தப்படும் வெட்டுக் கத்தி குத்தப்பட்ட நிலையில் இருந்தது. அவனது வயிற்றில் ரத்தத்தால் WAR என்று கீறப்பட்டிருந்தது. மற்றொரு அறையில் லெனோவின் மனைவி ரோஸ்மேரி பிணமாகக் கிடந்தாள். மொத்தம் 41 இடத்தில் கத்தியால் குத்தியிருக்கிறார்கள்.

தரையில் ரத்தத்தால் எழுதப்பட்ட சில வாசகங்கள். அவற்றில் ஒன்று Death to Pigs. அதற்கு மிக அருகே மற்றொரு வார்த்தை. Rise. மூலையில் நின்று கொண்டிருந்த குளிர்சாதனப் பெட்டியின் மேல் சிவப்பு நிறத்தில் ஒரு பெயர். Helter Skelter. அதாவது 'குழப்பம்'

இந்தத் தொடர் கொலைகளுக்குப் பின்னால் இருப்பவர்கள் யார்? எதற்காக இத்தனை கொலைகள்? இன்னமும் என்னென்ன அதிர்ச்சிகள் காத்துக் கொண்டிருக்கின்றன? உறைந்து போனது காவல்துறை.

(திகில் பரவும்)

–மருதன்

"அரிதான ரத்தப்பிரிவான 'ஓ நெகட்டிவ்' போன்றது ம.தி.மு.க. இது அரிதாக இருந்தாலும் எல்லா ரத்தப்பிரிவுடனும் சேரும் தன்மை கொண்டது. அதைப் போன்றதுதான் ம.தி.மு.கவும். இதை எதிலும் சேர்க்கலாம்."

- மறுமலர்ச்சி தி.மு.கவின் ரத்ததானக் கழகத்தின் ஓராண்டு நிறைவு விழாவில் வைகோ பேசிய பேச்சின் ஒரு பகுதிதான் இது. இப்படிப் பேசிய வைகோ, தொண்டர்களின் பலத்த ஆரவாரத்துக்கிடையே, "இதை வேறு மாதிரி எடுத்துக் கொள்ளாதீர்கள். நான் சொன்னது சாதி - மதத்துக்கு அப்பாற்பட்டு எல்லாவற்றுடன் சேரும் தன்மை கொண்டது ம.தி.மு.க" என்று 'பன்ச்' வைத்துப் பேசினார்.

இந்தப் பேச்சுதான் கூட்டணிக்குள் அதிர்வேட்டு என்றால், அதற்கு முன் பேசிய இயக்குனர் சேரனும், முன்னாள் எம்.பி டாக்டர் கலாநிதியும் சரவெடிகளைக் கொளுத்திப் போட்டிருந்தனர்.

டாக்டர் கலாநிதி பேசும்போது, "வைகோ இலங்கைக்குச் சென்றபோது அவரைப் பார்க்கக்கூடாது என்று தடை விதிக்கப்பட்டது. அந்தத் தடையை மீறி நான் சென்று வைகோவைப் பார்த்தேன். ஆனால் தடை விதித்தவர்களே வைகோவை பூந்த

# அரசியலுக்கு வருகிறா



மல்லிக்கும், வேலூருக்கும் சென்று பார்த்தனர்" என்று கலைஞரைக் குத்திக் காட்டியபோது வைகோ என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்துப் போய் இருந்தார். "பில்கேட்ஸ் தமிழகத்துக்கு வந்தபோது அவரைப் பலர் தங்கூடாது சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொண்டனர். ஆனால் வைகோ சந்தித்திருந்தால் தமிழகத்தில் உள்ள ஏழு கோடி பேருக்கும் மஞ்சள் காமாலை தடுப்பு ஊசி போட்டப்பட்டு இருக்கும்" என்று தயாநிதி மாறனுக்கும் 'பன்ச்' கொடுத்தார் கலாநிதி... அவரே...

"சூரியன் மறைந்துவிடும். ஆனால் பம்பரம் சுழன்று கொண்டே இருக்கும்" என்றபோது, நிலைமையின் விபரீதத்தை உணர்ந்த சில தொண்டர்கள் மத்தியில் சலசலப்பு ஏற்பட்டது.

"எனக்கு ஓர் ஆசை... அது பேராசையாகக் கூட இருக்கலாம். தாங்கள் தனித்துப் போட்டியிட

வேண்டும். தொண்டர்களின் விருப்பமும் அதுதான்" என்றார் சேரன். அப்போது அரங்கமே ஆர்ப்பரித்தது. "வைகோவால்தான் தமிழகத்தை வழிநடத்த முடியும். அவரது மருத்துவப் பணிகளை முழுமையாக மக்களிடம் உரிய முறையில் எடுத்துச் சென்றால் எல்லா தொகுதிகளிலும் அவர் வெற்றி பெறுவது உறுதி" என்று உணர்ச்சிவசப்பட்டார் சேரன். சில நாட்களுக்கு முன்பு ஒரு மாலை நாளிதழ்

சமயத்தில் நினைவுபடுத்தி பேசிக்கொண்டிருந்தனர்.

சேரனின் இந்தத் திடீர் அரசியல் பேச்சுகள் ம.தி.மு.க.வினரிடத்தில் மகிழ்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது. ஒரு வெற்றி இயக்குநர், மக்கள் மத்தியில் நல்ல இமேஜ் உள்ள ஒருவர் கட்சிக்குள் வந்தால், அதுவும் தேர்தல் நேரத்தில் வந்தால், அது கட்சிக்குள் நல்ல சமிக்ஞையை ஏற்படுத்தும் என்பது அவர்களுடைய எதிர்பார்ப்பு. சேரனும் வைகோவும் ஒரே 'மீடியா'வால் பாதிக்கப்பட்டிருப்பதால் இவர்கள் இணைவது இருவருக்குமே நல்லது என்கிற ஒரு கருத்தும் நிலவுகிறது. விரைவில் சேரன் அரசியல்

## ...சரன்?



• சேரன்



• கலாநிதி

பற்றி சேரன் காட்டமாகப் பேட்டியளித்திருந்தது குறிப்பிடத்தக்கது. வைகோவின் நடைபயண நிறைவு விழாவின் போது, அவரது காலில் விழுந்து சேரன் ஆசி பெற்றதை தொண்டர்கள் இச்

களத்துக்கு வருவார்; ம.தி.மு.கவுக்கு பிரசார பீரங்கியாகச் செயல்படுவார் என்கிற எதிர்பார்ப்பிலிருக்கின்றனர் ம.தி.மு.க.வினர்.

'தவமாய் தவமிருந்து' படம் மூலம் தமிழகத் தாய்மார்களின் நெஞ்சங்களில் குடிகொண்டு விட்ட சேரன், அரசியலில் சேர்ந்தால் பட்டுப்போய் விடுவார் என்கிற சந்தேகத்தையும் ஒருசிலர் எழுப்பாமலில்லை. இதனால் தீவிர யோசனை செய்யப்பட்டு வருவதாகவும் சொல்லப்படுகிறது.

எது எப்படியோ, ம.தி.மு.கவின் ஒவ்வொரு அசைவும் எதிர்முகாமைச் சேர்ந்தவர்களால் கண்காணிக்கப்படுகிறது என்பது மட்டும் நிஜம். **- கோகிலா**

படம்: **ஸ்ரீஹரி**

## கூகுள் கிலி!

'நான் பார்த்து பயப்படுற ஒரே நிறுவனம் கூகுள்தான்' - இப்படி சொன்னது யார் தெரியுமா? உலகின் மெகா தொழில் அதிபரான பில்கேட்ஸ்தான். 'கூகுள் நிறுவனம் சொந்தமாகத் தனது பிராண்ட் பெயரில் கம்ப்யூட்டர்களைத் தயாரிக்கப் போகிறது. அதற்கான ஆபரேட்டிங் சிஸ்டத்தையும் கூகுளே உருவாக்கப் போகிறது. இணைய ப்ரௌசராக ஃபயர் பாக்ஸைக் கொண்டு வரப் போகிறது' என்கிற செய்தி லாஸ் ஏஞ்சல்ஸில் நடந்த சர்வதேச எலக்ட்ரானிக்ஸ் ஷோவில் வெளியான இருபதே நிமிடங்களில் சர்வதேச பங்குச் சந்தையில் கூகுளின் ஷேர் பல மடங்கு உயர்ந்துவிட்டது. மைக்ரோசாப்டின் போட்டி நிறுவனங்களோடு கைகோத்து, லினக்ஸ் உதவியுடன் கூகுள் பி.சி. களத்தில் குதிக்கப் போகிறது என்ற செய்தி பில்கேட்ஸின் பிபியை உயர்த்தும் முன்பே கூகுள் அச்செய்தியை மறுத்தது. 'கம்ப்யூட்டர் தயாரிப்பில் களமிறங்கும் எண்ணமே எங்களுக்கில்லை' என்றது. ஏற்கெனவே உள்ள விஷயங்களைவிட புதிய விஷயங்களைக் கொண்டுவருவதே கூகுளின் பாலிஸி என்பதே இது வரை நிலவி வரும் உண்மை.



## ஹைடெக் மதுரை!

மதுரையில் தகவல் தொழில்நுட்பப் பூங்கா ஒன்றை உருவாக்கிட மதுரை காமராஜர் பல்கலைக்கழகம் இருபத்தைந்து ஏக்கர் நிலம் ஒதுக்கியுள்ளது. பல்கலைக்கழகத்துக்கு எதிரே இந்நிலம் ஒதுக்கப்பட்டுள்ளது. ஓ.கே. தென் தமிழகத்தின் ஐடி ஐகானாக மதுரை மாறிவிட்டால் தன்னை நோக்கிப் படையெடுக்கும் இளைஞர் கூட்டத்தின் மூச்சுத் திணறலிலிருந்து சென்னை தப்பிக்கும்.

## ப்ராடெக்ட் : இது ஐபாட் காலம்

இசைப் பிரியர்களின் டிஜிட்டல் ஐகானாக ஐபாட் ஆட்டுவித்துக் கொண்டிருக்கும் காலமிது. ஐபாட் பற்றிய அறிமுகமில்லாதவர்களுக்காக ஒரு சிறு அறிமுகம். இது ஒரு டிஜிட்டல் மீடியா ப்ளேயர். செல்போனைப் போல் கையடக்கமானது. ஆப்பிள் நிறுவனத்தால் உருவாக்கப்பட்டு, தற்போது உலகச் சந்தையில் சக்கைபோடு போட்டுக் கொண்டிருக்கிறது. முதல் தலைமுறை ஐபாட்கள் (சிங்கிள் கலர், 1 GB-ல் 200 பாடல்கள் வைத்துக் கொள்ள முடியும்) 2001 அக்டோபரில் வெளிவந்தன. கடந்த அக்டோபர் 2005-ல் ஐந்தாம் தலைமுறை ஐபாட் சந்தைக்கு வந்துவிட்டது. மல்ட்டி கலர், வீடியோ ப்ளேயர், ஒரு பென்சில்



* ப்ரேம்ஜி



* பில்கேட்ஸ்

# பில்கேட்ஸ் பயப்படும்



• மதுரை

அளவே தடிமனானது. அதிகப் பாடல்களைப் பதிவு செய்து கொள்ளும் வசதி, புகைப்படங்களைச் சேகரித்து வைத்துக் கொள்ளலாம், உங்கள் கணினியில் பொருத்தி ஒரு டிவைஸாகவும் பயன்படுத்திக் கொள்ளலாம். 2004-ல் கிட்டத்தட்ட 44 லட்சங்களாக இருந்த ஐபாட் விற்பனை, 2005-ல் இரண்டு கோடிகளைத் தாண்டியுள்ளது. தற்போது ஆப்பிள், ஐபாட் நேனோ எனும் (விரல்) அடக்க மாடல்களை (1GB, 2GB) அறிமுகப்படுத்தியுள்ளது. இதனால் 2006 இறுதிக்குள் விற்பனை மேலும் பல மடங்கு பெருகும்.

**வாய்ஸ் ப்ளேயர் அஸிம் ப்ரேம்ஜி :**

'நீ பெரிய அளவில் வெற்றி பெற வேண்டுமென்றால், பெரிய அளவில் அர்ப்பணித்

## றுவனம்!

துக் கொள்ளப் பழகு. அதே போல் அர்ப்பணிப்பு குணமுடைய பணியாளர்களைத் தேர்ந்தெடுப்பதும் வெற்றிக்கு வழி வகுக்கும்.'

- முகில்

திருமணத்துக்கு முன்பே தனி வீட்டில் வசிக்கும் காதலர்களாக நடித்துக் கொண்டிருக்கிறார்கள் ஆர்யாவும் ரேணுகா மேனனும். படம் கலாபக் காதலன். இந்தப் படத்துக்கு கனடா வாழ் தமிழ் இளைஞரான 'நிரு' இசையமைத்திருக்கிறார். இவரது இசையில் அப்படி என்ன விசேஷம்? ஏ.ஆர்.ரகுமான் தமது பெரும்பாலான பாடல்களுக்கு அரபு மற்றும் சூஃபி இசையின் மெலடிகளைப் பயன்படுத்தி ஹிட் கொடுத்தார் என்றொரு பேச்சு உண்டு. இப்போது நிருவும் அதே அரபி மற்றும் சூஃபி இசையின் அற்புதமான இசைக் குறிப்பு



## கலாப இசை!

களில் இருந்து காதல், தனிமை, தாகம் போன்ற உணர்வுகளைச் சொல்லும் ஐட்டங்களை எடுத்து படம் முழுக்க கலக்கலான பின்னணி இசை அமைத்திருக்கிறாராம். கூடவே எம்.ஜி. கன்னியப்பன் என்னும் புதுப் பாடலாசிரியர் இந்தப் படத்துக்காக எழுதியுள்ள 'உருகுதே ரத்தம்' பாடல் பரபரப்பாக பேசப்படும் என்கிறார்கள். பலரது எதிர்பார்ப்புக்கு மத்தியில் வளர்ந்து வருகிறான் கலாப காதலன்.

- ஸ்ரீ

# என்னுயிர்த் தோழி!

காவேரிப்பட்டிணம். கிருஷ்ணகிரி அருகே இருக்கும் பசுமைப் பிரதேசம். இருபத்தேழு வருடங்களாக இங்கு வசித்து வருகிறார்கள் அங்கமுத்து - சியாமளா தம்பதியினர். இவர்களுக்கு தோலெட்சுமி, சுஜாதா என இரண்டு மகள்கள். ஒரு மகன், கார்த்திகேயன். இரண்டு மகள்களுக்குத் திருமணம் ஆகி விட, கார்த்திகேயன் டி.எம்.இ. முடித்து விட்டு பெங்களூர் சாகர் ஆட்டோ மொபைல்ஸ் கம்பெனியில் மெக்கானிக் ஆக வேலை பார்த்து வருகிறார். பத்தாம் வகுப்பு வரை படித்திருக்கும் சியாமளா, பத்து வயதிலிருந்தே கல்கி வாசகி.



• சியாமளா

இவரது கணவரான அங்கமுத்துவுக்கு ஏற்கெனவே திருமணமாகி மனைவி அம்சவேணி இறந்துவிட்டிருக்கிறார். பின்னர் அவரது தங்கையான சியாமளாவை மறுமணம் புரிந்திருக்கிறார். வேளாண்மை உதவி அலுவலராக பணியாற்றி வந்த அங்கமுத்து 2001ல் ஓய்வு பெற்றிருக்கிறார். தற்போது சிறிய அளவில் ஸ்டேஷனரி கடை ஒன்றினை நடத்தி வருகிறார்.

"எங்கள் வீட்டில் துணிமணி பெட்டிகளைவிட, கல்கியில் வெளியான தொடர்களை பைண்டிங் செய்து வைத்திருக்கும் புத்தகப் பெட்டிகளே அதிகமாக இருக்கும். அந்தளவுக்கு அம்சவேணியும், சியாமளாவும் கல்கியின் நாவல்கள் மற்றும் கட்டுரைகள் மீது தீராத மோகம் கொண்டவர்கள்" என்கிறார் அங்கமுத்து.

"அண்ணன் ஒரு கோயில் என்பார்கள். என் அண்ணன் விருதம்பட்டு சுவாமிநாதன் ஸ்தபதி எனக்குத் தலைக்குச் சூடுவதற்கு காலையில் ஒரு வகைப் பூவும், மாலையில் ஒரு வகைப் பூவும் தினசரி தவறாது வாங்கித் தந்த தங்க நிகர் அண்ணன். பத்து வயதில் கல்கி வாசிக்கப் பழக்கப்படுத்தியவரும் அவர்தான்" என்கிறார் சியாமளா.

இவரது வீட்டை எட்டிப் பார்த்தால் பொன்னியின் செல்வன், சிவகாமி

# வாரம் ஒரு வாசகர் குடும்பம்

யின் சபதம், அலை ஓசை, அமரதாரா, கல்கியின் கட்டுரைகள் மற்றும் கல்கியில் அவ்வப்போது வெளியான பிரபல எழுத்தாளர்களின் சரித்திர நாவல் தொடர்கள் பைண்டு செய்யப்பட்ட புத்தகங்களாக இருக்கின்றன.

"அகிலனின் வேங்கையின் மைந்தன் வெளிவந்த ஆண்டுகளில், என் அண்ணன் தன்னுடைய மகளுக்கு அருள்மொழி எனப் பெயர் சூட்டினார். கல்கியில் ஜெகசிற்பியன் எழுதிய பத்தினிக் கோட்டம் நாவல் தொடராக வந்த போது, பைண்டு செய்து வைத்திருந்தேன். பல வருடங் கழித்து அந்தப் புத்தகத்தை இரவல் வாங்கிச் சென்றவர் அதனைத் திருப்பித் தரவே இல்லை. பத்தினிக்கோட்டம் நாவலில் வரும் பட்டத்து யானைக்கு, பல்லவ நாட்டின் நந்திச் சின்னம் பொறித்த கொடி அதன் கண்களில் பட்டுக் கொண்டே இருக்க வேண்டும். அதன் பார்வையில் இருந்து அந்தக் கொடியானது மறைந்துவிட்டால், அந்தப் பட்டத்து யானைக்கு மதம் பிடித்து விடும். அதுபோல வீட்டிற்குள் கல்கி இதழோ, கல்கியின் படைப்புகளோ என் பார்வையில் பட்டுக் கொண்டேயிருக்க வேண்டும். அவற்றைக் காணாதிருக்க நேர்ந்துவிட்டால், அன்று முழுவதும், எனக்கு ஒரே டென்ஷன்தான்" என்று கூறும் சியாமளா, "இந்தத் தகவல் கேட்பதற்கு வியப்பாக இருக்கலாம். ஆனால், அதுதான் உண்மை" என்கிறார்.



* கணவருடன்...

ஆறு மாதங்களுக்கு முன்பு சியாமளாவின் அக்காள் பேத்திக்கு மாப்பிள்ளை பார்க்க பெங்களூருக்குச் சென்றிருக்கிறார்கள். இரு வீட்டாருக்கும் பிடித்துப் போயிருக்கிறது. பேச்சுவாக்கில் மாப்பிள்ளை வீட்டார், 'தமிழ் வாரப் பத்திரிகைகளில் தாங்கள் எதனைத் தொடர்ந்து வாசிக்கிறீர்கள்?' எனக் கேட்டிருக்கின்றனர். அவர்களுக்கு கல்கி இதழை பலமாக சிபாரிசு செய்துவிட்டு வந்திருக்கிறார் சியாமளா. பெங்களூர் சம்பந்தி வீட்டுக்காரர்கள் அன்றிலிருந்து கல்கி வாசகர்களாகிவிட்டிருக்கின்றனர்.

"எங்கள் வீட்டுக்கு ஒரு நல்ல மருமகளை அனுப்பி வைக்கும் முன்பாக, ஒரு நல்ல பத்திரிகையை அறிமுகப்படுத்தி விட்டீர்கள், ரொம்ப தேங்க்ஸ்!" என்கிறார்களாம் அவர்கள்.

"வாசித்தால் மனசுக்கு நிம்மதி தருவது கல்கி. கடந்த நாற்பதாண்டுகளாக என்னுயிர்த் தோழியாகவும், என் கண்ணின் மணியாகவும் விளங்கி வரும் கல்கி, இன்றைய இளந்தலைமுறையினரையும் வாசிக்கத் தூண்டி வருவது மகிழ்ச்சியானது" என்று பூரிக்கிறார் சியாமளா.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# போட்டுத் தாக்கு!

-பரமு



கிரேக் சேப்பலிடம் கேட்கப்படாத பத்துக் கேள்விகள்:

1. இப்ப இந்தியன் டீம்ல யார் யார் இருக்கான்னு கேட்டா கிரண் மோரே அழ ஆரம்பிச்சுடறாரே?

2. சப்பல் வாங்கக்கூட இப்போ கங்கூலி பயப்படுறாராமே?

3. லெட்டர் லீக் ஆனதுக்குக் காரணம் லெட்டர்ல பெரிய ஓட்டை இருந்ததுதான்னு பி.சி.சி.ஐ. சொல்லுச்சாமே?

4. உங்களுக்குப் பிடிச்ச ஆட்டம் 'உள்ளே வெளியே' தானே?

5. வாய்ல ரொம்ப நாளா கோந்து ஒட்டியிருக்கீங்களே, எடுக்கக் கூடாதா?

6. நக்மாவை' படத்துல பார்த்தாலுமே 'கெட் அவுட்ட்'னு கத்துறீங்களாமே?

7. மந்த்ரா பேடியைக் கூட கங்கூலிக்குப் பதிலா சேர்க்கலாம்னு சொல்லியிருக்கீங்க போல?

8. தினமும் உங்க ஷூவுக்கு பாலீஷ் போட டிராவிடுக்கும் சேவாக்கும் பெரிய அடிதடியே நடக்குதாமே?

9. கங்காரு மாதிரி துள்ளி ஓடி ஃபீல்டிங் பண்ணணும்னு சும்பீளே, லட்சுமணையெல்லாம் நீங்க விரட்டறது ஓவர்தானே...?

10. ஆஸ்திரேலியாவும் இந்தியாவும் போட்டியிடும்போது 'தாய் மண்ணே வணக்கம்'னு பாடிட மாட்டீங்களே?

சொந்தங்கள் வாழ்க!

# சிக்கலாகும் தொடர்புகள்! 13



● படம்: யோகா



உறவுகளை இதமாக, இன்பம் கொடுப்பதாக அமைத்துக்கொள்வது ஒன்றும் பெரிய வித்தையில்லை. ஓரளவு நெருக்கம் வந்துவிட்ட உறவில் எதிர்பார்ப்புகள் வருவதும் இயற்கைதான்; அதை நாம் சொல்ல வேண்டியதும் அவசியம்தான்! சொல்லாவிட்டால் அவர்களுக்கு எப்படிப் புரியும்? சொன்னால்தானே அவர்கள் மாறுவார்கள்? உண்மைதான். சொல்ல வேண்டிய விதத்தில் சொல்வதுதான் நமது சாமர்த்தியம். ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொள்ளுதலைப் (communication) பற்றிப் பார்ப்போம்.

தொடர்பு கொள்வதில் செய்யும் தவறுகளால் உறவுகளில் விரிசல்கள் ஏற்படுவதை, நான் மனநல ஆலோசகராகச் செயல்பட ஆரம்பித்த பின், நன்கு புரிந்துகொள்ள முடிகிறது! சரியான நேரத்தில் சரியான வார்த்தை சொல்லக் கற்பது உறவை வளர்க்க உதவும். இந்த வித்தை நமக்குத் தெரியாமலில்லை. ஆனால் மனவருத்தம் ஏற்படும் போது, உணர்வுகள் நம்மை அலைக்கழிக்க, பேச்சு தெளிவாக இல்லாமல் திரிந்துவிடுகிறது. 'நீ சொன்னது என்னைப் புண்படுத்தியது' என்று சொல்வதற்குப் பதில், 'நீ என்னைப் புண்படுத்திவிட்டாய்' என்று குற்றம் சாட்டிவிடுவோம். தன் குற்றத்தை ஏற்க மறுக்கும் எதிராளி, 'நீ மட்டும் என்னைப் புண்படுத்தியதே இல்லையோ?' என்று கடந்த காலத்தில் நடந்தவற்றை எடுத்துவிட, தொடரும் கதையாகி விடு

மனநல ஆலோசகர் பிருந்தா ஜெயராமன்

கிறது சண்டை.

தொடர்பு கொள்வதில் மூன்று நிலைகள் உள்ளன.

● முதல்நிலை, கேட்பது - listening. மிகக் கடினமான ஒன்று இது. இங்கே, 'கேட்பது' வெறும் காது எனும் புலனின் செயலாக மட்டும் (hearing) சொல்லப்படவில்லை. கவனித்து உள்வாங்கிக் கொள்ளும் திறனும் சேர்த்துத்தான் கேட்பது என்று சொல்லப்படுகிறது. பிறர் சொல்வதைக் கேட்க நேரம், பொறுமை, ஆர்வம் இவையெல்லாம் இன்று மிக அரிதான ஒன்று! இவை இல்லையென்றால் பிறர் சொல்வதைக் கேட்பது கடினம். "ஒருவர் கேட்பது, புரிந்து கொள்வதற்காக இல்லை; பதிலளிக்கத்தான். ஒன்று, பேசிக் கொண்டிருப்பார்கள்; இல்லை பதிலளிக்கத் தயார் செய்து கொண்டிருப்பார்கள்!" என்கிற ஸ்டீஃபன் கோவியின் கருத்து சரிதானே? நூறு சதவிகிதம் கவனிக்கும் திறமை இருந்தால், உறவுகளை ஜெயித்து விடலாம்!

● அடுத்தது, புரிந்துகொள்வது. பிறரை அவர் கோணத்திலிருந்து புரிந்துகொள்ள உதவ நான்காம், ஐந்தாம் அத்தியாயங்களில் வளரும் சூழ்நிலையைப் பற்றிப் பேசினோம் நினைவிருக்கிறதா? பிறரைச் சரியாகப் புரிந்துகொண்டு விட்டால், இதம் தருவோம். அது அவர் தரப்பில் லாபம் தானே? அதனால் நம் உறவை நாடி வருவது நிச்சயம்.

● மூன்றாவது, பதிலளிப்பது. நாம் பாதிக்கப்பட்டிருக்கும் நேரம் பேசினால் நமது குரல் அந்த உணர்வைக் காட்டிக் கொடுத்துவிடும்; சரியான வார்த்தைகளைத் தேர்ந்தெடுக்கும் அளவுக்குத் தெளிவாகச் சிந்திக்க முடியாது. விளைவு? தவறான வார்த்தைகள் வந்து விழும்! 'பேசப்பட்ட வார்த்தைகளையும், உடைந்த முட்டைகளையும் மீண்டும் அள்ள முடியுமா?' என்கிற சீனப் பழமொழியை விடவா நான் வார்த்தைகளின் முக்கியத்துவத்தை விளக்க முடியும்?

' ஒருவர் சொல்வதை முழுமையாகக் கேட்டு, அவருடைய கண்ணோட்டத்தில் அவரைப் புரிந்து கொண்டு, அவரது உணர்வுகளை அங்கீகரித்து விட்டோமென்றால் அவரிடம் மாற்றங்கள் ஏற்படக்கூடிய சூழல் உருவாகிவிடும். இதுதான் ரகசியம். காது கொடுத்துக் கேட்பதும், புரிந்து கொள்வதும் நடக்காதபோது உறவில் பிரச்னைகள் வருகின்றன' என்கிறார் உளவியல் நிபுணர், கார்ல் ரோஜர்ஸ் (Carl Rogers). இதைத்தான் இப்போது விளக்க முற்படுகிறேன்.

ஃபரீதாவும், கௌஸும் வர, வர அதிகமாகச் சண்டை போட்டுக் கொள்வதை இருவரது குடும்பங்களும் கவனித்தார்கள். உறவினர்கள் சிலரை ஃபரீதா விருந்துக்கு அழைக்க, கௌஸ் அவளுடைய சமையலைப் பற்றி கிண்டல் செய்தான். நான்குபேர் நடுவில் அவன் கிண்டல் செய்ததால் புண்பட்டுப் போனவள் 'மற்றவர்கள் முன் என்னைக் கிண்டல் செய்வதில் உனக்கு அலாதி மகிழ்ச்சி. திருப்திதானே?' என்று கோபப்பட, 'நீ மட்டும் என் மனதைப் புரிந்துகொண்டுதான் பேசறியோ?' என்று அவள் அவனைக் கடந்த காலத்தில் புண்படுத்திய சம்பவங்களைப் பற்றி எடுத்துவிட, சண்டை பெரிதாகாமல் சந்தோஷமா நிலவும்? இருவரும் ஒருவரை ஒருவர் பிறாண்டிக் காயப்படுத்தும்போது மனதுக்கு ஒரு சமாதானம்

"கண்டக்டர் விசில் ஊதியும் பஸ் நிக்காம தாறுமாறா போகுதே ஏன்?"

"டிரைவர் நமக்கு சங்கு ஊதப் போறாருனு நினைக்கிறேன்..."

- தஞ்சை தாரு



கிடைக்கலாம்; ஆனால் புண்களை அதிகப்படுத்திக் கொண்டே போவதில் யாருக்கு லாபம்? லாபத்தை விடுங்கள். யாரையாவது மாற்ற முடியுமா, கோபப்படுவதால்? நாம் வருத்தப்படும்படியாகவோ, புண்படும்படியாகவோ யாராவது பேசினால், அவருக்கு நம் வருத்தத்தை உடனே சொல்லும்பொழுது சற்று கடுமையான வார்த்தைகள் வந்துவிடலாம். கோபத்தை ஜெயித்தவர் யாருமில்லை! - துர்வாசரைக்கூட அது விட்டு வைக்கவில்லை. நமது கோபத்தில் இருக்கும் நியாயத்தைப் பிறர் புரிந்து கொள்ளாதபோது இன்னும் கோபம் அதிகரிக்கிறது! இருவரிடையே அடிக்கடி கோபம் ஏற்படும்பொழுது அந்த உறவு சுமையாகத்தானே ஆகிவிடும். மனத்தில் பாரத்தைச் சுமந்துகொண்டு, முகத்தில் முறுவலைக் காட்ட முடியுமா? தாங்க முடியாத கோபத்தை சில சமயம் வெளியே கொட்டிவிடுவோம்; சில சமயம் உள்ளேயே வைத்துக் கொண்டு புழுங்குவோம்.

● கோபத்தில் கத்துபவருக்கு, அதை வெளிப்படுத்தியவுடன் ஒரு பழி வாங்கின திருப்தி மனதுக்குக் கிடைப்பதால் சமாதானம் ஆகிறது! ஆனால் கடுமையான சொற்கள் வந்து விழுவதால், அதைக் கேட்பவர்கள் மறக்க மாட்டார்கள் அல்லவா? ஆக, நாளடைவில் உறவில் விரிசல் கண்டுவிடுகிறது. 'பேசினால்தானே வம்பு; அதனால் பேச்சைக் குறைத்துவிட்டேன்' என்று சொல்பவர்களை நாம் சந்திப்பதில்லை? கோபம் நம்மைத் தவறாக வெளிப்படுத்திவிடும்.

● கோபத்தை உள்ளேயே அடக்கிக் கொள்பவருக்கு மனத்தில் பாரம் அதிகரிக்கும். இறந்தகாலத்தில் நடந்தவற்றை எளிதில் மறக்கவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் தவிப்பார்கள். இந்தக் குணம் எல்லோரிடமும் குற்றம் கண்டுபிடிக்கத் தூண்டும். முடிவு? 'இந்த வீட்டில் நான்தான் விட்டுக் குடுக்கணும்; யாரும் என்னைப் புரிந்து கொள்வதில்லை' போன்ற புழுங்கல்கள் ஒருநாள் ஆங்காரமாக வெடிக்கும்.

கோபத்திலிருந்து பொறாமை, வெறுப்பு போன்ற உதவாத உணர்வுகள் முளைத்து, கரையானாக மனத்தை அரிக்கும். கோபத்தால் நமது மனநிலை, உடல்நிலை இவை பாதிக்கப்படுவது மட்டுமன்றி, யாரையும் மாற்றமுடிவதும் இல்லை. மாறாக, 'என் கோபம் என்னைக் கெடுக்கிறது; அதனால் அதைச் சரியாகக் கையாளப் ('அடக்க' என்பது சரியல்ல) பழகிக் கொள்கிறேன்' என்று ஒருவர் உணர்ந்தால், கோபமாக இருக்கையில் பேசாமல், பிறகு அமைதியான பின் பேசுவார். எதிர்பார்க்கும் பலன் நிச்சயம் கிடைக்கும். பிறரைச் சுட்டிக் காட்டும் முன், தன்னை அலசிப் பார்க்கப் பழகுபவர்கள் எல்லோரிடமும் நல்ல விதமாகப் பழகுவார்கள். நம் உணர்வுகளைப் பூட்டி வைப்பது நல்லதல்ல; அவற்றைச் சொல்லும் உரிமை நமக்கு இருக்கிறது. ஆனால் கேட்பவர் மனநிலையை அறிந்து, புண்படுத்தாமல் பேசுவது சிறந்தது. அதுபோல், அவர்கள் பேசும்பொழுது கவனமாகக் கேட்டு, அதில் உள்ள உணர்வைப் புரிந்துகொண்டதாகக் காட்டிக்கொண்டால், நாம் அவர்களுக்கு இதமாக இருப்போமல்லவா? நமக்கு இரண்டு காதுகளை வைத்த கடவுள், ஒரு வாயைத்தான் வைத்திருக்கிறான். ஏன்? 'நன்றாகக் கேள்; குறைவாகப்




பேசு' என்றுதான் நான் புரிந்துகொண்டேன். இது புரிந்தநாள் முதல் எனக்கு உறவுகள் இனிக்கின்றன.

(அடுத்த இதழில் முடிக்கிறேன்)



# என்ன BOOK வாங்கலாம்?

இது புக் ஃபேர் சீசன். நிறைய புத்தகங்களை வாங்கி நிறைய படிக்க வேண்டும் என்று நிறைய பேர் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் எந்த மாதிரியான புத்தகங்களை வாங்க வேண்டும் என்று யாராவது இதுவரை தெளிவாகச் சொல்லியிருக்கிறார்களா? கவலை வேண்டாம். இதோ உங்களுக்கான சில முக்கிய டிப்ஸ்.

● **'எ**ப்படி' என்ற கேள்விக்குறியுடன் வரும் புத்தகங்களைப் பிரிக்கவே வேண்டாம். 30 நாட்களில் சீன மொழி கற்றுக் கொள்வது எப்படி? வீட்டிலிருந்தபடியே ஜெட் விமானம் ஓட்டுவது எப்படி? ஐந்தே வாரத்தில் அமெரிக்க பிரதமராவது எப்படி? இத்தகைய எப்படி புத்தகங்களின் அட்டகாசம் சொல்லி மாளவில்லை. (30 நாட்களில் சீன மொழி கற்றுக் கொள்வது சீனர்களுக்கே சாத்தியமில்லை. வீட்டிலிருந்து ஜெட் ஓட்ட முடியாது. சுவரில் இடிக்கும். ஜெட் கொஞ்சம் பெரியது. அமெரிக்காவுக்கு ஒரு ஜார்ஜ் புஷ் போதும்).

● புதுக் கவிதைகள், ஹைக்கூ வேண்டாம். குட்டியாக எழுதுகிறேன் பேர் வழி என்று தன் தாத்தா வீட்டுச் சொத்து கரைந்துவிடுவதைப் போல ஒரு முழு தாளில் இரண்டே முக்கால் வரிதான்



எழுதுவார்கள். 120 பக்க புத்தகத்தில் 120 வரிகள் மொத்தமாகத் தேறினால் அதிகம். குழந்தைகள் கணக்கு போட்டுப் பார்க்க, ரஃப் நோட்டாக பயன்படுத்த அல்லது இல்லத்தரசிகள் கோலம் போட்டுப் பார்க்க வேண்டுமானால் வாங்கிக் கொடுக்கலாம்.

• 'இறைஞ்சல்களின் இடைவெளியில் நகர்ந்து செல்லும் படிமத்துகள்கள் பரிணாம உந்துசக்தியின் கிளர்ச்சியினால் தனது பயன்பாட்டுத் தளத்தை விட்டு...' முதல் வரி இப்படித் தொடங்கினால், புத்தகத்தை அப்படியே மூடி, எங்கிருந்து எடுத்தீர்களோ அங்கேயே வைத்து விட்டு திரும்பிப் பார்க்காமல் நகர்ந்து விடுங்கள். படித்த எல்லாவற்றையும் கெட்ட கனவாக நினைத்து மறந்துவிடுங்கள்.





• ஆட்டோ வைத்து மட்டுமே அழைத்துச் செல்லத்தக்க பிரமாண்ட புத்தகங்கள் வேண்டாம். உடற்பயிற்சிக்கு பிரத்தியேகமாக வேறு சில கருவிகள் உள்ளன. ட்ரைனில் எடுத்துப்போனால் லக்கேஜ் போடுவார்களா என்று ஒரு முறைக்கு இரு முறை கேட்டு உறுதிசெய்து கொள்ளவும்.

• 150 பக்க புத்தகத்தில் 60 பக்கங்களுக்கு மேல் முன்னுரை நீண்டால் ஒரு கும்பிடுபோட்டு விட்டு நகர்ந்து விடுங்கள். அதே போல் ஏழு பேருக்கு மேல் மதிப்புரை எழுதியிருந்தால் அந்தப் புத்தகத்தை யாராவது சும்மா கொடுத்தாலும் வாங்க வேண்டாம். அந்த ஏழு புண்ணிய ஆத்மாக்களும் ஒரே ஊரில் ஒரே ஸ்கூலில் ஒரே பெஞ்சில் ஆசிரியரோடு படித்தவர்களாக இருப்பார்கள். இளகிய மனம் கொண்டவர்களாக இருக்கலாம்.

• பிரெஞ்சு, ரஷ்யா மற்றும் கிழக்காப்பிரிக்க பிராந்திய மொழிகள் தெரிந்தால்தான் அந்தக் குறிப்பிட்ட தமிழ்ப்

புத்தகத்தைப் படிக்க முடியும் என்றால் அப்படிப்பட்ட புத்தகமே வேண்டாம். அதற்கு பிரெஞ்சு, ரஷ்ய புத்தகங்களையே தடவித் தடவி படித்துவிடலாம்.

• பில்லி, சூனியம், முற்பிறவி பயன், வருங்கால ஆருடம், ஆவியுலக அனுபவங்கள், குட்டிச் சாத்தான் குறிப்புகள் போன்ற அமானுஷ்ய சங்கதிகள் வேண்டாம். தரையில் நடக்கும் சங்கதிகள் எவ்வளவோ உள்ளன. மேலும் வீட்டில் குழந்தைகள் யாராவது பிரித்துப் படித்து ஜன்னி வந்துவிட்டால் சிரமம் உங்களுக்குத்தான்.

• பரிசோதனை முயற்சிகள் வேண்டாம். லெபாரட்டரியில் எலி, முயல் போன்ற அப்பிராணி ஜந்துக்களைத்தான் கூண்டில் அடக்கி எதையாவது செய்வார்கள். புத்தகத்தில் அப்படிச் செய்திருந்தால் அந்தப் புத்தகம் பக்கமே தலை வைத்துப் படுக்காதீர்கள். அதாவது நீங்கள் எலியோகவோ முயலாகவோ இல்லாத பட்சத்தில்.

• புத்தகத்தின் தலைப்பைவிட ஆசிரியரின் ஃபான்ட் சைஸ் பெரிதாக இருந்தால் நகர்ந்துவிடுங்கள். ஆறு முறை படித்துவிட்டு அரை மணி நேரம் சேர் போட்டு உட்கார்ந்து யோசித்தால்தான் தலைப்பே புரிகிறது என்றால் அத்தகைய அபத்தங்கள் எதற்கு? எ-கா. எதிரொலியின் எதிர்புற நேர் குரல், உட்புறத்தின் வெளிப்புற ஜன்னல், பூட்டப்படாத அறையின் டூப்ளிகேட் சாவி.

''மனைவி இல்லாம கை ஒடிஞ்ச மாதிரி இருக்கு.''

''எனக்கு அவ இருந்தாத்தான் கை ஒடியும்.''

\- மாணிக்கவாசகம்



• ஆராய்ச்சி வகையறாக்களை கவனமாக அணுக வேண்டும். பரி மேலழகருக்கு பிலடெல்ஃபியாவில் ஒரு ஏக்கர் நிலம் இருந்தது, திருவள்ளுவர் உண்மையில் ஆப்பிரிக்கர், தபால் மூலமாகத்தான் தமிழ் பயின்றார், சங்க இலக்கியங்கள் லேப்டாப்பில்தான் எழுதப்பட்டன போன்ற வாதங்களை தக்க ஆதாரங்களுடன் முன் வைக்கும் புத்தகங்களைத் தொட்டுக் கும்பிட்டுவிட்டு நகர்ந்து விடுங்கள்.

• 'மணிப்பூர் முத்து விழாவில் பரிசு பெற்ற புத்தகம்' 'அரங்கசாமி அறக்கட்டளையால் பரிந்துரைக்கப்பட்ட புத்தகம்' போன்ற அறிவிப்போடு வரும் 'புத்தகங்கள் வேண்டாம். காரணம் 1.மணிப்பூரில் யாருக்கும் தமிழ் தெரியாது. காரணம் 2. அரங்கசாமி யார் என்று யாருக்குமே தெரியாது.

• பழைய கடுதாசிகளின் தொகுப்பு, 18ஆம் நூற்றாண்டு தலையங்கச் செய்திகள் போன்றவை வேண்டாம். ஏணி வைத்து பரணில் ஏறினால் இவற்றைவிட சுவாரஸ்யமான சங்கதிகள் உங்கள் வீட்டிலேயே கிடைக்கும்.

• ஆசிரியரின் பெயர் பயமுறுத்துவது போல் இருந்தால் அந்தப் புத்தகம் பக்கமே நெருங்க வேண்டாம். சில உதாரணங்கள்: சித்தலைச் சாத்த சாந்தனார், கழண்சு, பூமன.

ஆராய்ச்சியாளர்

**மருதன்**

# வாய்ப்புகளின் வாசல்!

மரபின்மைந்தன் முத்தையா

காட்டில் அந்தச் சிங்கம் ஒவ்வொரு விடியலிலும் விழிக்கிறது. அந்தக் காட்டிலேயே அதிவேகமாக ஓடுகிற முயலை விடவும் வேகமாய்த் தான் ஓட வேண்டுமென்று தீர்மானிக்கிறது. இல்லையேல், பசியால் சாக வேண்டுமென்று சிங்கத்துக்குத் தெரியும். அதே காட்டில் முயல் ஒவ்வொரு விடியலிலும் விழிக்கிறது. அந்தக் காட்டின் சிங்கத்தை விடவும் அதிவேகமாய்த் தான் ஓட வேண்டுமென்று தீர்மானிக்கிறது. இல்லையேல், அடிபட்டுச் சாகவேண்டுமென்று முயலுக்குத் தெரியும். நீங்கள் சிங்கமானாலும் சரி, முயலானாலும் சரி, ஒவ்வொரு விடியலிலும் ஓடத் தொடங்குங்கள்!

- ஆப்பிரிக்கப் பழமொழி

இந்தத் தொடரின் முதல் அத்தியாயத்தைப் படித்துவிட்டு ஒரு நண்பர், சந்தேகம் கேட்டார். ''ஏன் சார்? வானவில், வந்து போகிற ஒன்று. வாலிபம் கொஞ்ச காலம்தான் இருக்கும்ங்கிற தத்துவத்தைத்தான் வானவில் வயசுன்னு சொல்றீங்களா?'' என்றார். இந்த அத்தியாயத்தின் இறுதிக்குள் அவருக்குப் பதில் சொல்லிவிடுவோம்.

நம் வாழ்வின் சுவாரஸ்யமான அம்சமே, எப்போதும் ஏதோ ஒன்றைத் துரத்துகிறோம். அதே நேரம் ஏதேனும் ஒன்றால் துரத்தப்படுகிறோம். காலை வேளையில் ஓர் இளைஞன், பஸ் நிலையத்தில் ஒரு பட்சியைத் துரத்துகிறான். அது ஏடாகூடமானால் அவனை போலீஸ் துரத்துகிறது. காதல் கைகூடிவிட்டாலோ இருவரையும் கனவுகள் துரத்துகின்றன.

துரத்துவதும், துரத்தப்படுவதும்தான் வாழ்க்கை. ஆப்பிரிக்கப் பழமொழி அடையாளம் காட்டுகிற சிங்கமும் முயலும் மாதிரி ஓடத்தான் வேண்டும். அந்த ஓட்டத்தை வேண்டா வெறுப்பாகச் செய்தால், அந்த வெறுப்பையும் தூக்கிக் கொண்டு ஓட வேண்டியிருக்கிறது. சும்மா ஓடுவதைவிட சுமையோடு ஓடுவதில் சிரமம் அதிகம். இலட்சியத்தை நோக்கி ஒவ்வொரு விடியலிலும் ஓட வேண்டும் நாம்.

இதில் வேடிக்கை என்னவென்றால், இளமைப் பருவத்தில் நாம் வகுத்துக் கொள்கிற இலட்சியம் நம்மைத் தவிர யாருக்கும் புரியாது. அதனால் தான் நம்மை அலட்சியம் செய்கிறார்கள்.

விளம்பரப் படம் ஒன்றில் நடிக்கும் வாய்ப்புக் கேட்டு அந்த இளம் பெண் ஓர் இயக்குநரைச் சந்தித்தார். ஒத்திகைக்குப் பிறகு அந்த இயக்குநர் சொன்னார், "ஒன்று திருமணம் செய்து கொள்! அல்லது கிளார்க் வேலை பார்! உனக்கு நடிக்க வராது" என்று. அந்தப் பெண் மனம் தளரவில்லை. முயன்று முயன்று உழைத்தார். நடிகையானார். அவரை உலகமே கொண்டாடியது. அவர் பெயர் மார்லின் மன்றோ.

ஆமாம்! ஆரம்பத்தில் நம் இலட்சியம் நமக்கு மட்டுமே புரியும். அது நமக்குச் சாத்தியம் என்பதும் நமக்கு மட்டுமே தெரியும். தொடர்ந்து முயற்சி செய்யச் செய்ய





வானவில் வயசு 2

இலக்கை எட்ட முடியும்.

ஒரு காலத்தில் "கடுமையாக உழைப்பது" என்ற வார்த்தைப் பிரயோகம் ஏகத்திற்குப் புழங்கியது. அதனால் பலர், "உழைப்பதே கடுமையான விஷயம்" என்று முடிவு செய்து முடங்கிக்கொண்டு விட்டார்கள்.

உண்மையில், வாழ்க்கையில் ஜெயிக்க வேண்டுமென்றால், கடுமையான உழைப்பு அவசியமில்லை. முழுமையான உழைப்புதான் அவசியம். முழுமையாகத் திட்டமிட்டுக் கொண்டு முழு ஈடுபாட்டுடன் உழைக்கும்போது, உழைத்த களைப்பே தெரியாது.

கடவுளின் இத்தனை அவதாரங்கள் இருக்கும்போது, கண்ணனை மட்டும் எல்லோரும் கொண்டாடுகிறார்களே, ஏன்? எல்லோரும் முக்கிக் கொண்டும் முனகிக் கொண்டும் செய்யக்கூடிய வேலைகளையெல்லாம் கண்ணன் மகிழ்ச்சியோடு செய்தான். நாம் மேசையைத் தூக்கினாலே மேல் மூச்சு வாங்குகிறது. ஒரு மலையைத் தூக்குவது கூட அவனுக்கு மகிழ்ச்சியான விஷயமாகத்தான் இருந்தது.

அதனால்தான், அவன் செய்த வேலை

களை வேலை என்று சொல்வதில்லை. 'லீலை' என்று சொல்கிறோம். வேலை செய்பவர்கள் நடுவே லீலை செய்ததுதான் கண்ணனின் தனிச் சிறப்பு. வேலையை லீலையாகச் செய்வதுதானே சாமர்த்தியம்.

எப்போது முழு ஈடுபாடுடன் ஒன்றை மேற்கொள்கிறோமோ அது மிக எளிதான காரியமாகி விடுகிறது. ஒரு துறவி சிறுமூட்டையைச் சுமந்து கொண்டு திணறித் திணறி மலையேறிக் கொண்டிருந்தார். அவருக்கு முன்னே பதினான்கு வயதுச் சிறுமி தன் எட்டு வயதுத் தம்பியை தூக்கிக் கொண்டு உற்சாகமாக மலையேறிக் கொண்டிருந்தாள். துறவி கேட்டார். "என்னால் இந்த மூட்டையையே தூக்க முடியவில்லையே, நீ எப்படி அந்தச் சிறுவனைச் சுமக்கிறாய்'' என்று. சிறுமி பதில் சொன்னாள், ''சுவாமி! நீங்கள் சுமையைத் தூக்குகிறீர்கள். நான் என் தம்பியைத் தூக்குகிறேன். அதுதான் வித்தியாசம்" என்று.

''மருமகள் கொடுமை தாங்க முடியாம வீட்டை விட்டு வந்துட்டீங்களா?''

''ஆமாம், வெள்ள நிவாரண உதவி வாங்கிட்டு வரச் சொல்லி கட்டாயப்படுத்தறா''

- சிவகாமி சுந்தர்



பாடப்புத்தகம் சுமப்பதும், கம்ப்யூட்டர் கிளாஸுக்குப் போவதும், புதிய புதிய பயிற்சிகளை மேற்கொள்வதும், நம் எதிர்காலத்துக்காகத்தான் என்கிற எண்ணம் இருந்தால், சலிப்பு ஏற்படாது. யாரிடமோ மதிப்பெண் வாங்குவதற்கல்ல இத்தனையும். நம்மை நாமே தகுதிப்படுத்திக் கொள்ளத்தான் இத்தனையும்.

இன்னும் பத்து வருடங்கள் கழித்து, மியூசியத்தில் வைக்கப்படக் கூடியது எது தெரியுமா? பரிந்துரைக் கடிதங்கள்தான். ஆமாம்! அவரவர் தங்கள் சொந்தத் தகுதியை நிரூபித்துத்தான் வேலை வாங்க முடியுமே தவிர, பரிந்துரைகளால் பலன் கிடையாது. வாய்ப்புகளின் வாசல்களைத் திறக்கப் போவது பரிந்துரைகள் அல்ல. தகுதிகள்தான்.

தகுதியும் திறமையும் இருப்பவர்களை வாரிச் சென்று உச்சத்தில் உட்கார வைக்க வாழ்க்கை காத்திருக்கிறது. "தகுதியுள்ளதே வாழும்" என்பதே இன்றைய உலக மானுடத்தின் ஒற்றைப் பொது விதி.

குழந்தைப் பருவத்தில் மயிலிறகும் கிளிஞ்சலும் சேகரித்த அதே உற்சாகத்தோடு தகவல்களை - திறமைகளை - தொடர்புகளைச் சேகரியுங்கள்.

விதவிதமான வண்ணங்கள் வானவில்லுக்கு இருப்பது மாதிரி விதவிதமான திறமைகளைச் சேர்த்துக் கொள்கிறபோது வாழ்க்கை அழகாகிறது.

இன்று திரும்பும் திசையெல்லாம் சாப்பாட்டை விடவும் சாஃப்ட்வேர்தான் முக்கியமாகப் பேசப்படுகிறது. சாஃப்ட்வேர் எழுதுகிற திறமைக்கு எது அடிப்படை? சமூகத்தின் தேவைகளைப் புரிந்து கொள்வதுதான் அடிப்படை. வாடிக்கையாளரின் வணிகத்திற்குக் கைகொடுக்கும் புதுமைகளை அறிமுகம் செய்து வடிவமைக்கிற மென்பொருள்தான் இன்று பெரும்பொருள் ஈட்டக் கை கொடுக்கிறது.

அதனால், இந்தத் தலைமுறையைப் பொறுத்தவரை, வாலிபம் என்பது வந்து போகிற வானவில் போன்றதல்ல. வானத்தையே வில்லாக வளைப்பதற்குரிய வாய்ப்புகள் உள்ள வயசு... வானவில் வயசு!

அது சரி... நம் வாலிபர்களுக்கு மென்பொருள் புரிந்த அளவு மனிதர்களைப் புரிந்திருக்கிறதா?

(பேசலாம்)

படம்: ஸ்ரீஹரி



# தவமாய் தவமிருந்து...

"த்தா... த்தா..." என்று ஒரு வயது நிரம்பிய தௌபீக், அத்தா ஜாகிரின் காலை கட்டிக் கொள்ள... ஜாகிர் மெதுவாக அவனைத் தூக்கி, "போங்க... அம்மாகிட்டே போங்க..." என்று மனைவி தாஹிராவிடம் கொடுத்தான்.

தாஹிரா, ஜாகிரை முறைத்தபடி மகனைப் பெற்றுக் கொண்டாள். கோபம் கோபமாக வந்தது! திருமணம் முடிந்து ஒரு மாதம் மட்டுமே அவளோடு இருந்தான். பிறகு கம்பெனியிலிருந்து அழைப்பு வரவே, புருனேவுக்குப் புறப்பட்டுப் போய் விட்டான். இங்கே அவன் நினைவுகளோடு தௌபீக்கை பெற்றெடுத்தாள் தாஹிரா. இதோ மறுபடியும் லீவில் இந்தியா வந்திருக்கிறான். அவன் ரத்தத்தில் உருவான உயிர் இந்தக் குழந்தை. ஒவ்வொரு முறையும் குழந்தை மழலை மொழியில் 'அத்தா... அத்தா...' என அவன் அருகில் போகும் பொழுதெல்லாம் குழந்தையைத் தூக்கிக் கொஞ்சாமல் திரும்ப தாஹிராவிடமே ஒப்படைத்து விடுவான்.

அவளுக்கு அழுகை அழுகையாய் வந்தது!

இரவு.

"ஏய் தாஹிரா, ஏன் ஒரு மாதிரியா இருக்கே?" - ஜாகிர் கேட்க, அவளிடம் மௌனம்.

"கேக்குறேன்ல சொல்லு... ஏன் ஒரு மாதிரியா இருக்கே?" அவளின் தாடையைத் தொட்டுக் கேட்டான்.

"நிக்காஹ் முடிஞ்சு ஒரு மாசத்துலயே புருனே போய்ட்டீங்க. அப்பக்கூட நான் வருத்தப்படல. ஏன்னா, நாம நல்லாயிருக்கணும்னுதான் நாடு கடந்து போய் சம்பாதிக்கிறீங்கன்னு எனக்கு நானே ஆறுதல் சொல்லிக்கிட்டேன். ஆனா, நாம தவமா தவமிருந்து பெத்த தௌபீக், ஒவ்வொரு தடவை உங்ககிட்ட வர்றப்ப எல்லாம், நீங்க அவனை தூக்கி என்கிட்டே கொடுத்துடறீங்க... ஏன், உங்க மகன் மேல பாசமே கிடையாதா?" மேற்கொண்டு பேச முடியாமல் தாஹிரா அழுதுவிட்டாள்.

ஜாகிர் பதறிவிட்டான்.

"ஏய் இதுக்குத்தானா இந்தக் கோபம்... நானே ஒரு மாச லீவுலதான் வந்திருக்கேன். இந்த ஒரு மாசத்துல தௌபீக் என் மேல ரொம்பப் பாசமா ஒட்டிக்கிட்டான்னு வச்சிக்க... லீவு முடிஞ்சி நான் திரும்ப போறப்ப என்னோட பிரிவை அவன் தாங்கிக்குவானா...? யோசிச்சுப் பாரு... அது பிஞ்சுக் குழந்தை... எதையோ பறிகொடுத்தவன் மாதிரி இருப்பான். என்னாலயும் போய் நிம்மதியா இருக்க முடியாது. அதான்... அப்படி நடந்துக்கிட்டேன்." ○

திட்டை ஜே. நஷீர்கான்

# இளமை கல்கி

"என்னப்பா, போன வருஷம் பார்த்ததுக்கும் இப்பத்திக்கும் ஆளே மாறிட்ட!"

"நீயாடி இது! உலக அழகியா ஜொலிச்சவ இப்படி உள்ளூர்க் கிழவியா யிட்ட!"

- இதுபோன்ற விசாரிப்புகளை நம்மூரில் கேட்காதவர்கள் குறைவுதான்.

முதுமையில் இழக்க வேண்டிய இளமையை, இப்போதெல்லாம் இள வயதிலேயே இழந்துவிடுகிறார்கள் மக்கள், குறிப்பாக, இளைய தலைமுறையினர். இதற்கெல்லாம் என்ன காரணம்? மும்பை 'காயா ஸ்கின் க்ளினிக்'கின் அழகியல் நிபுணர் மைதிலி காமத் சொல்வதைக் கேளுங்கள்...

"இதுவரைக்கும் இந்தியாவில் 'ஸ்கின் ஏஜிங்' என்கிற வினோத குறைபாட்டினால் பாதிக்கப்பட்ட ஆயிரக்கணக்கானவர்களுக்கு சிகிச்சை அளித்த அனுபவத்தில் சொல்கிறேன், இளைஞர்கள் உஷாராக இருக்க வேண்டிய காலமிது.

ஒருவருடைய திறமையை வைத்தோ, குரலை வைத்தோ வயதைக் கண்டுபிடிப்பதில்லை. தோலின் தன்மையை வைத்துத்தான் வயதும், இளமையும் நிர்ணயிக்கப்படுகின்றன. நம் உடலில் தோல்தான் வெகுவேகமாக வளரும். ஆனால் இப்பொழுதெல்லாம் தோல் சுருக்கங்கள், தோல் பளபளப்பின்மை, தோலில் உண்டாகும் நுண்ணிய துளைகள் போன்றவை வெகு சீக்கிரமே ஏற்பட்டு விடுகின்றன. வெயில், மது, குடிப்பழக்கம், வாழ்க்கை முறை இவற்றின் காரணமாக, இளமையை, இள வயதிலேயே இழந்து தவிக்கிறார்கள் இன்றைய இளைஞர்கள்.

காய்ச்சல், தலைவலி போல், ஸ்கின் ஏஜிங்கிற்கும் இன்று மருத்துவம் வந்துவிட்டது. முகத்தில், தோலின் மினுமினுப்பில் கத்தியை டச் பண்ணாமல் ஊசி, மருந்து மாத்திரைகள் வழியாகவே இதற்கான சிகிச்சைகள் மேற்கொள்ளப்படுகின்றன. உங்களின் ஸ்கின்னுக்கு ஸ்கோர் எல்லாம் கொடுத்து அதன் வயதை நிர்ணயிப்பார்கள். இளமையைக் காதலிப்பவர்கள் உடனே விழித்துக் கொள்ளுங்கள்" என்று கூறும் மைதிலியிடம்,

"உங்க ஸ்கோர் என்ன மேடம்" என்றால், புன்னகைத்தபடி, "என் வயதை விட அதிகம்தான்" என்று ஒப்புக்கொள்கிறார். ஆச்சர்யம்!

- செந்தில்

படம்: ஓம்

# காதலின் நிறம் என்ன?

தன் வாழ்நாளிலேயே ஒரு உருப்படியான சங்கதியை முதல் முதலாக அச்சிட்டு உலகக் காதலர்களின் ஏகோபித்த பாராட்டைச் சம்பாதித்துக்கொண்டுள்ளது நேச்சர் (Nature). காதலர்கள் மிகவும் ரசித்த அந்த ஆராய்ச்சிக் கட்டுரையின் முடிவு இதுதான்: சிவப்பு நிறத்தை பயன்படுத்துபவர் கைவிடப்படார். அதாவது, சிவப்பு காதலுக்கு உகந்த நிறம். எப்படிச் சொல்கிறார்கள்? இரண்டு முக்கிய கண்டுபிடிப்புகளை நிகழ்த்திய பிறகு.

ஒன்று, ஒரு வகையான பஃபூன் குரங்கு தனது காதலியைக் கவர்வதற்கு தனது முகத்தைச் சிவப்பாக்கிக் கொள்ளுமாம். சிவப்பான முகத்தைப் பார்த்ததும் 'ஆஹா' என்று அகமகிழ்ந்து காதலி குரங்கு துள்ளிக் குதித்து ஓடி வந்து ஒட்டிக் கொள்ளுமாம்.

இரண்டு, ஜீப்ரா - கொத்தி வகை குட்டி







# இளமை மீது காதலா?

ஆண் பறவையைப் பிடித்து வந்து அதன் காலில் சிவப்பு வளையத்தை மாட்டி பறக்க விட்டிருக்கிறார்கள். அதாவது பறக்க விட்டுவிட்டு வேடிக்கை பார்த்திருக்கிறார்கள். தன் பாட்டுக்கு தேமேவென்று பறந்து சென்ற அந்த குட்டிக் குருவியைக் கண்ட குட்டி பெண் குருவிகள், வலிய வந்து 'ஹாய்' சொல்லியதாம்.

இந்த இரண்டு கண்டுபிடிப்புகளிலிருந்து நாம் கிரகித்துக் கொள்ள வேண்டியவை என்ன? முகத்தைச் சிவப்பாக்கிக் கொள்வது சாத்தியமல்ல. சாந்து, பெயிண்ட் எல்லாம் அடித்துக்கொண்டு போனால் பார்க்கச் சகிக்காது. காலில் ஒற்றை சிவப்பு வளையத்தை மாட்டிக் கொள்வதும் உகந்ததல்ல. ஐ லவ் யூ லெட்டரை நீட்டும்பொழுது தடுக்கி விழுந்தால் பார்க்க அவ்வளவு நன்றாகயிருக்காது. குரங்குக்கும், குருவிக்கும் வேண்டுமானால் இவை ஒத்துவரலாம், நமக்கு... ஊஹூம்.

இப்படிச் செய்யலாம்... சிவப்பு சட்டை, சிவப்பு பேண்ட், சிவப்பு ஷூ அணிந்துகொண்டு காதலி முன்னால் போய் நின்று சிவப்புநிற அட்டையுடன் சிவப்பு நிற ரோஜாவையும் நீட்டலாம். முகம் சிவந்து, உதடுகள் சிவக்க உங்கள் காதலி படபடப்புடன் நகத்தைக் கடித்தபடி உங்களைப் பார்த்து புன்னகைக்கலாம். அவனை வசீகரிக்க விரும்பும் அவளுக்கு - சிவப்பு துப்பட்டா, சிவப்பு கடிதார், சிவப்பு ஜிமிக்கி, சிவப்பு நெயில் பாலிஷ், சிவப்பு ஸ்டிக்கர் பொட்டு.

நேச்சர் சொல்லாததும் நிகழலாம். முழு நீள அபாய சிக்னல் போல் வந்து நிற்கும் உங்களைப் பார்த்துப் புறங்கையால் வாயைப் பொத்தி வீறிடலாம். வீறிட்டு முடித்த கையோடு (அல்லது வாயோடு) பளார் என்று உங்கள் கன்னங்களைச் சிவக்க வைக்கலாம். 'பார்த்தீங்களா அப்பக்கூட ரெட்டாதானே அறை விழுந்திருக்கு' என்பார் நேச்சர் ஆராய்ச்சிக்காரர். கவனமாகப் பார்த்து முன்னேறுங்கள்.

- மருதன்



# ஹர்பஜன் 143?

**பொ**துவாக விக்கெட் எடுத்தால் நம்ம பஜ்ஜி (ஹர்பஜன் சிங்) பிட்சிலேயே அசத்தலாக ஆட்டம் போடுவார். பிட்சில் ஆட்டம் போட்டவர், தற்போது ஒரு பாப் ஆல்பத்தில் பாட்டுப் பாடி ஆட்டம் போட்டுக் கலக்கியிருக்கிறார். தன்னுடைய பால்ய நண்பர் தேஜி சாந்துவின் பஞ்சாபி ஆல்பம் ஒன்றுக்காகத்தான் இத்தனை கூத்தும்.

'கோரி' (அழகிய மங்கை) என்று பெயரிடப்பட்டுள்ள இந்த ஆல்பத்தில் மொத்தம் பத்துப் பாடல்கள். இவற்றை எழுதியவர் பிரபல பஞ்சாபி நகைச்சுவை நடிகரான குர்ப்ரீட் குக்கி. இந்த ஆல்பத்தில் பஜ்ஜியோடு ஜோடி போட்டு டூயட் ஆடியிருப்பது யார் தெரியுமா? லக்ஸ் சோப் மாடல் ஷ்வேதாதான்... அதுதான் பஜ்ஜி மணக்க மணக்க ஆடியிருக்கிறாரோ...!

"என்னாச்சு... பஜ்ஜி... திடுதிப்புன்னு ரூட் மாறிட்டீங்க... 1...(I) 4...(Love) 3(you)...?" என்று கேட்டால்...

"ஹையோ... அப்படியெல்லாம் ஒண்ணுமில்ல. என்னோட முதல் காதலி கிரிக்கெட்தான். அதுதான் என்னோட வாழ்க்கை. அதை என்னிக்கும் மறக்க மாட்டேன். இந்த பாப் ஆல்பத்துல நான் நடிக்கறதுக்குக் காரணம் என்னோட நெருங்கிய நண்பர் தேஜிதான். இவர் ஒரு பிரபல பஞ்சாபி பாப் பாடகர். நாங்க ரெண்டு பேருமே ஒருத்தருக்கொருத்தர் பல சமயங்கள்ல உதவிக்குவோம். அதேபோல திடீர்னு

- எத்தனை வருடங்களானாலும் உலக அழகியாகவே தொடர்ந்து வாழும் சூட்சுமத்தை ஐஸ்வர்யாராய் துல்லியமாகத் தெரிந்து வைத்துள்ளார். சென்ற வருடமும் இணைய உலகில் அதிகமாகத் தேடப்பட்ட இந்திய செலிபரேட்டி ஐஸ்தான். சானியா, சச்சின், ஷாருக் எல்லாம் பின்னால்தான்.
- அமெரிக்காவின் தொலைக்காட்சி நிறுவனமான சேனல் E, உலகில் வாழும் வசீகரமான பெண்களுள் ஒருவராக ஐஸைத் தேர்ந்தெடுத்துள்ளது. மொத்தம் 101 பேர் கொண்ட பட்டியலில் டாப் 10 பட்டியலில் ஐஸ் இருக்கிறார்.
- ஐஸ்வர்யாராய் நடித்த The Last Legion, Provoked, Mistress of Spices ஆகிய மூன்று ஹாலிவுட் படங்களும் 2006-ல் வெளிவர இருக்கின்றன. ஒரு இந்திய நடிகை நடித்து ஒரே வருடத்தில் மூன்று ஹாலிவுட் படங்கள் வெளியாக இருப்பது இதுவே முதல்முறை. வெளியானால் அது ஐஸின் புதிய சாதனை.

• The Last Legion படம் மூலமாக ஐஸ்வர்யாராய், பட விநியோகஸ்தராக அவதாரமெடுத்துள்ளார்.

• கேதன் மெஹ்தா, மணிரத்னம், ரதன் ஜெயின் ஆகிய பெரிய இயக்குநர்களின் படங்களில் ஐஸ் நடிக்க இருக்கிறார்.

• விவேக் ஓபராய் - ஐஸ்வர்யா ராய் ஜோடி பிரிந்து விட்டதாக சமீபத்திய தகவல்கள் தெரிவிக்கின்றன. விவேக்கை ஐஸின் குடும்பத்தினர் அவ்வளவாக விரும்பவில்லை என்பதே காரணமாகக் கூறப்படுகிறது. ஜில்லுனு ஒரு காதல் சல்லுனு போயிடுச்சே!

- முகில்

# ஜில்லுன்னு ஒரு காதல்!



ஒருநாள் என்கிட்ட வந்து இந்த ஆல்பத்துல நடிக்கிறியா'ன்னு கேட்டார். 'என்னோட புகழ் உனக்கு உதவும்னா நான் ரெடி'ன்னு சொன்னேன். அதுக்கு ஏத்த மாதிரி இப்போ ஆல்பமும் நல்லாவே வந்திருக்கு. ரொம்ப சந்தோஷமா இருக்கு'' என்று பூரிக்கும் பஜ்ஜி.

"இந்த ஆல்பத்தை நான் கையோடு பாகிஸ்தானுக்கும் எடுத்துட்டுப் போறேன். இதுல இருக்கற பாட்டுகள், டான்ஸ் மூவ் மெண்ட்ஸ் எல்லாமே எனக்கு அத்துப் படி...

அதனால இந்திய அணி பாகிஸ்தானோட டெஸ்ட் தொடரை ஜெயிக்கற அன்னிக்கு டிரஸ்ஸிங் ரூம்ல என்னோட டீம் நண்பர்களுக்கு ஸ்பெஷலா ஆடிக் காட்டுவேன்'' என்று குதூகலிக்கிறார் பஜ்ஜி. ஆடுங்க... ஆடுங்க... ஆடிக்கிட்டே இருங்க...

- முராரி



# பரமசிவன்

"கிருஷ்ணன் வந்திருக்கிறார்" என்று அட்டெண்டர் சொல்ல,

"உடனே வரச் சொல்" என்றார் பரமசிவன்.

"வணக்கம் சார்... எப்படியிருக்கீங்க?" என்று கேட்டபடியே உள்ளே வந்தார் கிருஷ்ணன்.

"என்ன, ஒரு மாசமா ஆளையே காணோம்."

"வேலை ஜாஸ்தி. ரொம்ப பிஸி. அதான் வர முடியலே. அது சரி, உடம்பெல்லாம் எப்படியிருக்கு?"

"இருக்கு கிருஷ்ணன். ஒரு நாள் இருப்பதுபோல் அடுத்த நாள் இருப்பதில்லை." சலித்துக் கொண்டார் பரமசிவன்.

"சரி, வீசிங் ட்ரபிள் எப்படியிருக்கு?"

"இப்போ எவ்வளவோ தேவல. நீங்க சொன்ன பெரோகார்ட் ரொடேடர் ரொம்ப நல்லாவே வேலை செய்யுது. இத்தனைக்கும் காலையிலே ஒரே தரம்தான் யூஸ் பண்றேன். எந்தத் தொந்தரவும் இல்லே."

"வெரிகுட்... முட்டி வலி எப்படியிருக்கு?"

"நீங்க தந்த ஆயுர்வேதிக் ஆயில் இன்னமும் யூஸ் பண்றேன். எப்பவாவது ஒரு தரம் கொஞ்சம் வலிக்கத்தான் செய்யுது."

"கிளைமேட் ரொம்ப மோசமாயிருக்கில்லே. கொஞ்ச நாளைக்குத் தரையிலே வெறுங்காலிலே நடக்காதீங்க. செருப்ப யூஸ் பண்ணுங்க!"

"குதிகால் வலி எப்படியிருக்கு?"

"பாத்தீங்களா. சொல்லவே மறந்துட்டேன். நீங்க சொன்னபடியே பாக்கெட்ல சுடுதண்ணிவிட்டு உப்புப் போட்டு சுமார் பதினைந்து நிமிஷம் கால வச்சி வச்சி எடுத்தேன். இப்போ சுத்தமா வலியே இல்லே."

"ராத்திரியிலே தூக்கம் எப்படியிருக்கு?"

"அதான் கிருஷ்ணன். அடிக்கடி யூரின் போக எழுந்திருக்கும்போது தூக்கம் கலைஞ்சு போறதா... அப்புறம் தூக்கமே வர்றதில்லே."

"நீங்க ஒண்ணு செய்யுங்க. டின்னர் ராத்திரி எட்டு மணிக்குள்ளே முடிச்சிகிட்டு கொஞ்ச நேரம் வாக் போங்க. இரவு தண்ணியே குடிக்காதீங்க. படுக்கும்போது ஒரு டம்ளர் பால்ல கொஞ்சம் தேன்விட்டு, ஒரு சிட்டிகை மஞ்சள் போட்டுக் குடிச்சிட்டு படுத்துக்கோங்க. யூரினும் வராது. தூக்கமும் கெடாது."

"ரொம்ப தேங்க்ஸ் மிஸ்டர் கிருஷ்ணன்... நீங்க அடிக்கடி இப்படி வந்துட்டு போனீங்கன்னா எனக்குக் கொஞ்சம் தெம்பாயிருக்கும்." "கட்டாயம் வர்றேன். கவலைப்படாதீங்க" கிருஷ்ணன் புறப்பட்டார்.

"தம்பி அடுத்த பேஷண்டை வரச் சொல்" என்றார் டாக்டர் பரமசிவன் அட்டெண்டரிடம்.

மாயா கிருஷ்ணமூர்த்தி

# பீஹாரில் ஆட்சி மாறியும் காட்சி மாறவில்லையே?



* டபுள் விஸில்!

● ஆர்.ராமசுப்ரமணி, திருவாரூர்

***? சின்னத்திரை Vs பெரிய திரை மோதல் குறித்து..?***

! டீவி. பப்ளிசிட்டி சினிமாவுக்கு உதவும். ஆனால், பப்ளிசிட்டி என்ற பெயரில் சினிமாவின் சத்தான காட்சிகள் வீட்டுக்குள் புகுந்துவிட்டால் தியேட்டரில் ஈ கூட நுழையாது. ஆக மொத்தம், அணைத்துக் கொள்வதும் அடித்துக் கொள்வதும் தொடரும். Blow hot! Blow Cold!

● ஆர்.பிரகாஷ், திருச்சி-4

***? ராஜ்நாத் சிங் தலைமையில் பா.ஜ.க. தனது இழந்த பெருமையை மீட்குமா?***

! மற்ற தலைவருங்க ஒத்துழைச்சா... ஆர்.எஸ்.எஸ். - வி.எச்.பி. மனசு வைச்சு ஒதுங்கி இருந்தா... அத்தைக்கு மீசை முளைச்சா...

## நீங்கள் கேட்டவை–தராசு

● தர்மன் பெரியசாமி, சென்னை ★

***? அம்பத்தூர் பானு நகரில் அம்மனுக்கு ரூபாய் நோட்டு அலங்காரம் செய்யப்பட்டது... இப்படிச் செய்யலாமா?***

! பக்திக்குச் செய்யறோமா, பகட்டுக்குப் பண்ணுறோமா என்பதுதான் முக்கியம். உண்டியலில் போட்டா அம்போனு போயிடும்; நோட்டு மாலை போட்டா திரும்ப வரும் - அதுதான் வித்தியாசம்!



* சௌகரியமுகி!



* மனசாட்சி மீட்பு!



* மீட்புப் பணி!

● சம்பத், வேலாயுதம்பாளையம்

? மற்ற மாநிலங்களைப் போல பொதுநலன் தொடர்பான விஷயங்களில் நம் அரசியல்வாதிகள் ஒன்றிணைந்து செயல்படும் காலம், தமிழகத்தில் எப்போது வரும்...?

! அதென்ன, மற்ற மாநிலங்களைப் போல... எங்கே இருக்குது பொது நலன் தொடர்பான ஒற்றுமை? சுயநலனுக்காக வேணும்னா சேர்வாங்களே தவிர, பொது நலனுக்காக அல்ல!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

? சமீபத்தில் தங்கள் மனத்தை பாதித்த சம்பவம் பற்றி...?

! லண்டனில் இந்திய மருத்துவர்கள் வேலை கிடைக்காமல், கோயில் பிரசாதத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருப்பதுதான். மருத்துவ சேவையின்றி எத்தனையோ கிராமங்கள் இந்தியாவில் இருக்க, பணத்துக்கு ஆசைப்பட்டு இப்படிப் பரிதவிக்கும் அவர்களுடைய நிலைமை இரட்டிப்புத் துயர் தருகிறது.



* இதிகாச...



* ... நாயகர்கள்!

● எஸ்.அசாதி, பெருமாள்தேவன்பட்டி

? அத்வானியையும் பிரமோத் மகாஜனையும் ராமர் - லட்சுமணன் என்று வாஜ்பாய் ஒப்பிட்டுப் பேசியதன் மூலம், அவர் தமது அரசியல் வாரிசு பிரமோத் மகாஜனே என்று (மறைமுகமாக) அறிவிக்கிறாரா...?

! ஆளை விடுங்க. நான் இனி ராமனும் இல்லை; லட்சுமணனும் இல்லை என்று கழன்று கொள்கிறார்! நிற்க. பி.ஜே.பி. சரித்திரத்தில் ராமருக்கு (வாஜ்பாய்) பின் லட்சுமணனுக்கு (அத்வானி) பட்டம் உண்டு. (இதிகாசப்படி கிடையாது!) எனவே அத்வானிக்குப் பிறகு மகாஜன் வரவேண்டும் என்ற தமது ஆசையை வாஜ்பாய் வெளிப்படுத்தியதாகக் கருதலாம். ஆனா பரதன் அல்லவா வந்திருக்காரு.

● ஏ.எஸ். யோகானந்தம், கலிங்கியம்

? 'எந்த வகை ரத்தத்துடனும் சேரும் 'ஓ' நெகடிவ் ரத்தம் போல ம.தி.மு.க. அபூர்வமானது' என்று வைகோ பேசியிருப்பது பற்றி...?

! தேர்தல் நெருங்குது. தொகுதியில் பங்கீடு நடக்கணுமில்லே. கலைஞருக்கு எச்சரிக்கை கொடுக்கறாரு!

● எஸ்.அன்புமணி, ஈரோடு

? பீஹாரில் ஆட்சி மாறியும் காட்சி மாறவில்லையே... மனிதர்களை உயிரோடு எரித்துக் கொல்லும் பாதகம் தொடர்கிறதே?

! ஆட்சி மாறுவதுகூட சுலபம்தான். ஆனால் காட்சி மாற மனசாட்சி மாறணும். இது ரொம்பக் கஷ்டமான காரியம். பல நூற்றாண்டுகளாக வேரூன்றியுள்ள மத வேற்றுமை / ஜாதி வெறிகளைக் களைய, சம்பவம் நடந்த பிறகு நடவடிக்கை எடுத்தால் போதாது; இத்தகைய சம்பவங்கள் நடக்காமலிருக்க நிதிஷ்குமார் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் - உடனடியாக.

● ஆர்.பிரகாசம், மருதாடு

? அறிவாளியும் புத்திசாலியும் சந்தித்தால் என்ன பேசிக் கொள்வார்கள்?

! அமராவதி பாலத்தைக் கட்டியது அ.தி.மு.க. ஆட்சியா, தி.மு.க. ஆட்சியா என்பது குறித்துத்தான் பேசி விவாதிப்பார்கள்.

● ஆரூர் சேகர், சென்னை - 26

? சட்டசபை தேர்தல் வரப் போகிறதே... வாக்காளர்களுக்குத் தங்கள் அறிவுரை...?

! 'எங்கள் வாக்குகள் விற்பனைக்கு அல்ல' என்பதை வேட்பாளர்களுக்கு உணர்த்துங்கள்.

● க.மு. சுந்தரம், சங்கரன்கோவில்

*? கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டம் எப்போது நிறைவேறும்?*

! அரசியல்வாதிகளின் அற்ப சண்டைகள் ஓய்ந்து, மக்கள் நலனை அவர்கள் நினைக்கும்போது.



★ தேர்தல் க்ரூப்!

நூலாகி அழுகிறபோது, நமக்குச் சிரிப்புல்ல பொத்துக்குது! "ஏறி வாய்யா" காமெடி... டபுள் விஸில்!

● எம்.அசோக்ராஜா, திருச்சி - 15

*? சந்திரமுகியைச் சென்ற ஆண்டின் சிறந்த படமாக சன் டீ.வி. அறிவித்தது சரியான தேர்வா?*

! சன் டீ.வி.க்குச் சௌகரியமான தேர்வு!

● இரா.சக்கரபாணி, மதுரை - 7 ❒

*? தமிழ்நாட்டில் ஆளும் கட்சியும் எதிர்கட்சியும் போலி வாக்காளர்களைப் பட்டியலில் சேர்த்துள்ளது எதைக் காட்டுகிறது?*

! எல்லோருமே வெற்றிக்குக் குறுக்கு வழியைத்தான் தேடுகிறார்கள் என்பதையே உணர்த்துகிறது. ஆயினும், எதிர் கட்சியான தி.மு.க., போலி வாக்காளர் பட்டியலை எதிர்த்து குரல் கொடுத்து, போராடி பெரு வெற்றி பெற்றது. மாறாக, அ.தி.மு.க., குற்றம் புரிந்தவர்மீது தேர்தல் கமிஷன் நடவடிக்கை எடுக்கக்கூடாது என்று வழக்கு தொடுத்தது. எனவே, தி.மு.க.விலும் சிலர் ஊழல் செய்திருந்தாலும் அந்நியை அக்கட்சி எதிர்த்த அளவில் மதிப்பு பெறுகிறது.

● வே. முருகேசன், சென்னை - 88

*? இப்போது தமிழில் நம்பர் ஒன் காமெடி கலக்கல் வைகைப் புயல் வடிவேலுதானே...?*

! நெசந்தாய்யா! அதிலேயும் 'ஏ பி சி டி' படத்துல கண்டக்டரா வந்து, நொந்து

● ரேவதிப்ரியன், ஈரோடு

*? புத்தகக் கண்காட்சிக்கு ஒரு நடை சென்று வந்தீர்களா? வாசகர்களின் ஆர்வம் அதிகரித்துள்ளதா?*

! கிழக்கு, அடையாளம், உயிர்மை, சந்தியா போன்ற நவீன இலக்கிய பதிப்பகங்கள் ஆளுமை செலுத்த, ஜோதிடம், சமையல், அழகுக் குறிப்பு போன்றவை சற்றே அடக்கி வாசித்தது புதிய நம்பிக்கையைத் தந்தது.

எஸ்.அன்பு, ஈரோடு

*? 'மின்சாரக் கட்டணம் கட்டக்கூட பணம் இல்லை... எனவே தற்கொலை செய்து கொள்ள அனுமதிக்க வேண்டும்' என்று அப்துல் கலாமுக்கு, மஹாராஷ்டிர மாநில புசாடா கிராம மக்கள் கடிதம் எழுதியிருப்பது குறித்து...?*

! கெட்டிக்காரங்கதான். இப்படிக் கடிதம் எழுதியதால் கவனிக்கப்படலாம்; அல்லது தண்டிக்கப்படலாம். கவனிக்கப்பட்டால் நல்லது; தண்டிக்கப்பட்டு கம்பி எண்ணினாலும் சாப்பாட்டுக்குக் கவலை இல்லை.

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
இரா.சக்கரபாணி
38, கன்னிகா இல்லம்
சந்தனமாதா தெரு
கோ.புதூர், மதுரை - 625 007

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
தர்மன் பெரியசாமி,
3/39, சக்தி கணபதி நகர்,
மூன்றாவது தெரு, திருவொற்றியூர்,
சென்னை - 600 019.



* அறுபதுகளில் சிவாஜி...



* 'பார்த்திபன் கனவு' படத்தில்...

அந்தக் காலங்களில் பஞ்சமாபாதகங்களில் ஒன்று 'சினிமாப் பார்ப்பது' என நினைத்தார்கள் வீட்டிலிருந்த பெரியோர்கள்.

வானொலிகூட பெரியவர்கள்தான் கேட்க வேண்டும்.

சின்னஞ்சிறுவர்கள் ரேடியோ பெட்டியைப் பார்க்கலாமே தவிர, தொடக் கூடாது. சினிப்பாட்டு கேட்கவே கூடாது.

கதைப்புத்தகம் படித்து அடி வாங்கிய வீர வரலாறுகளும் உண்டு.

எங்கள் தந்தையார் பள்ளிக்கூட ஆசிரியர், அதிலும் தமிழாசிரியர். எனவே கோபமும், கண்டிப்பும் எப்போதும் 20% அதிகமாகவே அவரிடம் காணப்படும்.

செய்திகள், கர்நாடக சங்கீதம், இலக்கியப் பேச்சு இவைதான் எங்கள் வீட்டு ரேடியோவில் கேட்கலாம்.

ஒருநாள் எல்லோரும் வெளியூர் போயிருந்தபோது நான் ரேடியோவை நெருங்கி ஸ்விட்ச் போட்டு எல்லாவற்றையும் திருகி தெருவே அலறவிட்டபோது, சொல்லி வைத்தாற்போல வெளியூர் போன அத்தனை பேரும் எங்கள் அப்பா தலைமையில் உள்ளே நுழைந்து என்னை 'ஷிப்டு' முறையில் அடித்தார்கள். தெருவில் என்மீது கோபம் கொண்ட பல பெரியவர்கள், மாமா, மாமிகள் அந்தக் காட்சியில் பார்வையாளர்களாகப் பங்கேற்று, என்னை மேலும் கண்டித்து வளர்ப்பதற்குப் பல யோசனைகள் சொல்லி மகிழ்ச்சியோடு சென்றார்கள். அதில் ஓரிரு புண்ணியவான்கள் 'எப்பவுமே குழந்தைகளைக் கையால் அடிக்கக் கூடாதுங்க; நம்ம பிள்ளைகள் இல்லையா? இந்த மாதிரி புளியங்குச்சியிலதான் அடிக்கணும்' என்று சொல்லி இலவச ஆயுத சப்ளை செய்துவிட்டு, விரைந்து சென்றனர்.

அப்புறம் நான் ரேடியோவைத் தொடுவதில்லை. இப்போது எங்கள் வீட்டில் ரேடியோ, டீ.வி, வி.சி.டி எல்லாம் உள்ளன. போனவாரம்

கு.ஞானசம்பந்தம்

# 2

# புளியங்குச்சி புண்ணியவான்கள்!

நான் டி.வி.டி பிளேயரை மெது வாகப் போட்டுப் பார்த்தேன். திடீரென்று டீ.வி திரையில் பலர் தோன்றி பலரை அடித்தார்கள், பயங்கரச் சத்தம்.

என் மகன், மகள், மனைவி அனைவரும் ஆளுக்கொரு அறையிலிருந்து ஓடிவந்து அதை நிறுத்திவிட்டு,

'இதையெல்லாம் தொடாதீர்கள் என்று எத்தனை தரம் சொல்லியிருக்கிறோம்' என்று கோபித்துக் கொண்டார்கள். நல்லவேளை பக்கத்து வீட்டுக்காரர்கள் புளியங்குச்சியோடு வரவில்லை என்று மகிழ்ந்தேன்.

கிராமத்தில் சினிமாவுக்குப் போவதென்பது மிகப்பெரிய சந்தோஷமான விஷயங்களில் ஒன்று. அப்போதெல்லாம் (1960களில்) சினிமா ஒன்று தான் எளியவர்களின் முழுப் பொழுதுபோக்கு சாதனம்.

குடும்பத்தோடு போவதாக முடிவு செய்தால் ஒரு வாரத்துக்கு முன்னரே நாங்கள் கூடிக் கூடிப் பேசுவோம். அப்போது ஊரில் ஓடிக் கொண் டிருக்கும் படத்தின் பாடல்களை, வசனங் களை, காட்சிகளை ஆகா, ஓகோ என்று எங்கள் அப்பாவின் காதுபடப் பேசிக் கொள் வோம்.



எங்களின் தந்தையார் அதிகம் சினிமா பார்க்க மாட்டார். நாங்கள் பார்ப்பதையும் விரும்ப மாட் டார். அந்த வாரத்தில் என்றைக்கு சினி மாவுக்குப் போவது என்பதற்கான நாள், நட்சத்திரம் பார்க்கப்படும்.

முதலில் எல்லோருக் கும் நேர்முகப் போட்டி தேர்வு நடக்கும்.

'உனக்குப் பரீட்சை இருக்கா?'

'இல்லை.'

'உனக்கு?'

'இல்லை.'

'உனக்கு?'

'இல்லவே இல்லை' என்று என் குரலில் உள்ள உற்சாகத் தைச் சந்தேகத்தோடு பார்க்கும் அவர், மறுநாளில் என் ஸ்கூல் வாத்தியாரிடம் அதனை உறுதி செய்து கொள்வார்.

அன்று சூரியன் கிழக்கே மகிழ்ச்சியோடு உதித்தான் (நாங்கள் சினிமாவுக்குப்

போவதை அறிந்து - இது தற்குறிப்பேற்று அணி) வீட்டில் சொல்லாமலே வேலைகள் விரைவாக நடைபெற்றன.

அசோகர் மரம் நட்டதற்கான காரணத்தையும், பானிப்பட்டுப் போர்கள் நடந்ததால் ஆயிரக்கணக்கான பேர் இறந்து போனதையும் நான் சந்தோஷமாகப் படித்துக்கொண்டே மாலையில் போகப் போகும் படத்தைப் பற்றி நினைத்துக்கொண்டிருந்தேன்.

எப்படித்தான் சந்தோஷமாக இருந்தாலும் எனக்கும் என் தாயாருக்கும், சகோதரிகளுக்கும் உள்ளூர ஒரு பயம் உண்டு. எந்த நேரத்திலும் சினிமா அனுமதி ரத்தாகலாம்.

சிறப்பு விருந்தினர் (அறுவைகள்) வருகை, பஞ்ச பூதங்களின் மாற்றம் (மழை வருதல்) என் அப்பாவின் மன நிலை... நல்ல வேளை ஒன்றும் நடக்கவில்லை.

வாசலில் சகுனம் பார்க்கச் சென்ற என் சகோதரி மிக மகிழ்ச்சியாக ஓடி வந்தாள். ''நல்ல சகுனம், நல்ல சகுனம் ஆஸ்திரேலியா அரியநாயகம் வந்து அப்பாவோட பேசிக்கிட்டு இருக்கார், போகலாம்'' என்றாள்.

இப்படி ஒரு நல்ல சகுனத்தை நாங்கள் எதிர்பார்க்கவில்லை. ஆஸ்திரேலியா அரியநாயகம் நல்ல தங்கமான மனிதர். வரலாற்று ஆசிரியர், சரித்திரச் சான்றாளர்.

''தமிழ்நாடு, இலங்கை, சிங்கப்பூர், மலேசியா மட்டுமில்லை, ஆஸ்திரேலியாவும் தமிழர்கள் வாழ்ந்த இடம்தான். எனவே ஆஸ்திரேலியா தமிழர்களுக்குத்தான் சொந்தம்'' என்று ஆவேசமாக அவர் பேசத் தொடங்கினால் கல்வெட்டு, மெய்க்கீர்த்தி, சாசன ஆதாரங்கள் எல்லாவற்றையும் வைத்து என் அப்பாவிடம் அவர் நிரூபித்து முடிப்பதற்குள், நாங்கள் ரெண்டு சினிமாவைப் பார்த்துத் திரும்பி விடலாம்.

நாங்கள் சினிமாவுக்குக் கிளம்ப, அதைப் பார்த்த அந்தத் தெருவில் இருக்கும் பல பேரும் 'வாத்தியார் வீடே போறாக... அப்ப கருத்தான படமாத்தான் இருக்கும்' என அவர்களும் கிளம்ப... எங்கள் ஊர்ப் புகழ்மிக்க சினிமா தியேட்டர் நோக்கி எங்கள் வீதியுலா ஆரம்பமானது. விவரம் தெரிந்து நான் முதல் சினிமா பார்க்கப் போகிறேன்.

- நீங்களும் வாங்க

படம்: **புதூர் சரவணன்**

## நல்லிணக்க இசை!

**க**ணேஷ் - குமரேஷ் வயலின், செஷாங் புல்லாங்குழல், வீணை காயத்ரி உட்பட பிரபல இசைக் கலைஞர்களின் பங்கேற்போடு 'தெய்வத்தாய்' என்ற இசை ஆல்பத்தை உருவாக்கியிருக்கிறார் கங்கை அமரன். அரவிந்த அன்னையை நினைத்து ஒரு பக்தராக அவர் உருகி உருகி உருவாக்கியிருப்பதைக் கேட்ட குடியரசு தலைவர் கலாம், ''அன்னை பகவதி, அன்னை மேரி!, அல்லா என எந்த தெய்வத்தை மனத்தில் நினைத்துக் கொண்டு கேட்டாலும் அந்த தெய்வத்தோடு ஐக்கியமாக வைக்கும் நல்லிணக்க இசை'' என்று பாராட்டியதோடு ஒலிப்பேழையையும் தமது கையாலேயே வெளியிட்டு சிறப்பு செய்திருக்கிறார்.



- ஸ்ரீ

நம் அப்பாவையும் அம்மாவையும் ஸ்வாமியாக நினைக்க வேண்டும்.

இதையே மாற்றி ஸ்வாமியையும் அப்பா, அம்மா என்ற உருவங்களில் நினைக்க வேண்டும்.

'கொன்றை வேந்தன்' என்ற நீதி நூலில் ஔவைப்பாட்டி முதலில் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்கிறாள். இது தாய், தந்தையரைத் தெய்வமாக நினைப்பது. இதை அடுத்தே 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்கிறாள். 'ஆலயம் தொழுவது' என்றால் ஆலயத்திலுள்ள தெய்வத்தைத் தொழுவதேயாகும். அப்படித் தொழும்போது அத் தெய்வத்தையே தாய், தந்தையர் என அன்புடன் எண்ண வேண்டும்.

ஸ்வாமி எல்லா இடங்களிலும் இருக்கிறார் என்றால் அவருக்கு நம்மைப் போல் உருவம் இருக்க முடியாது. ஆனால் உருவம் இல்லாத ஒருவரை எப்படி நினைப்பது? அதனால் அவரை அப்பா, அம்மா என்ற இரு உருவங்களில் நினைக்க வேண்டும். நமக்குத் தெரிந்தவர்களில் நம்மிடம் ரொம்ப அன்பாக இருப்பது தாய், தந்தையர்தானே? அன்பாக இருப்பவர்களை நினைத்துக் கொண்டால்தான் நமக்கும் சந்தோஷமாக இருக்கிறது. அதனால் ஸ்வாமியை அம்மாவாக, அப்பாவாக, இரண்டும் சேர்ந்த அம்மையப்பனாக நினைத்துப் பக்தி செலுத்த வேண்டும்.

பார்வதி என்ற அம்மாவாகவும், பரமசிவன் என்ற அப்பாவாகவும் அவர் ஆகியிருக்கிறார்; லக்ஷ்மி என்ற அம்மாவாகவும் மஹாவிஷ்ணு என்ற அப்பாவாகவும் ஆகியிருக்கிறார்; சீதை என்ற அம்மாவாகவும் ராமர் என்ற அப்பாவாகவும் ஆகியிருக்கிறார்.

இந்த உருவங்களை நினைத்துக் கொண்டாலே அன்பாக இருக்கிறது. சந்தோஷமாக இருக்கிறது.



## ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# வலி... வருத்தம்...

எனக்குக் கண்ணீர் வந்துவிட்டது. இப்படிப் பல அவமானங்களைச் சகித்துகொண்டேன். 'தூரத்து இடி முழக்கம்' படத்தில் என்னை ஹீரோ வாக்கினார் டைரக்டர் கே. விஜயன்.

அந்தப் படத்தில் எனக்குச் சரிசமமான வேடத்தில் நடித்த ஒரு நடிகர், படத்தில் தனக்குத்தான் முதல் டைட்டில் கார்டு போடணும். படத்தில் ஹீரோ அவர்தான்னு சொல்லி பிரச்னையைக் கிளப்பினார். தூரத்து இடி முழக்கம் கொஞ்சம் தாமதமாக ரிலீஸானது.

'சிவப்புமல்லி'யில் நடிக்கும்போது இதேபோல பிரச்னை வந்தது. நண்பர் சந்திரசேகரின் அண்ணன் பாண்டியன், 'படத்தின் ஹீரோ என் தம்பிதான். அவனுக்குதான் முதல் டைட்டில் கார்டு போடணும்'னு பிரச்னை கிளப்பினார். அதனால் படத்தில் எங்கள் இருவர் பெயரும் டைட்டில் கார்டில் இடம் பெறவில்லை.

'சிவப்புமல்லி'யில் எனக்கு டப்பிங் பேச வேறொருவரை போட இருந்தாங்க. நானே பேசுறேன்னு கேட்டுக்கிட்டேன். அதுக்காக திருச்சியில 'சாதிக்கொரு நீதி' படப்பிடிப்புல இருந்து முதல் தடவையாக விமானத்தில் வந்து டப்பிங் பேசினேன். என் முதல் விமானப் பயணம் அதுதான்.

'சட்டம் ஒரு இருட்டறை' படத்தின் மூலம் தமிழகம் எங்கும் என்னைப் பற்றி பேச வைத்தார் டைரக்டர் எஸ்.ஏ. சந்திரசேகர். 'சட்டம் ஒரு இருட்டறை' கொடுத்த வெற்றியால் 18 படங்களில் புதிதாக ஒப்பந்தமானேன். இதில் பத்து படங்கள் வந்தன. மற்றவை பூஜையோடு நின்றன.

சில படங்கள் சுமாராக போக, மற்றவை தோல்வி கண்டன. அதனால் வந்த தயாரிப்பாளர்கள் திரும்பிப் போனார்கள். சினிமா சென்டிமெண்ட்டுக்கு நானும் பலியானேன். ஒரு ஆறு மாசம் படம் இல்லாமல் கையில் காசில்லாமல் அவதிப்பட்டேன். அவமானப்பட்டேன்.

சத்யஜோதி ஃபிலிம்ஸ் என்னை ஹீரோவாக வைத்து படம் பண்ண பத்தாயிரம் ரூபாய் கொடுத்திருந்தார்கள். எனது மார்க்கெட் போனதால், அவங்க கொடுத்த பணத்தைத் திருப்பிக் கேட்டார்கள். கைச் செலவுக்குக்கூட காசில்லாத நிலையில் என்ன செய்யறதுன்னு தெரியாமல் தவித்தேன். என்னை வைத்து எடுக்க இருந்த அந்தப் படத்துக்குப் பிறகு தியாகராஜனை ஹீரோ ஆக்கியிருந்தார்கள். 'காசு கொடு இல்லேன்னா, அந்தப் படத்துல செகண்ட் ஹீரோவா நடித்து கழிக்கிறியா'ன்னு கேட்டாங்க.

'கொஞ்சநாள் தயவு செஞ்சு பொறுத்துக் கொள்ளுங்கள். உங்க காசை எப்படியாவது கொடுத்துடறேன்'னு



பணிவாக வேண்டிக் கொண்டேன். ஆனா சொன்னபடி புரட்டிக் கொடுக்க முடியல. என்னை நம்பிப் பத்துப் பேர்கூட இருந்தாங்க. வெளியே நாலு கம்பெனி பார்த்து வாய்ப்பு கேட்க போகலாம்னா பைக் வீல்டயர் கிழிஞ்சி கிடந்தது. புது டயர் போட காசில்லே. 'இது என்னடா சோதனை'னு வேதனையில் நொந்து போனேன். அதனால சத்யஜோதி ஃபிலிம்ஸ் ஆட்டோ வந்தாலே ஓடி மறைய வேண்டியதாகிவிட்டது.

ஒரு கதாநாயகனா பிஸியாயிருந்துட்டு ஆறு மாதம் படமே இல்லாமல் வீட்ல முடங்கிக் கிடக்கிறது மாதிரி கொடுமை வேறெதுமில்லே. அந்தக் கொடுமையை அனுபவித்தவன் நான். அந்த நாட்களை இப்ப



# வாழ்க்கை!



விஜயகாந்த் பேசுகிறேன்!
13

# விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி!

"விஜயகாந்த் உண்மையான உழைப்பாளி! பணத்துக்காக நடிப்பவரில்லை. 'நடிக்க வந்துட்டோம், ஒப்புக்காக நடிச்சிட்டு போவோம்' என்ற மனப்பான்மை இல்லாதவர்.

தனக்குக் கொடுக்கப்பட்ட கேரக்டரைப் புரிஞ்சுக்கிட்டு, அந்தக் கதாபாத்திரமாகவே மாறி நடிச்சு பெயர் வாங்கணும்ங்கற உண்மையான கலைஞன். எந்தவிதமான தொந்தரவுகளையும் தராமல் தயாரிப்பாளருக்கு ஒத்துழைப்பு கொடுப்பவர். இவர் ஆக்ஷன் ஹீரோ மட்டுமல்ல, குணசித்திர நடிகரும் கூட!"

- டைரக்டர் மணிரத்னம்



ஆழ்வார்திருநகர்ல இருந்த அவர் வீட்டுக்குப் போய் சம்மதம் சொல்லி வந்தேன்.

மறுநாள் கருமாரி கந்தசாமி வந்தார், 'தம்பி! உனக்கு இப்ப மார்க்கெட் இல்லேன்னு சொல்றாங்க. அதான் கொஞ்சம் யோசிக்கிறார் டைரக்டர்'னு சொன்னார். நான் 'உங்க இஷ்டம்'னு சொன்னேன்.

இது முடிந்து ஒரு வாரம் கழித்து மறுபடியும் கருமாரி கந்தசாமி வந்தார். 'அண்ணே எனக்கு மார்க்கெட் இல்லே. எப்போ மார்க்கெட் இருக்கோ அப்போ உங்க படத்துல போடுங்க. இப்ப ஆளை விடுங்க'னு சொல்லி அனுப்பிட்டேன். காரணம் மனசுல அவ்ளோ வலி, வருத்தம்.

அந்த நேரத்துல ஏவி.எம்மின் 'பாயும் புலி' படத்துல வில்லனா நடிக்க என்னைக் கேட்டாங்க. நண்பர்களும் மற்றவர்களும், 'சும்மா இருக்கிறதைவிட இந்த மாதிரி வர்ற வாய்ப்பை பயன்படுத்திக்கோ'ன்னாங்க. சுமார் 18 படங்களில் கதாநாயகனா நடிச்சுட்டு இப்ப ரஜினிக்கு வில்லனா நடிக்கிறது எனக்குச் சரியாகப் படலைன்னு மறுத்துட்டேன்.

அப்போ விசு சாரின் 'டௌரி கல்யாணம்'னு ஒரு படம் எனக்கு ரீ என்ட்ரி மாதிரி வந்தது. அந்தப் படத்துல எனக்கு பேசின சம்பளம் பத்தாயிரம்தான், அதுக்கும் ஒரு சிக்கல் வந்தது. படத் தயாரிப்பாளர் ஒருநாள் சம்பளம் விஷயமாக கூப்பிட்டு பேசும்போது,

நெனைச்சாலும் அழுகை வந்துடும்.

நான் தங்கியிருந்த ரோகிணி லாட்ஜ்ல சீட்டாட்ட கிளப் இருந்தது. அதுல போய் உட்கார்ந்து சீட்டாடி அங்கே ஜெயித்த காசுல நண்பர்களுக்குச் சாப்பாடு வாங்கிக் கொடுப்பேன். டூவீலர் டயர் புதுசா வாங்கிப் போட்டேன். சீட்டு விளையாட்டு ஒரு சூதாட்டம்தான். கெட்டதுலயும் ஒரு நல்லது நடந்தது.

அப்போ இராம. நாராயணன் சார் 'தங்கமடி தங்கம் படத்துல நடிக்கிறீங்களா'னு கேட்டார்.

'தம்பி! நான் இந்தப் படத்துக்கு ஃபைனான்ஸ் வாங்கியது சத்யஜோதி ஃபிலிம்ஸ்லதான். அவங்க என்ன சொல்றாங்கன்னா, நீங்க



■ விசு



• ரஜினி



• சந்திரசேகர்

அவங்களுக்குத் தர வேண்டிய பத்தாயிரத்தை சம்பளத்துல பிடிச்சு அவங்ககிட்டே கொடுக்கச் சொல்றாங்க. இதுக்கு நீங்க என்ன சொல்றீங்க'ன்னு கேட்டார்.

'சரி சார்! பாதியைக் கொடுத்துருங்க. மீதி அஞ்சாயிரத்தைப் பிறகு தர்றேன்னு சொல்லிடுங்க. எனக்கும் கொஞ்சம் செலவுகள் இருக்குன்னு சொன்னேன்.



• எஸ்.ஏ. சந்திரசேகர்

'டௌரி கல்யாணம்' ஷூட்டிங் திருவள்ளூர் பக்கத்துல ஒரு கிராமத்துல நடந்தது. அங்கே என்னை அழைத்து போய் மேக்கப் போட்டு உட்கார வச்சுட்டாங்க. சாயங்காலம் அஞ்சு மணிக்குத்தான் நாலு வரி வசனம் பேச விட்டாங்க. மனசுக்கு ரொம்ப வருத்தமாயிருந்தது.

அப்போ சாப்பாடு விஷயத்துல ஒரு பிரச்னை ஏற்பட்டது. ஷூட்டிங் ஸ்பாட்ல மாடியில் ஏறும்போது புரொடக்ஷன் மேனிடம், 'சாப்பாடு மாடிக்குக் கொண்டு வாப்பா'ன்னு சொன்னேன். அதைத் தப்பா எடுத்து கொண்ட அவர், 'ஆமா! இவர் பெரிய ஹீரோ. இவருக்கு மாடிக்குச் சாப்பாடு கொண்டு வர வேண்டுமாம்'னு கிண்டலாகப் பேசினார். ரொம்ப அவமானமாப் போச்சு. அடக்கிக் கொண்டேன்.



• மோகன்

அப்போ எங்க டைரக்டர் எஸ்.ஏ. சந்திரசேகர் கன்னடத்துல ஒரு படம் பண்ணியிருந்தார். அதைத் தமிழில் 'வெற்றி நமதே' என்ற பேர்ல எடுக்கலாம்னு முடிவு செஞ்சார். கன்னடத்துல ரெண்டு ஹீரோ பண்ணியிருந்தாங்க. தமிழில் நானும், இன்னொரு ஹீரோவா மோகன் சாரும் போட்டு எடுக்க முடிவானது.

அதுக்குப் பிறகு என்ன நடந்ததோ தெரியல, மோகன் சார் அதுல நடிக்க மாட்டேன்னு விலகி விட்டார். அந்தக் கதையை ஒதுக்கி வச்சுட்டு, 'சாட்சி'ங்கற படத்தை இயக்கினார். அந்தப் படம் எனக்கு மிகப்பெரிய திருப்புமுனையாக அமைந்தது.

அதைத் தொடர்ந்து டைரக்டர் ஆர். சுந்தரராஜன் சாரின் 'அம்மன் கோயில் கிழக்காலே', 'வைதேகி காத்திருந்தாள்' என.... எனது சினிமா வாழ்க்கையில் பல திருப்புமுனைகள் ஏற்பட்டது. அப்போ 'காலையும் நீயே மாலையும் நீயே' படப்பிடிப்பில் விபத்து ஏற்பட்டது. 'இனி விஜயகாந்த் அவ்வளவுதான் தொலைந்தான்'னு என் நண்பர்கள் (எதிரிங்க) நினைச்சாங்க. ஆனா நடந்ததே வேற...

(சொல்றேன்)

# 25

'எல்லாம் என்னுள்
முடக்கம்; அதனாலே
எவருள்ளும் நான்
அடக்கம்; இதை
உணரவும் தேவை
பணிவடக்கம்!"

- ஸ்ரீ கிருஷ்ணன்

**க**ண்ணன் சொன்ன அந்த ஜோதிட விளக்கம் கணேஷுக்கே தெரிந்திராத ஒன்று. ஜோதிட விளக்கம் மட்டுமல்ல. அவன் அப்பாவின் ஜாதகம் இந்தக் கண்ணனுக்கு எப்படித் தெரியும் என்பது அடுத்து அவனுள் மூண்ட கேள்வியாகும். ஆனால் கண்ணன் கணேஷை அதிக நேரம் ஸ்தம்பிக்க வைக்க தயாரில்லை.

"என்ன கணேசா... உன் அப்பா காணாம போனது எனக்கு எப்படித் தெரியும், அப்புறம் உன் அப்பா ஜாதகம் எனக்கு எப்படித் தெரியும்னு நினைக்கறியா? தெரியலேன்னா பேச முடியுமா? அதேசமயம் பேசிட்டா ஆச்சா... அவரைக் கண்டுபிடிக்கணும் இல்லையா?"

கண்ணன் கேட்ட தோரணையே கணேஷை பிடரியைப் பிடித்து நிமிர்த்தியதுபோல இருந்தது. "கவலைப்படாதே. மும்பைல எனக்குத் தெரியாத இடம் கிடையாது. நாளைக்கு காலம்பற இந்த ராஜ்குமார் ஃபைலை ஒப்படைச்சுட்டு நான் மும்பை போய் உன் அப்பாவோட இங்க வரேன். நீ இங்க இருந்து உன் வீட்டுக்குக் கையை வீசிண்டு சும்மா போகக் கூடாது. உன் அப்பாவோட போகணும். அப்பத்தானே உன் அம்மாவுக்கு சந்தோஷமா இருக்கும். தெருவுல அடிபட்ட மாட்டுக்கு மஞ்சளும் எண்ணெய்யும் வாங்கிப் பூசின உன் புண்ணிய பலம் உன்னைக் கைவிட்றுமா என்ன?"

கண்ணன் தன் பேச்சில் இறுதியாக மாட்டைத் தொட்டு முடிக்கவும் உச்சி மண்டையில் ஒற்றை முடியைப் பிடித்து யாரோ இழுத்த மாதிரி இருந்தது கணேஷுக்கு. நான் மாட்டுக்கு உதவியது இவனுக்கு எப்படித் தெரியும் என்று அடுத்த கட்ட கேள்விக்குள் விழுந்தான். திருதிரு



## இந்திரா செளந்தர்ராஜன்

# எங்கே என் கண்ணன்?



வென்றும் விழித்தான்.

'நான் மாட்டுக்கு உதவி செய்தது உனக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்க வாயெடுத்த போது, அவன் செல்போன் அவன் கவனத்தைத் தன் பக்கம் திருப்பியது. அனுராதா அவனுக்கு உதவி செய்தவளாக சிணுங்கிய செல்போனை எடுத்துக் கொடுத்தாள். திரையில் உள்ள எண்கள் மறுபக்கம் இருப்பவர் ஆடிட்டர் என்றது.

"ஆடிட்டர் போன்..." என்று கணேஷும் வேகமாகி காதில் கருவியை வைத்தான். அதைக் கவனித்த கண்ணன் "கணேஷ், நான் இன்னும் வரலைன்னு சொல்... கம்மா ஒரு குட்டி ஷாக்கா இருக்கட்டும்" என்றான் படு வேகமாக...

"கணேசா..."

"சார் சொல்லுங்க... உங்களுக்காகத்தான் ரொம்ப நேரம் ட்ரை பண்ணினேன்."

"நினைச்சேன். நான் அனுப்பின நபர் வந்து சேர்ந்தாச்சா?"

"ஆஹா... இப்பக்கூட என் எதிர்க்க நான் வரலைன்னு சொல்லுன்னு உங்களைக் கலாய்க்கப் பாக்கறார்.."

"அவனுக்குக் கொஞ்சம் குறும்பு ஜாஸ்தி. ஆனா ஆள் ரொம்பவும் சுறுசுறுப்பு..."

"சுறுசுறுப்பு மட்டுமா... ஃபேஸ் ரீடிங்கும் தெரியும்போல இருக்கு. மனசுக்குள்ள ரகசியமா நினைக்கறதையும் பேசறதையும் கூட அப்படியே சொல்லிடறாரே. என் குடும்பம் பத்தியும் நிறையவே தெரிஞ்சிருக்கு..."

"நான்தான் சொல்லியனுப்பிச்சேன். உனக்கு எல்லாவிதத்துலயும் ஒத்தாசையா இருப்பான். ஆமா அந்த மூங்கில் பெட்டி சமாசாரம் என்னாச்சு?"

"அட போங்க சார். என் அம்மா சொல்லி நான் பூஜை செய்யதில்லை. அக்கா சொல்லியும் பூஜை செய்யதில்லை. ஆனா முகம் தெரியாத ஒரு டாக்டர் சொல்லி அந்தச் சிலைக்கா நான் பூஜை செய்தேன். எனக்குத் தெரிஞ்சு ஸ்பீக்கர் போனை கண்டு பிடிச்சதுல ஒரு நல்ல காரியம் நடந்துருக்கு. இங்க நான் பண்ற பூஜையை அங்க அந்தச் சீனு தெரிஞ்சுக்க முடியறது..."

"ஏய் நீ நாஸ்திகன்தான். ஆனா பெரிய பரோபகாரி. ஒரு உயிரைக் காப்பாத்த நீ செய்திருக்கிற காரியம் இருக்கே ரொம்பப் பெருசு. உன்னை நினைச்சு நான் ரொம்பப் பெருமைப்படறேன்..."

"பாராட்டெல்லாம் இருக்கட்டும் சார். நான் என் அம்மாவையும் கங்கையையும் பாக்கணும். அப்பா விஷயம் வேற புதிரா இருக்கு. இங்க நீங்க அனுப்பியிருக்கிற ஆள் என்னடான்னா என் அப்பா அவர் பாக்கெட்டுக்குள்ள இருக்கற மாதிரி நினைச்சுண்டு பேசறாரு. மொத்தத்துல ஒரே குழப்பமா இருக்கு சார்..."

"கவலைப்படாதே... எல்லாம் சரியா



"நீங்க, இவ்வளவு டென்ஷனோட வீட்டிலே இருக்கிறதுக்கு லீவை கேன்சல் பண்ணிவிட்டு... ஆபீஸ்ல போய் ரெஸ்ட் எடுத்துக்கலாம்!"

- சிந்தாமணி சு. புகழேந்தி

யிடும். போனை கொஞ்சம் அவன்கிட்ட கொடு..."

- ஆடிட்டர் சொல்ல போனுடன் நிமிர்ந்த கணேஷ் எதிரில் கண்ணன் இல்லை. அனுராதாவை பார்த்தவன் "எங்க அனுராதா அந்தக் கண்ணன்?" என்று கேட்க "இங்கதானே இருந்தார்..." என்று அவள் அறைக்கு வெளியில் போய் தேடத் தொடங்கினாள்.

"மிஸ்டர் கண்ணன், கண்ணன் சார்..." என்று கத்திப் பார்த்தான். பயனில்லை. ஏமாற்றமுடன் திரும்பி வந்தான். உதட்டைப் பிதுக்கிக்கொண்டு கணேஷைப் பார்க்கவும் அவன் புரிந்தவன் போல் "சார்... அவர் இப்ப பக்கத்துல இல்லை, வந்ததும் பேசச் சொல்றேன்" என்றபடி போனை கட் செய்தான். பின் நிமிர, மறுபடி செல்போன் அழைப்பு. இம்முறை டாக்டர்.

"என்ன மிஸ்டர் கணேஷ், இன்னிக்குப் பூஜையை எப்ப பண்ணப் போறீங்க?"

- டாக்டர் நேராக விஷயத்துக்கு வந்துவிட்டார். "சார்... இன்னிக்கு... இன்னிக்கும் பண்ணணுமா சார்?"... "அது சரி... அந்தப் பெட்டி மிஸ்டர் ஸ்ரீனிவாசன் கைக்கு வர்றவரை நீங்க பண்ணத்தான் வேணும். வேற வழி கிடையாது. பை த பை மிஸ்டர் ஸ்ரீனிவாசனோட சன்னும் மாட்டுப் பொண், ஐ மீன் அவர் மருமகளும் இங்க வரப்போறாங்க... இங்க வந்துட்டு உடனேயே இவரோட சன் உங்களைச் சந்திக்க வாரணாசி புறப்பட்டு வரலாம். அவர் வந்து பெட்டியை வாங்கிக்கிற வரை நீங்க பூஜை பண்றதுல ஆட்சேபணை இல்லையே..."

"அதெல்லாம் ஒண்ணுமில்ல சார்... எனக்கு என்ன தெரியுமோ அதை நிச்சயம் குந்தகம் இல்லாம செய்வேன்."

"ரொம்ப நன்றி."

- கணேஷ் செல்போனை முடக்கி விட்டு அனுராதாவைப் பார்த்தான்.

"என்ன கணேஷ், பூஜைக்குத் தயாராகணுமா?"

"ஆமாம். கொஞ்சம் வெளிய போய் பூ, பழம், ஊதுபத்தி, சாம்பிராணி, கற்பூரம்னு இந்தப் பூஜை ஐட்டங்களை எல்லாம் வாங்கிட்டு வர முடியுமா அனுராதா?"

"ஷ்யூர்... நானும் எங்க எடிட்டருக்கு போன் பண்ணி பேச வேண்டியிருக்கு. நீங்க கொஞ்சம் வெயிட் பண்ணுங்க வந்துடறேன்."

சொல்லிவிட்டு அனுராதா வெளியேறினாள்.

ஒரு எஸ்.டி.டி. பூத்துக்குள் புகுந்தவள், ஆசிரியரிடம் ஆச்சரியம் சொட்டச் சொட்ட பேசினாள்.

"சார்... நான் வர்றதுக்கு ஒரு வாரம் ஆகலாம். அவசரம்னா மலர் கட்டுரையை இங்கேயே எழுதி ஃபேக்ஸ் பண்ணிடறேன்."

"ஏம்மா... காசி உன்னை ரொம்பக் கவர்ந்துடுச்சா?". "இல்ல சார். வேற ஒரு சுவாரஸ்யமான விஷயம் இங்க நடந்துக்கிட்டு இருக்கு. நம்ம பத்திரிகைல ஒரு அதிசயமான தகவல் கூடிய சீக்கிரம் வெளியாகப் போகுது. பாரதத்து கண்ணன் திரும்ப வரப்போறான் சார். இல்லையில்லை வந்தாச்சுன்னுதான் நினைக்கறேன்."

"என்ன ஆச்சு உனக்கு? எப்பவும் இல்லாதபடி எதுக்கு இப்படி ஒரு எக்ஸைட்மென்ட்?"

"இல்ல சார்... நான் இனி பேசல. என் மேட்டர்தான் இனி பேசணும். நான் இங்க நல்ல பாதுகாப்போட இருக்கேன். நீங்க கவலைப்பட வேண்டாம். எங்க வீட்டுக்கு முடிஞ்சா தகவல் சொல்லிடுங்க. வேண்டாம் சார்... எங்கப்பாகிட்ட நானே பேசிக்கறேன். தேங்க்யூ சார்..."

- அனுராதா பேசி முடித்துவிட்டு வெளியே வந்தாள் எதிரில் கண்ணன். அவன் கைகளில் கணேஷ் கேட்ட பூஜை ஐட்டம் அவ்வளவும்...

அனுராதா விழிகளைப் பெரிதாய் விரித்தாள். "என்ன பாக்கறே... கணேஷ் உன்கிட்ட பூஜை சாமான் வாங்கிட்டு வரச்

சொன்னது காதுல விழுந்தது. அதான் நீ போன் பேசும்போது நான் போய் வாங்கிட்டு வந்துட்டேன். இந்தா பிடி.. போய் கொடு! நான் இங்க நிறைய பேரைப் பார்க்க வேண்டியிருக்கு. பார்த்துட்டு வந்துடறேன்...'' என்றபடியே பூஜை சாமான்களை நீட்டினான்.

"நான் உங்களைத் தேடினப்போ நீங்க அங்க இல்லையே..."

"என்னை என் அம்மா தேடும்போது ஒளிஞ்சு பழகினவன் நான். அதான் உன் கண்ணுலையும் படலை.''

- என்ற கண்ணன் கண்களைச் சிமிட்டி ஒரு சிரிப்பு சிரித்தான்.

அந்தச் சிரிப்பு அவளைத் தாறுமாறாக கலைத்துப் போட்டுவிட்டது. குனிந்து பையில் ஒரு பார்வை பார்த்துவிட்டு நிமிர்ந்தால் எதிரில் ஆள் இல்லை.

'இவன் கண்ணனா இல்லை மாயாவியா?' வியப்போடு நடக்கத் தொடங்கினாள் அனுராதா.

டெல்லி செல்லும் அந்த விமானம் ரன்வேயில் சீறத் தொடங்கியிருந்தது. உள்ளே சம்பத்தும் சாருவும் அருகருகே அமர்ந்திருந்தனர். சம்பத் தீவிரமான யோசனையில் இருந்தான். நாடி ஜோசியன் எழுதிக் கொடுத்த பாடல்கள் கொண்ட அந்த நாற்பது பக்க நோட், அவன் கையில் உள்ள லெதர் பேக்கில் இருந்தது.

அதை எடுத்து பல முறை படித்துப் பார்த்தும் பெரிதாக பொருள் விளங்கிக் கொள்ள முடியவில்லை.

**'வெள்ளியெழும் வேளைக்குள்ளே**
**வியாழன் நிற்கும் - நேரமதில்**
**பள்ளியெழுந்தே பாலன் வேடமிட்டு**
**கண்ணனாய் முன்னே வருவான்**
**வள்ளி மணவாளன் சோதரன் நாமம் கொண்டவன் முன்**
**வெள்ளெருக்கு போலே வேத கண்ணன் பின் வருவான்.'**

என்று உள்ள பாடல் வரிகள் சுழன்று சுழன்று அடித்தன.

வெள்ளியெழும் வேளை என்றால் வெள்ளிக்கிழமையா இல்லை மாலைப் பொழுதா என்பதில் குழப்பம். இதில் வியாழன் நிற்கும் நேரமதில் என்றால் வியாழக்கிழமையா இல்லை வியாழன் எனப்படும் குருவா என்றொரு குழப்பம்.

"என்னா..." என்றாள் சாரு.

"உம்!"

"வேதகண்ணன் வருவான்னு போட்டிருக்கே... வேத கண்ணன்னா பெருமாள்தானே?"

"யாருக்குத் தெரியும்? பெருமாள்லாம் வருவார்னு எனக்குத் தோணலை.."

"அப்படின்னா?"

"அந்த வேதகண்ணன்கறவனும் இந்த வேஷம்போட்ட கண்ணன் மாதிரி ஒரு மனுஷனாத்தான் இருக்க முடியும்."

"அதெப்படி? ஒரே சமயத்துல இரண்டு இடத்துல அவன் இருப்பான்னு ஒரு வரி வரதே. படிச்சேளா? மனுஷன்னா எப்படி ஒரு மனுஷன் இரண்டு இடத்துல ஒரே சமயத்துல இருக்க முடியும்?"

- சாரு அப்படிக் கேட்ட பிறகுதான் அவன் சொன்ன 'பொருள் கொண்ட பாடல் வரிகள் சம்பத்துக்கு நினைவுக்கு வந்தது. லெதர்பேக்கில் இருந்து திரும்ப அந்த நோட்டை எடுத்து விரித்தான். சாருவே அந்த வரிகளைச் சுட்டிக் காட்டினாள்.

**'எட்டில் மதி மறைந்தோனை எட்டில் பிறவி எடுத்திட்ட**
**கட்டிளம் காளையனின்**
**தொட்டருகே**
**சென்றாலும்**
**விட்டகலா உயிர்**
**மூச்சால் காசி**
**மனை வீட்டுள்ளும்**
**காசினியில் வீதியிலும்**
**ஒரே சமயம்**
**சஞ்சரித்தே**
**கண்ணனென்றே**
**திரிவான்..**

- அந்தப் பாடல் வரிகளைப் படித்த சம்பத்துக்கு குழப்பமாகத்தான் இருந்தது!

*(தொடரும்)*

''எதுக்காக வருமான வரி அதிகாரிங்க நம்ம தலைவரை நையப் புடைக்கறாங்க!''

''இவ்வளவு பணம் எங்கிருந்து வந்துதுன்னு கேட்டதுக்கு நாசிக்குல இருந்துதான்னு சொல்லியிருக்காரு.''

- கே.ஜி. மாணிக்கவாசகம்



# அமிர்தவர்ஷிணி

ரவிசுப்ரமணியன்

அன்றும் மழைதான்
பேயாட்டம் போடும் மரங்களின் நடுவே
சிக்குண்டிருந்த அன்பை
மெல்ல அள்ளியெடுத்து வந்து
பத்திரப்படுத்தினேன்

நம்பகத்தின் துளிரை
ஸ்பரிசித்து பகிர்ந்துகொண்ட
நம் விரல்களே முதல் சாட்சி

சீதளம் தளும்பும் ஆரண்ய விழிவழியே
ஆயிரமாயிரம் கதைகள் சொல்வாய்
நிலவும் கவிந்து கேட்கவரும்

கடல்வழி நடப்போம்
உற்சாகம் நண்டுகளாகி
கரையெங்கும் ஓடி விளையாடும்
காற்றெங்கும் சிரிப்பை நிறைப்பாய்

சுமை பழகிய தோளணைத்து
பனிபொழியும் இதழ் குவித்து
சில்லிட வைப்பாய்

பெயர்தெரியா காட்டுப்பூபோல் பூத்து
வாசம் கொட்டி திகைக்க வைத்தாய்

அமிர்தவர்ஷிணி இன்று
கடற்கரை இருட்டில்
வழிதவறிய குழந்தையாய்
ஓடியோடிக் கதறுகிறதடி
என் ப்ரியங்கள்



அனந்தபத்மநாபன்



தரம் • நம்பிக்கை
வசந்த் & கோ
இந்தியாவின் No.1 டீலர்
வசந்த் & கோ
பொங்கல்
சிறப்பு விற்பனை
• 100% வட்டி இல்லை** • 100% பிராசஸிங் சார்ஜ் இல்லை**
❖ 2lits டேபிள்டாப் கிரைண்டர் ரூ. 2,290/- முதல்
❖ 21"Flat ஸ்டீரியோ கலர் டிவி ரூ. 6,790/- முதல்
❖ 170lits ரெப்ரெஜிரேட்டர் ரூ. 6,190/- முதல்
❖ 21" ஸ்டீரியோ கலர் டிவி ரூ. 5,990/- முதல்- மூன்று வருட வாரண்டியுடன்*
❖ 29" ஸ்டீரியோ டிவி மூன்று வருட வாரண்டியுடன்* ரூ. 10,690/- முதல்
❖ வாஷிங் மெஷின் (Only Washer) ரூ. 2,890/- முதல்
❖ ஏர்கண்டிஷ்னர் ரூ. 10,450/- முதல்
❖ மைக்ரோவேவ் ஓவன் ரூ. 2,990/- முதல்
❖ DVD பிளேயர் 5.1 Channel ரூ. 2,450/- முதல்
ரூ. 2000க்கு ICICI கிரெடிட் கார்டு மூலம் பொருள் வாங்கி மாருதி ஆல்டோ கார் வெல்ல வாய்ப்பு. இச்சலுகை 30.01.2006 வரை (தி.நகர் கிளைகளில் மட்டுமே)
■ கிரெடிட் கார்டுகளுக்கு சர்வீஸ் சார்ஜ் இல்லை
■ கிரெடிட் கார்டுதாரர்களுக்கு 6 மாத மிகக்குறைந்த தவணை முறை
■ கிரெடிட் கார்டுதாரர்கள் தவணை முறையில் வாங்குபவர்களுக்கு சிறப்பு சலுகைகள்
ஸ்ரீ முருகன் திருமண மண்டபம்
ராஜா கல்யாண மண்டபம்,
பாத்திமா கோதண்டராமி கல்யாண மண்டபம்,
கண்காட்சி மற்றும் சிறப்பு விற்பனை
ஸ்ரீ ராம் பைனான்ஸ் மூலம் பர்ஸனல் கம்ப்யூட்டர் முதல் டி-ஷர்ட்ஸ் வரை பெறலாம்*
Bajaj Auto பைனான்ஸ், GE Money, Citi Finance, TVS பைனான்ஸ் மூலம் கடன் பெறும் வசதி
ஏசி மற்றும் மொபைல் போன்களுக்கு
சிறப்பு விலை
(தவணை முறை வசதியும் உண்டு)
SAMSUNG | LG | ONIDA | IFB | Whirlpool | HYUNDAI | SONY | SIEMENS | Electrolux | SANSUI | Godrej | HITACHI | TCL | SHARP | GENERAL | Carrier | KENSTAR | Haier
சென்னை : தி.நகர் – 52010572, 52029797, 52010573 கோடம்பாக்கம் – 52010576 அடையார் – 52010579 சூளைமேடு – 52010582 புரசைவாக்கம் – 52010571 மயிலாப்பூர் – 52010578 ராயபுரம் – 52010584 வண்ணாரப்பேட்டை – 52010583 பாடி – 52010577 நங்கநல்லூர் – 52056514 ஆலப்பாக்கம்–போரூர் – 52010581 தாம்பரம் – 52010575 செங்கல்பட்டு – 226241, விழுப்புரம் - ஹாஸ்பிடல் ரோடு, வேலூர் – காட்பாடி ரோடு, ஆற்காடு ரோடு, சத்துவாச்சாரி, மதுரை – தெற்கு மாசி வீதி, திண்டுக்கல் – புதிய அக்ரஹாரம் தெரு, பழனி ரோடு, திருச்சிராப்பள்ளி – போர்ட் ஸ்டேஷன் ரோடு, தஞ்சாவூர் – சௌத் ராம்போர்ட், அரவிந்த் காம்ப்ளக்ஸ், பட்டுக்கோட்டை – அறந்தாங்கி ரோடு, திருநெல்வேலி ஜங்ஷன் – பராசக்தி பில்டிங்ஸ், புதுக்கோட்டை – அந்தகா திருமண மண்டபம், பாளையங்கோட்டை – திருவனந்தபுரம் ரோடு, தூத்துக்குடி – பியர்ல் பிளாசா, கோவில்பட்டி – AKS தியேட்டர் ரோடு, நாகர்கோவில் – வடசேரி பஸ் ஸ்டாண்டு எதிரில், பாண்டிச்சேரி – மகாத்மா காந்தி ரோடு, கோயம்புத்தூர் – ஒப்பணக்கார தெரு, க்ராஸ் கட் ரோடு, சேலம் – முதல் அக்ரஹாரம் வையல் பிளாசா, ஈரோடு – பெருந்துறை ரோடு, கரூர் – 25, கோவை ரோடு, (K.V.R.பில்டிங் அருகில்) 236623 திருப்பூர் – குமரன் ரோடு, ஒசூர் – தாலுகா ஆபீஸ் ரோடு, பெங்களூர் – 101/1, கே.கே. ரோடு, (டபுள் ரோடு) பிரெஸ்டிஜ்கோர்ட்
ஞாயிறும் விற்பனை உண்டு



## பட்டன தட்டிவிட்டா போதுமா?
## எந்த வங்கிக்கும் பணம் போகுமா?

### போகும் என்கிறது

## பாங்க் ஆஃப் இந்தியா

எந்த இடத்திலிருந்தும் பாங்க் ஆஃப் இந்தியாவின் 1200 கிளைகளுக்கும் மற்றும் 20000க்கும் மேற்பட்ட RTGS* வசதியுள்ள பல்வேறு வங்கிகளின் இந்தியக் கிளைகளுக்கும் நேரடியாக குறைந்த செலவில் பாதுகாப்பாக பணம் அனுப்பலாம்.

மேலும் விவரங்களுக்கு எங்கள் இணையதளம் www.bankofindia.comஐ நாடவும்.

* Real Time Gross Settlement

100 YEARS OF MAKING DREAMS COME TRUE

बैंक ऑफ़ इंडिया
Bank of India

# நட்சத்திர வங்கி நடந்து வந்த பாதை!



சுமார் 100 வருடங்களுக்கு முன், 1906-ல், மூன்று வணிக நண்பர்கள் ஒன்று சேர்ந்து ஆரம்பித்த வங்கிதான் பாங்க் ஆஃப் இந்தியா.

சர் சாஸுன் டேவிட், சர் கோவஸ்ஜி ஜெஹாங்கிர் மற்றும் திரு ராம் நாராயண் ஹர்நந்த் ராய் என்ற மூவர்தான் அந்த நண்பர்கள்.

சேவையில் முதல் தரம், கண்ணியமான நிர்வாகம் என்று அப்போதே புகழைச் சேமிக்கத் தொடங்கியது வங்கி. 1929-ல் நிதிச் சீரழிவு, இரண்டாம் உலகப் போர் என்று பல சிக்கல்களைச் சந்தித்தது வங்கி.

- முதன் முதலாக வெளிநாட்டில் கிளை தொடங்கிய வங்கி பாங்க் ஆஃப் இந்தியா. ஜூலை 1946-ல் லண்டனில்.
- முதன் முதலாக ஜப்பானில் கிளை தொடங்கியதும் பாங்க் ஆஃப் இந்தியா - 1950-ல், டோக்கியோவில்.
- முதன்முதலாக பாரிஸில் 1934-ல் கிளை தொடங்கியதும் பாங்க் ஆப் இந்தியாதான்.

மும்பையில் ஒரே ஓர் அலுவலகத்துடன், 50 லட்ச ரூபாய் மூலதனத்துடன், 50 ஊழியர்களுடன், தொடங்கிய வங்கி, தேசிய மயமாக்கப்படுமுன் 1969-ல் 207 கிளைகள், 12 வெளிநாட்டுக் கிளைகள், டெபாசிட் தொகை 436 கோடி ரூபாய், அட்வான்ஸ் தொகை 296 கோடி ரூபாய் என்ற அளவில் இருந்தது.

**இன்றைக்கு இருக்கிற திட்டங்கள்/ வசதிகள்**

2600 கிளைகள். அத்தனையும் கம்ப்யூட்டர் வசதியுடன்! 24 அயல் நாட்டுக் கிளைகள். சுமார் 43000 ஊழியர்கள்.

SMS பாங்கிங், டெலி-பாங்கிங், 750 நெட்வொர்க் எனப்படும் இணைக்கப்பட்ட கிளைகள், 900 இன்டர்நெட் பாங்கிங் கிளைகள், 288 ஆன்-லைன் ஏ.டி.எம்.கள், 12000 ஏ.டி.எம்.கள் என்று

बैंक ऑफ़ इंडिया
Bank of India

• மகாத்மா காந்தி துவக்கிய வங்கிக் கணக்கு




இந்திய வங்கிகளிலேயே நான்காவது இடத்தைப் பிடித்திருக்கிறது.

மிகுந்த நம்பிக்கையான வங்கி என்று 2003, 2004-ல் ஏசி நீல்சன் ஓ ஆர்ஜி - மார்க் சான்றிதழ் வழங்கி இருக்கிறது. இந்தியாவின் 500 முக்கிய நிறுவனங்களில், பாங்க் ஆஃப் இந்தியா 24ஆவது இடத்தில் இருக்கிறது.

**பா**ங்க் ஆஃப் இந்தியா சதாப்தி க்ருஷி விகாஸ் கார்டு இந்த நூற்றாண்டு விழாவையொட்டி, விவசாயிகளுக்காகக் கொடுக்கப்படுகிறது. இதை ஏ.டி.எம்மாகவும் பயன்படுத்திக் கொள்ளலாம்!

ஆமதாபாத், ஹைதராபாத், பூனா, சூரத் ஆகிய நகரங்களில் மட்டுமே செயல்பட்டு வந்த டயமண்ட் சேவிங்ஸ் அக்கவுண்ட் கோல்டு - டயமண்ட் கரண்ட் அக்கவுண்ட், எல்லா பெருநகர்களுக்கும் விரிவாக்கப்படுகிறது.

நேஷனல் இன்ஷூரன்ஸ் கம்பெனியுடன் இணைந்து தனி நபர் விபத்து பாலிசியை வீட்டு வசதிக் கடன் பெற்றவர்களுக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறது இந்த வங்கி. இதனால் கடன் பெற்றவர் அகால மரணம் அடைந்தாலும், கடன் பாக்கியைக் கட்ட வேண்டிய சுமை வாரிசுகளுக்கு இல்லை!

**2006**க்குள் 2600 கிளைகளும் ஒன்றோடு ஒன்று இணைக்கப்பட்டு விடும். இதில் 1200 கிளைகள் மார்ச் 2006க்குள்ளேயே இணைக்கப்பட்டு விடும்.

எலக்ட்ரானிக் பேமென்ட் சர்வீஸ் எனப்படும் Star - e - pay அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறது.

'கோர் பாங்கிங் 418 கிளைகளில் அறிமுகமாகிவிட்டது. இன்னும் 750 கிளைகளில் ஜூன் 2006க்குள் அறிமுகமாகிவிடும். இது வாடிக்கையாளருக்கு வசதியான சேவை.

900 கிளைகளில் 'ஸ்டார் இன்ஸ்டா ரெமிட்' வசதி மூலம் உடனடி பணம் பெறும் வசதி இருக்கிறது.

வேளாண் துறையினருக்கு எளிதாகக் கடன் வசதி கிடைக்க, டிராக்டர் தயாரிப்புதுறை, ஆட்டோமொபைல் துறை, சர்க்கரை ஆலைகள், பால் பண்ணைக் கூட்டுறவுகள், பஞ்சு ஆலைகள், வேளாண் விற்பனை நிலையங்கள் இவற்றோடு வங்கி ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறது.

நூற்றாண்டு விழாவையொட்டி, 101 கிளைகளை மேம்படுத்திப் பராமரித்து, 'மாடல் கிராமங்'களாகச் சிறப்பிக்க வங்கி ஒரு திட்டத்தைச் செயல்படுத்தத் தொடங்கி இருக்கிறது.

475 வங்கிக் கிளைகளில் ஆன்லைன் டாக்ஸ் அக்கவுண்டிங் சிஸ்டம் (Oltas) அறிமுகப்படுத்தப்பட்டிருக்கிறது.

ஸ்டார் மார்ட்கேஜ் லோன் - பல

வகைப்பட்ட துறையில் ஈடுபட்டிருப்ப வர்களுக்கும் கைகொடுக்கும் திட்டம்; வியாபாரிகள், பணியில் இருப்போர், தனியாகத் தொழில் செய்வோர், விவசாயிகள், நிறுவனங்கள், எனப் பல வகையினரும் இதில் பயன் பெற முடியும். எதற்கெல்லாம் தெரியுமா?

- வியாபாரத்தில் நிதித் தேவைக்கு
- குடும்பத்தில் திருமணச் செலவு, கல்வி தொடர்பான செலவு, மருத்துவச் செலவுக்கு.
- வீட்டை அல்லது கடை/அலுவலகத்தைச் செப்பனிட ஆகும் செலவுக்கு
- வீட்டு வசதிப் பொருள்கள் வாங்க...

ஸ்டார் ஆட்டோஃபின் - ஸ்கூட்டர், கார், மோட்டார் சைக்கிள் வாங்க, ரூ.25 லட்சம் வரை கடன்!

ஸ்டார் பர்சனல் லோனில் ஒன்றரை லட்சம் முதல் பத்து லட்சம் வரை கடன் வசதி பெற முடியும்.

ஸ்டார் ஹாலிடே லோனில் 2 லட்சம் ரூபாய் முதல் பத்து லட்சம் ரூபாய் வரை பயணச் செலவுகளைச் சமாளிக்கக் கடன் வசதி இருக்கிறது.

ஸ்டார் எஜுகேஷன் லோன் வசதி பெற்று, பட்டப் படிப்பு முதல் ஐ.ஐ.எம் படிப்பு வரை உள்நாட்டிலும், பட்ட மேற்படிப்புக்காக வெளிநாட்டிலும் கல்வி பெற வாய்ப்பு உள்ளது.

புதிய நிறுவனங்கள் தொடங்கும் போது, பங்குகள் விற்கிறார்கள் அல்லவா? அதை வாங்கவும் ரூபாய் பத்து லட்சம் வரை வங்கி கடன் தருகிறது!

மகளிர் தொழில் தொடங்கி அவர்கள் தொழில் அதிபர்களாக உருவாகும் வகையில் 'ப்ரியதர்சனி யோஜானா' திட்டம் வகை செய்கிறது.

சிறுதொழில் துறையில் ஈடுபடுவோருக்கென்றே ஸ்டார் எஸ்எஸ்ஐ சுப்ரீம் ஸ்கிம் உதவுகிறது.

இத்தனை வசதிகளும் வாடிக்கையாளர் நலனைக் குறித்தே வழங்கப்படுகின்றன.

வழிகாட்டும் நட்சத்திர வங்கியின் செயல்பாடுகளில் இவை முக்கியமானவை. வங்கியின் பாதையில் இவை முக்கிய மைல் கற்கள்.

இவை தவிர வாகனங்கள் வாங்கவும், போக்குவரத்து லாரிகள் வாங்கவும் கடன் வசதி அளிக்கிறது.

கைவினைப் பொருட்கள் செய்வோர் கூட பாங்க் ஆஃப் இந்தியாவில் கடன் வசதி பெற்றுத் தங்கள் கலைத் திறனால் வாழ்வில் வளம் காண முடியும்.



# "முதல் இடத்தைப் பிடிக்க வேண்டும்!"

**பா**ங்க் ஆஃப் இந்தியா சேர்மனின் பேட்டிக்காக மும்பை போக வேண்டி வந்தால் நேரம் செலவாகுமே என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, 'நீங்கள் மும்பை போகவே வேண்டாம் எங்கள் சென்னை மண்டல அலுவலகத்திலேயே அவரைப் பேட்டி கண்டு விடலாம்'' என்றார், சென்னை மண்டல மானேஜர் திரு பி.என்.ராமசுவாமி.

வீடியோ கான்ஃபரன்ஸிங் முறையில், சென்னை மண்டல அலுவலகத்தில் அமர்ந்து நாம் கேள்விகள் கேட்க, எதிரே திரையில், மும்பை தலைமை அலுவலகத்தில் தம் அறையில் இருந்தபடி, பதில்கள் தந்தார் பாங்க் ஆஃப் இந்தியாவின் சேர்மனும், மானேஜிங் டைரக்டருமான திரு எம்.பாலசந்திரன்.




விவரங்களை எல்லாம் விரல் நுனியில் வைத்திருக்கிறார் இவர். வினாக்கள் எழுப்பும்போதே விடைகள் வந்து விழுகின்றன. விவசாயிகள், சேமிப்புக் கணக்கு வாடிக்கையாளர், சிறிய - பெரிய தொழிலதிபர்கள் என்று எல்லோரையும் அரவணைத்துச் செல்லுபவர். வேகமும், விவேகமும் இணைந்து இளமைத் துடிப்புடன் செயல்படும் திரு பாலசந்திரனுக்கு மூன்றே குறிக்கோள்: 1. முதல் இடத்தைப் பிடிக்க வேண்டும். 2. வாராக்கடன் (என்.பி.ஏ) என்பதே இல்லாமல் போக வேண்டும். 3. உலக அளவில் மிகச் சிறந்த வங்கி என்ற பெயர் பெற வேண்டும்.

''கல்கி பத்திரிகையின் நீண்ட நாள் வாசகன் நான். நேரம் இல்லாமையால், சமீப காலமாக வாசிக்க முடிவதில்லை என்ற வருத்தம் எனக்கு உண்டு. இந்தச் சந்தர்ப்பத்தில் கல்கி வாசகர்களோடு பேசுவதற்குக் கிடைத்த வாய்ப்பை நினைத்து மகிழ்ச்சி அடைகிறேன்'' என்றார் எடுத்த உடனேயே. தொடர்ந்து அவருடன் பேசியதிலிருந்து...

**இந்த 2006ஆம் ஆண்டில் புதிதாக என்ன செய்யப் போகிறீர்கள்?**

எல்லா விதங்களிலும் வணிகத்தைப் பெருக்க வேண்டும். புதிய வாடிக்கையாளர்களைச் சேர்க்க வேண்டும் என்பதுதான் முக்கியக் குறிக்கோள். இதில் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி, இன்டர்நெட் பாங்கிங், பில்கள் பேமென்ட், கிரெடிட் - டெபிட் கார்டு, இது போல நிறையப் புது அம்சங்களை எல்லாம் சேமிப்புக் கணக்கு



வைத்திருப்பவர்களுக்குக் கொடுக்கத் துவங்கி இருக்கிறோம்.

கரன்ட் அக்கவுன்ட் வைத்திருக்கும் வியாபாரிகளுக்கு கேஷ் மானேஜ்மென்ட் ஸ்கீம், மல்ட்டி-பாங்க் வசதி, கடன் பெறும் வாடிக்கையாளர்களுக்காகப் புதிய திட்டங்கள், தவிர, சிறு தொழில்கள் செய்வோர், சிறு வியாபாரிகள் இவர்களுக்காகவும் நிறைய திட்டங்கள் உருவாக்கி இருக்கிறோம்.

பெரிய நிறுவனங்களான கார்ப்பரேட் கஸ்டமர்களுக்கு கட்டமைப்பு விரிவாக்கத்துக்காக (இன்ஃப்ராஸ்ட்ரக்சர் டெவலப்மென்ட்), நிதி முதலீட்டுக்காக (காபிடல் இன்வெஸ்ட்மென்ட்), அந்நியச் செலாவணிக் கடனுக்காக (ஃபாரீன் கரன்ஸி லோன்) என்று நிறையக் கொடுத்து வருகிறோம்.

இப்போது 'ரீடெய்ல் பூம்' காலம் என்கிறார்கள். பொருளாதார வளர்ச்சி காரணமாக நடுத்தர, மற்றும் அதற்கும் கீழே உள்ள மக்களுக்கு வாழ்க்கை வசதிகளை மேம்படுத்த, வீட்டுக் கடன், வாகனக் கடன், பர்சனல் லோன் என்று பல வகைகளில் கடன் வசதிகள் கொடுக்கிறோம். இதில் வீடு கட்டக் கடன் வசதி பெறும் நபர், துரதிருஷ்ட வசமாக மரணம் அடைந்தால், 'இன்ஷ்யூரன்ஸ் கவர்' மூலம் அவர் சந்ததியினரைக் கடன் பளு தாக்காமல் காக்க முடியும். அவர்கள் மேற்கொண்டு எந்தத் தவணையும் செலுத்தாமலே வீட்டைச் சொந்தமாக்கிக் கொள்ள முடியும்.




அடமானம் வைத்துக் கடன் பெற சொத்து மதிப்பில் 'மார்ட்கேஜ் லோன்' கொடுக்க ஆரம்பித்திருக்கிறோம்.

**சரி, கிராம வாடிக்கையாளர்களுக்காக ஏதேனும் சிறப்பு வசதிகள் உண்டா?**

"மாதிரி கிராமங்கள் எனப்படும் 'மாடல் வில்லேஜஸ்'ஸில், ஒட்டு மொத்த மேம்பாடு காண

உதவுகிறோம். தமிழ்நாட்டில் மட்டும் இது மாதிரி ஒன்பது கிராமங்களில் பாங்க் ஆஃப் இந்தியா தன் பணியைச் செய்திருக்கிறது.

ரூரல் ATM என்று புதிதாக அறிமுகப்படுத்தப் போகிறோம். நகரத்து மக்கள் இந்த வசதியைப் பெறும் போது, கிராமத்தில் உள்ளவர்களும் பெற வேண்டும் என்பதற்காக மொபைல் ஏடிஎம் செயல்படும்.

கிராம மக்கள் வங்கிக்கு வராமலேயே, அவர்கள் இருக்கிற இடத்திலிருந்தே பணம் பெற இது வழி செய்யும். அதே போல விவசாயிகளுக்கு, முதல் முறையாக ஏடிஎம் வசதியோடு கூடிய 'கிஸான் கார்டு' அறிமுகப்படுத்தியிருக்கிறோம். விவசாயம் சம்பந்தமான இடுபொருள் வாங்க, உரம் வாங்க, விதைகள் வாங்க, இதைப் பயன்படுத்திக் கொள்ளலாம். 'கேஷ் ட்ரீ' என்ற நெட்வொர்க் வசதி 3000 இடங்களில் இருக்கிறது. தொழில்நுட்பம் என்பது கிராமத்து மக்களுக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பதற்காக இதை அறிமுகப்படுத்தி இருக்கிறோம்.



• சென்னை மண்டல மானேஜர் பி.என்.ராமசுவாமி



• கோவை மண்டல மானேஜர் ஏ.டபிள்யூ. எம்.ஜே. பாஷா

இன்னொரு சலுகை, இந்த கார்டு வைத்திருப்பவர்களுக்கு இன்ஷூரன்ஸும் உண்டு!

இந்தியாவில், பாங்க் ஆஃப் இந்தியாவின் 2600 கிளைகள் இருக்கின்றன. 126 கிளைகள் தமிழ்நாட்டில் மட்டுமே செயல்படுகின்றன.

பெண்களுக்கு சுயவேலை வாய்ப்பு உருவாக்க SHG மூலமாக திட்டங்கள் மூலமாக பல வசதிகள் செய்து கொடுத்து வருகிறோம். பல சலுகைகள் அளித்து வருகிறோம்.

***சலுகைகள் என்றால், என்ன வகைகளில்?***

சலுகை என்றால் மிகக் குறைந்த பட்ச வட்டியாக 4 சதவிகித வட்டியே வாங்குகிறோம். அதிகபட்சமாக 8 - 9 சதவிகிதம். அவர்களுடைய பொருளாதார வசதியின் அடிப்படையில் இந்தச் சலுகையான வட்டி விகிதம் அமையும்.

***தமிழ்நாட்டில் சமீபத்தில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு ஏதும் செய்திருக்கிறீர்களா?***

செய்திருக்கிறோம். வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட விவசாயிகள் தங்கள் கடன் தொகையை சுலபமான, நீண்ட தவணைகளில் திருப்பித்தர ஏற்பாடு செய்திருக்கிறோம். பழைய நிலுவை இருந்தாலும், மறுபடி நிலத்தைப் பண்படுத்தி, சேதங்களைச் சீர்படுத்தவும், கிணறுகள் செப்பனிடவும், கால்நடைகள் வாங்கவும் கடன் கொடுக்கிறோம். தஞ்சை மாவட்டத்தில் பயிர்கள் சேதமாகி இருக்கின்றன. அவர்களுக்கு நிலத்தைச் சரிப்படுத்தவும், உரம் வாங்கவும் கடன் கொடுத்திருக்கிறோம்.

***வெளிநாடுகளில் உங்கள் வங்கிக் கிளைகள் எத்தனை செயல்படுகின்றன?***

60 வருடங்களுக்கு முன்னால், பாங்க் ஆஃப் இந்தியாதான் முதன் முதலாக வெளிநாட்டுக் கிளை தொடங்கியது என்பதைப் பெருமையுடன் சொல்லிக் கொள்கிறேன். முதன் முதல் தொடங்கப்பட்ட கிளை லண்டன் நகரில். இப்போது 14 நாடுகளில், 23 இடங்களில் எங்கள் வங்கி செயல்படுகிறது. இந்த வெளிநாட்டுக் கிளைகள் மூலம் சுமார் 30,000 கோடி ரூபாய் வர்த்தகம் நடைபெறுகிறது. இந்திய சர்வதேச வங்கிகளில் எங்கள் வங்கி முக்கியமான இடத்தை வகிக்கிறது. விரைவிலேயே, மத்திய கிழக்கு நாடு, குறிப்பாக கத்தார் நகரிலும், ஆப்ரிக்காவில் தான்சானியாவிலும், பெல்ஜியத்தில் ஆண்ட்வெர்ப் நகரிலும், அதைத் தொடர்ந்து சைனாவிலும் கிளைகள் திறக்க இருக்கிறோம்.

எங்கள் சிங்கப்பூர் கிளையிலிருந்து

தமிழ்நாட்டு வாடிக்கையாளருக்கு நாலே மணி நேரத்தில் பணம் கிடைத்துவிடும்! 'இன்ஸ்டன்ட் ரெமிட்டன்ஸ்' என்ற வசதி, அமெரிக்காவில் உள்ள இந்தியர்களுக்கு எல்லாம் கிடைக்கும்படி செய்திருக்கிறோம். எந்த ஒரு வங்கியிலிருந்து வேண்டுமானாலும் அனுப்பலாம். 24 மணி நேரத்தில் இங்கே இந்தியாவில் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம்!

'கல்கி' சந்தாதாரர்களுக்கு ஒரு சலுகை: அமெரிக்காவில், சிங்கப்பூரில் அல்லது எங்கள் வங்கியின் கிளை இருக்கிற எந்த அயல் நாட்டில் இருந்தும் உங்கள் நண்பர்களுக்கு அல்லது உறவினர்களுக்கோ 'கல்கி' இதழுக்கு அரை ஆண்டு அல்லது முழு ஆண்டு சந்தா அனுப்ப இலவச ரெமிட்டன்ஸ் வசதியை இந்தச் சமயத்தில் அறிவிக்கிறோம். எங்கள் வலைத் தளத்தைப் பாருங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**த வேர்ல்ட் இஸ் ஃப்ளாட் (The world is flat) என்ற நியூயார்க் டைம்ஸ் நிருபர் தாமஸ் ஃப்ரீட்மன் எழுதிய புத்தகத்தில் பாங்க் ஆஃப் இந்தியா பற்றி மிக உயர்வாக ஒரு பக்கம் எழுதியிருக்கிறாரே...**

அதில் எங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி. இதில் பெருமைக்குரிய விஷயம் என்னவென்றால் Core Banking என்ற முழுமையான வங்கி நிர்வாகம் தொடர்பாக ஒரு புதிய முயற்சி எடுத்தோம். நாங்களே எல்லாவற்றையும் செய்யாமல், அவுட்சோர்சிங் முறையில் 'ஹ்யூலட் பக்கார்டு' நிறுவனத்தோடு சேர்ந்து செய்த புதுமையான முயற்சி. வளர்ந்து வரும் நாடுகளில் ஒன்று எடுத்த முயற்சி. அதற்கு அந்தப் புத்தகம் வாயிலாக ஓர் அங்கீகாரம் கிடைத்திருக்கிறது.

***உங்கள் வெளிநாட்டுக் கிளைகள் மூலம் நம் நாட்டுக்கு என்னென்ன நலன்கள் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது?***

எமது வெளிநாட்டு கிளைகள் மூலம் NRIS வெகு விரைவாக இந்தியாவிற்கு பணத்தை அனுப்ப முடிகிறது. நமது நாடு அயல்நாட்டுச் செலாவணி பெறுகிறது. இந்தியாவில் உள்ள ஏற்றுமதியாளர்கள் பொருட்களை அனுப்ப, பணம் பெற எங்களது அயல் நாட்டு கிளைகள் உதவுகின்றன. இக் கிளைகள் மூலம் குறைந்த வட்டி விகிதத்தில் ECB FIL கடன்கள் இந்திய



• மும்பையில் நூற்றாண்டு விழா தொடக்கம்...

வாடிக்கையாளருக்கு கொடுக்கப்படுகின்றன.

வெளிநாடுகளில் இருந்து Capital Goods இறக்குமதி பண்ணுகிறார்கள். சிறிய தொழில் ஆகட்டும், மிகப் பெரிய தொழில் ஆகட்டும் எங்கள் வங்கி முழுமையாக ஒத்துழைப்பு தருகிறது. உதாரணமாக ஜப்பானில் இருந்து நிறைய இயந்திரங்களும், கருவிகளும் இறக்குமதி செய்கிறார்கள்.

ஜப்பனீஸ் பாங்க் ஆஃப் இன்டர்நேஷனல் கோ ஆபரேஷன் மூலமாக, இறக்குமதி செய்வதற்கும் கடன் வசதி பெறுவதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. குறைந்த வட்டி விகிதத்தில், 'யென்' கரன்சி வசதி கொடுக்க ஓர் ஒப்பந்தம் செய்திருக்கிறோம். மின்சக்தி திட்டங்கள், அடிப்படைக் கட்டுமானப் பணிகள், வாகன உற்பத்தித் தொழில் இவற்றுக்கு ஜப்பானிய இயந்திரங்கள், தொழில் நுட்பம், குறைந்த வட்டியில் கடன் வசதி

எல்லாம் இதில் கிடைக்கும்.

**வங்கிகளைப் பற்றிப் பேசும் போது, NPA எனப்படும் திரும்ப வாராக் கடன்கள் பற்றிக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. பாங்க் ஆஃப் இந்தியாவின் நிலை எப்படி இருக்கிறது?**

இன்னும் இரண்டு வருடங்களில் எங்கள் வங்கியைப் பொறுத்தவரை NPA இருக்கவே இருக்காது. காரணம், பொருளாதார வளர்ச்சியில் நிலவி வரும் அனுகூலமான சூழ்நிலை. எனவே திரும்பச் செலுத்தாதவர்களே கூட, முறையாகத் திரும்பக் கட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். வாராக் கடன் என்று இருந்த வகையில் 845 கோடி ரூபாய் வசூலித்திருக்கிறோம். பெரிய வங்கிகளிலேயே இதுதான் அதிகபட்சம். அடுத்த வருடம் நீங்கள் இந்தக் கேள்வியையே எழுப்பாத அளவுக்கு நிலைமை இருக்கப் போகிறது. பாருங்கள்!




***அடுத்த மூன்றாண்டுகளில் உங்கள் வங்கி வைத்திருக்கும் குறிக்கோள்கள் என்னென்ன?***

தமிழ்நாட்டில் புதுக்கிளைகள் பத்து திறக்கப் போகிறோம். கோயம்பேடு, பாலவாக்கம், கொளத்தூர், சிவகங்கை, தேனி ஆகிய இடங்களில் புதிய கிளைகள் தொடங்குகிறோம்.

சாதாரணமாகவே பாங்க் ஆஃப் இந்தியாவை வர்த்தக நிறுவனங்களின் நண்பன் என்பார்கள். இந்தியாவின் 500 மிகச் சிறந்த நிறுவனங்களில் 350 நிறுவனங்களுக்குமேல் எங்கள் வங்கியில் வாடிக்கையாளர்களாக இருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக சர்க்கரை, இரும்பு, மருந்துகள், சாலைப் போக்குவரத்து, மின்சக்தி, டெலிகம்யூனிகேஷன், தவிர அடிப்படைக் கட்டமைப்பு வசதிகள் என்று எல்லாத் துறைகளிலிருந்தும் எங்களுக்கு வாடிக்கையாளர்கள் இருக்கிறார்கள்.

இப்போது அகில இந்திய அளவில் எங்கள் வங்கி நாலாவது இடத்தில் இருக்கிறது. முதல் இடத்தைப் பிடிக்க வேண்டும் என்று ஓர் ஐந்தாண்டுத் திட்டம் வைத்திருக்கிறோம். இந்தியாவின் மிகப் பெரிய தேசியமயமாக்கப்பட்ட வங்கி என்ற பெயரைப் பெறுவதே எங்கள் நோக்கம்.

இப்போது 2 கோடியே 30 லட்சம் வாடிக்கையாளர்கள் இருக்கிறார்கள். இதை 5 கோடியாக உயர்த்த வேண்டும்.

இதுவரை, வங்கிகளில் கணக்குத் தொடங்க, குறைந்த பட்சம் 500 ரூபாய் வேண்டும். பிற்பட்ட நிலையில் உள்ளவர்கள் வங்கிக் கணக்கு தொடங்குவதற்காக, கிராமப் புறப் பகுதியாக இருந்தால் 50 ரூபாயும், நகர்ப்புறங்களாய் இருந்தால் 100 ரூபாயும் கொடுத்து அடையாளம் மட்டும் நிரூபித்தால்

போதும். இவர்களுக்கு ATM கார்டு கொடுப்போம். இந்த வகையில் 5 கோடி வாடிக்கையாளர்கள் என்ற குறிக்கோளை எட்டி விடுவோம். டெபாசிட் தொகையில் 15 முதல் 18 சதவிகித உயர்வும், கடன் உதவி அளிப்பதில் 20 முதல் 25 சதவிகித உயர்வும் அதிகமாக வேண்டும் என எதிர்பார்க்கிறோம். வெளிநாட்டு வங்கிக்



• ஒப்பந்தம் ஒன்றில் 'நபார்டு' வங்கித் தலைவர் ரஞ்சனா குமார், பாங்க் ஆப் இந்தியா தலைவர் பாலசந்திரன் கையெழுத்திடுகிறார்கள்.

கிளைகள் எண்ணிக்கையில் இன்னும் பத்து கூட அதிகரித்து மொத்தம் 35 கிளைகள் ஆக்க வேண்டும் என்று எண்ணியிருக்கிறோம்.

***வாடிக்கையாளர்களுக்கு 'கல்கி' மூலம் நீங்கள் விடுக்க விரும்பும் செய்தி என்ன?***

எங்கள் வங்கியில் பயன்படுத்துவது போல, வேறு எங்கும் இத்தனை நவீனமான தொழில்நுட்பம் இல்லை என்பேன். இப்போது நீங்கள் என்னுடன் பேசுவது போல, எங்கள் பயிற்சி மையத்தினரும், மண்டல அதிகாரிகளும் நேரம் குறித்து வைத்துக் கொண்டு முக்கியமான விஷயங்கள் குறித்துப் பேசலாம். பயண நேரம், செலவு இரண்டுமே மிச்சம். மிகுந்த முற்போக்கான தொழில்நுட்பம் எங்கள் வங்கியில் இருக்கிறது.

ஓய்வூதியம் பெறுவோர் நேரே வரவேண்டும் என்ற அவசியம் இல்லை. பென்ஷன் அக்கவுண்ட் வைத்திருப்பவர்களுக்கு குறைந்தபட்ச வட்டியில், மூன்று மாத அட்வான்ஸ் தொகையைக் கடனாகக் கொடுக்கிறோம். ஒருவர் 5000 ரூபாய் ஓய்வூதியம் பெறுகிறார் என்றால், அவர் 15,000 ரூபாய் கடனாகப் பெறலாம்! 'இன்டர்நெட் பாங்க்கிங்' தொடங்கலாம். 'டெபிட் கார்டு' வாங்கிக் கொள்ளலாம். மின்சார பில், தொலைபேசி பில் எல்லாவற்றையும் இங்கேயே செலுத்திவிட முடியும். வெளிநாட்டில் நமக்கு வேண்டப்பட்டவர்கள் இருப்பார்கள். அவர்கள் தங்கள் குடும்பத்தினருக்குப் பணம் அனுப்ப அருமையான வசதி இருக்கிறது. ஈஸி ரெமிட்டன்ஸ் வசதி எனப்படும் எளிதான பணம் அனுப்பும் முறையை அறிமுகப்படுத்தி இருக்கிறோம். டிராஃப்ட் எடுக்க வேண்டாம். 24 மணி நேரத்திலேயே இங்கே அவர் அனுப்பும் பணம் கிடைத்துவிடும்!

பாங்குக்குப் போய் வருவது ஒரு மகிழ்ச்சியான, சுகமான அனுபவமாக இருக்கும்.

நான் வசிக்கும் வீட்டுக்கு அருகேயே இருக்கிறது பாங்க் ஆப் இந்தியா. எப்போது பாங்க் ஆஃப் இந்தியாவில் கணக்கு ஆரம்பித்தோம் என்று சரியாக நினைவில்லை. ஆனால் எங்கள் வீட்டுக்கு அருகே உள்ள கதீட்ரல் சாலை கிளையில்தான் என் கணக்கு இருக்கிறது. கணவர், நீதிபதி கைலாசம் அவர்கள் இருந்தபோதுகூட, "நீயே



# அன்பு வங்கி

பாங்குக்குப் போய்விட்டு வந்துவிடு. சும்மாதானே இருக்கே?'' என்பார். நானும் மகிழ்ச்சியுடன் போய்விட்டு வருவேன்.

தில்லியில் அவர் சுப்ரீம் கோர்ட் நீதிபதியாக இருந்த சுமார் நான்கு வருடங்கள்கூட, பாங்க் ஆஃப் இந்தியா கிளையில்தான் கணக்கு வைத்திருந்தோம். அப்போதும் நானேதான் பணம் போடவோ, எடுக்கவோ நேரில் போவேன்.

"சுப்ரீம் கோர்ட் ஜட்ஜோட மனைவி நீங்க. நீங்களே ஏனம்மா வர வேண்டும்?'' என்று அங்கு ஆபீசர்களும் ஊழியர்களும் கேட்பார்கள். நான், "அதனால் என்ன?'' என்பேன்.

இங்கே சென்னையிலும் நான் வங்கிக்குப் போனால், அன்போடு நடத்துவார்கள். எந்த அதிகாரியாக இருந்தாலும் வித்தியாசம் பாராமல் நடந்து கொள்வார்கள். வைப்புநிதியைப் புதுப்பிக்கும்போது நாமே போவதுதான் நல்லது. எத்தனை வருடத்துக்கு, என்ன வட்டி விகிதம் எல்லாம் அப்போதுதான் அறிந்துகொண்டு, தீர்மானிக்க முடியும். ஆனால் "ஏன் இத்தனை குறைவான வட்டி விகிதம்? இப்படிக் குறைவாக இருப்பதால்தானே மக்கள் அதிக வட்டியை எதிர்பார்த்து, வெளியே கொடுத்து, ஏமாந்து போகிறார்கள்?'' என்று கேட்கத் தோன்றுகிறது.

- சௌந்தரா கைலாசம்

# ஸ்டார் வைர சேமிப்புக் கணக்கு!

தன்னிடம் உள்ள சேமிப்புக் கணக்கில் ஒவ்வொரு கால் ஆண்டிலும் சராசரியாக ஒரு லட்சம் ரூபாயோ அதற்கு அதிகமாகவோ வைத்திருந்தால் அது ஸ்டார் வைர சேமிப்புக் கணக்காக பாங்க் ஆஃப் இந்தியா கருதுகிறது.

இன்டர்நெட் வழியாக இந்தக் கணக்கை இயக்கலாம். எஸ்.எம்.எஸ், தொலைபேசி, ஏ.டி.எம் மூலமாகவும் இயக்கலாம். இவை எல்லாமே இலவசச் சேவைகள்.

காசோலைப் புத்தகத்தில் உங்கள் பெயர் அச்சடித்து அளிக்கப்படும். உங்கள் கணக்கு உள்ள நகரின் எந்த பாங்க் ஆஃப் இந்தியா கிளையிலும் இக்காசோலைகளைப் பயன்படுத்தலாம்.

வரைவோலைகள் (டிமாண்ட் ட்ராஃப்ட்) தேவைப்பட்டால் அவை கட்டணம் இன்றி வீட்டுக்கு கூரியரில் அனுப்பப்படும்.

சர்வதேச தங்க கிரெடிட் கார்ட் வசதி உண்டு. சர்வதேச டெபிட் அட்டையும் கூட உண்டு. இவை எல்லாம் எந்தக் கட்டணமுமின்றி வழங்கப்படும்.

இந்தக் கணக்கை வைத்திருப்பவர்களுக்குத் தனிநபர் (personal) கடன்கள் வழங்கப்படும்போது அதற்கான ப்ராஸஸிங் தொகை வசூலிக்கப்படாது. டீமெட் கணக்கிற்கான வருடாந்திரப் பராமரிப்புத் தொகையும் கிடையாது. இந்தக் கணக்கில் டெபாசிட் செய்யப்பட்ட காசோலை ஏதோ காரணத்துக்காகத் திருப்பி அனுப்பப்பட்டுவிட்டால் அதற்கான கட்டணம் எதையும் வங்கி வசூலிக்காது.

**பாங்க் ஆஃப் இண்டியாவின் 'ஸ்டார் வைர' மற்றும் 'ஸ்டார் தங்க' நடப்பு கணக் குகள்**

பாங்க் ஆஃப் இந்தியாவின் ஸ்டார் தங்க நடப்புக் கணக்கு குறித்த விவரங்கள் அளிக்கப் பட்டுள்ளன. அடைப்புக் குறிக்குள் உள்ளவை ஸ்டார் வைர நடப்புக் கணக்குக்கானவை.





காலாண்டில் சராசரியாகக் குறைந்தது ஐம்பதாயிரம் ரூபாய் நடப்புக் கணக்கில் வைத்திருக்க வேண்டும் (குறைந்தது இரண்டு லட்சம் ரூபாய் இருக்க வேண்டும்.)

லெட்ஜர் ஃபோலியோ கட்டணம் நான்கு மாதங்களுக்கு இரண்டு என்கிற விகிதத்தில் இலவசம் (மொத்தமாகவே கிடையாது)

ஏ.டி.எம். வசதி, இன்டர்நெட் மூலம் கணக்கை இயக்குவது, மல்டி - ப்ரான்ச் பாங்கிங் மற்றும் மல்டி - ஸிடி காசோலை வசதி உண்டு.

வெளியூர் காசோலை என்றால்கூட ஒரு நாளைக்கு 25,000 ரூபாய் வரை கணக்கில் உடனடி வரவு வைக்கப்படும்

சர்வதேச 'ஏ.டி.எம் - டெபிட் அட்டை' இலவசம். ஆண்டுக் கட்டணமும் கிடையாது.

வைர நடப்புக் கணக்குகளுக்கு மேலும் சில சலுகைகளும் உண்டு. மூன்று மாதங்களுக்கு ஒருமுறை ஆறு வரைவோலைகளைக் கட்டணமின்றி பெறலாம். விபத்துக்காக இன்ஷூரன்ஸ் கவர் உட்பட்ட கடன் அட்டை ஒன்றும் இலவசமாக வழங்கப்படும். எப்போது கேட்டாலும் கணக்கு விவரங்கள் இலவசமாக வழங்கப்படும். கணக்கில் நிலுவைக்கு அதிகமான தொகைக்கு காசோலை வழங்கினாலும், அதை ஓவர்டிராப்டாகக் கருதி, முன்னே குறிப்பிட்ட தொகை வரை, வங்கி, அந்தக் காசோலையை 'ஆனர்' செய்யும்.

வட்டி குறைந்தாலும் சேமிப்பை வங்கியில்தான் போடுவேன் என்று அடம் பிடிக்கிறார்கள் பலர். கூப்பிட்டுக் கூப்பிட்டுக் கடன் கொடுக்கும் வங்கிகளின் எண்ணிக்கை அதிகமாகி விட்டன.

வங்கிகளை எப்படிப் பயன்படுத்திக் கொள்வது புத்திசாலித்தனம்? சேமிக்கவா? செலவழிக்கவா? ஒரு விவாதத்தை ஏற்பாடு செய்தோம்.



# வங்கியில் சேமிப்பதற்கா

வழக்கறிஞர் ஆர்.எஸ். வரதராஜன், எல்.ஐ.சி.யில் பணியாற்றும் லதா ரமேஷ், ஆடிட்டர் கே. வெங்கட்ராமன், தொழிலதிபர் ஏ. பாலகுமார் மற்றும் முன்னாள் வங்கி அதிகாரி எஸ். வெங்கடேஸ்வரன ஆகியோர் விவாதத்தில் கலந்து கொண்டனர்.

**வெங்கடேஸ்வரன்:** 'வங்கின்னா பணம் பாதுகாப்பா இருக்கும்'. இதுதான் பொதுவாக மக்கள் மத்தியிலே வங்கிகளைப் பற்றி இருக்கும் இமேஜ்.

**பாலகுமார்:** போட்ட பணத்தைச் சுலபமாகத் திருப்பி எடுத்துக்கலாம்ன்றதும் வங்கியின் ஒரு முக்கிய வசதி.

**லதா:** நகைகளை வீட்டில் பாதுகாப்பாக வைத்திருக்க முடியாதுங்கற சூழலில், வங்கி லாக்கர்கள்தான் பல நடுத்தரக் குடும்பங்களை நிம்மதியா வைச்சிருக்கு.

**வெங்கட்ராமன்:** வங்கியின் இமேஜ் என்பது அவரவர் தேவையைப் பொறுத்தது. ஓய்வு பெற்ற ஊழியர்கள் சேமிப்புன்ற கோணத்தில் வங்கியை நாடுவார்கள். வியாபாரிகளைப் பொறுத்த வரை வங்கி என்பது கடன் கொடுக்கும் காமதேனு.

**வரதராஜன்:** நல்ல கல்விச் சூழலில் வளர்ந்தவர்களுக்கும் பணக்காரர்களுக்கும் வங்கிகள் உதவுவது உண்மைதான்.

**பாலகுமார்:** ஏன், எளியவர்களும் கூடத்தான் இப்போதெல்லாம் சுலபத்தில் வங்கிகளை அணுக முடிகிறது.

**வெங்கட்ராமன்:** கடந்த ஏழெட்டு வருடங்களாக வங்கித் துறையில் நிறைய மாறுதல்கள். தவிர வசதிகளின் காரண

மாகவும் கட்டாயத்தின் காரணமாகவும் பல கொடுக்கல் வாங்கல் இப்போதெல்லாம் வங்கியின் மூலமாகத்தான் நடைபெறுகின்றன. உதாரணத்துக்கு, பெரிய சர்க்கரை ஆலைகள்கூட முன்பெல்லாம் ஊழியர்களுக்கான சம்பளத்தை ரொக்கமாகத்தான் அளித்து வந்தன. ஆனால் இப்போதெல்லாம் வங்கிகள் மூலமாகத்தான் இதை அளிக்க வேண்டும் என்று கட்டாயம் ஆக்கப்பட்டதால் எல்லா ஊழியர்களுக்கும் வங்கிக்கணக்கு இருக்க வேண்டியதும் கட்டாயம் ஆகிவிட்டது. ஒவ்வொரு மாதமும் தேவைப்படும் பணத்தை மட்டுமே அவர்கள் எடுத்துக் கொள்வதால் தானாக சேமிப்பும் கொஞ்சம் நடந்துவிடுகிறது.

**வெங்கடேஸ்வரன்:** நான் கிராமக் கிளைகளிலும் வேலை செய்து இருக்கிறேன். தங்க நகைகளுக்குக் கடன் வாங்குவதற்காக அந்தப் பகுதி மக்கள் முக்கியமாக வருவார்கள். அதையே தூண்டிலாக வைத்துச் சேமிப்புப் பழக்கத்தை உருவாக்குவோம்.

பாதுகாப்பாக இருந்தால் போதும் என்பதுதான் இன்றைய நடுத்தர மக்களின் முக்கியமாக பெண்களின் - மனநிலை.

**வரதராஜன்:** என் மகள் அமெரிக்காவில் பயோடெக் மேல்படிப்பு படிக்க ஆசைப்படுகிறாள். என்னிடம் அவ்வளவு லட்சமெல்லாம் சேமிப்பு கிடையாது. இருந்தாலும் "நீ தாராளமாகப் படி" என்று சொல்ல முடிகிறது என்றால், இன்றைய வங்கிகள் கொடுக்கும் தைரியம்தான். அதுவும் தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் கல்விக்கடனுக்கு நியாயமான வட்டியைத்தான் வசூலிக்கின்றன.

**பாலகுமார்:** தொடக்கத்தில் வங்கியிடமிருந்து ஏழாயிரம் கடன் பெற்றேன். இந்த இருபது வருடங்களில் மூன்று கோடி பெறும் அளவுக்கு என் வியாபாரம் தழைத்திருக்கிறது.

# செலவழிப்பதற்கா?

**லதா:** இப்போது ஏ.டி.எம் வசதியும், லாக்கர் வசதியும்தான் முக்கியத் தூண்டில்கள்.

**வரதராஜன்:** நம் நாட்டில் கல்வி அறிவு இல்லாதவர்கள் அதிகம். மேல்தட்டு வாடிக்கையாளர்களுக்குக் கிடைக்கும் மரியாதையும் ஆலோசனைகளும் மற்றவர்களுக்கு வங்கிகளில் கிடைக்கிறதா? விதிவிலக்குகள் இருக்கலாம் என்பது வேறு விஷயம்.

**லதா:** நடுத்தர வர்க்கத்துப் பெண்கள் இன்னமும் கூட பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்ய பயப்படுகிறார்கள். சடசடவென சில நிதி நிறுவனங்கள் மூடப்பட்டதில் அதிக வட்டிக்காக ஆசைப்பட்டது தவறு என்பதையும் உணர்ந்துவிட்டார்கள். ஆக எதற்கு ரிஸ்க்? குறைவான வட்டி இருந்தாலும் பணம்

சோதனையான காலகட்டத்தில்கூட எனது வங்கி புரிந்துகொண்ட மனோபாவத்துடன் செயல்பட்டது. என்னைப் போன்ற பல வியாபாரிகள் முன்னேறியதற்கு வங்கிகள் ஒரு முக்கிய காரணம்.

**வெங்கட்ராமன்:** 1996 - 99ல் நம் பொருளாதாரத்தில் ஒரு வீழ்ச்சி. அரசியல் உட்பட இதற்குப் பல காரணங்கள். அந்தக் காலகட்டத்தில் பல தொழில்களுக்கு மந்தகதிதான். வங்கிகளின் ஆதரவால்தான் அவற்றால் மீண்டும் தலையெடுக்க முடிந்தது. எனக்குத் தெரிந்த ஓர் ஐஸ்க்ரீம் தயாரிப்பாளர் அப்போது நிறையப் பொருளாதார சோதனைகளைச் சந்தித்தார். கடன் தவணைகளைத் தள்ளிப் பெற வங்கி ஒப்புக்



கொண்டதால் நாளடைவில் அவரால் மறுபடி தலைநிமிர முடிந்தது.

**லதா:** என் அப்பா சர்வீஸில் இருந்தபோதே இறந்துவிட்டார். நாங்கள் மூன்று சகோதரிகள். எனக்கு மட்டுமே அப்போது கல்யாணம் ஆகி இருந்தது. முதல் தங்கைக்கு அப்பா வேலை செய்த நிறுவனத்திலேயே வேலை கிடைத்தது. அப்பா இறந்தபோது கிடைத்த வைப்புநிதி போன்ற தொகையை வங்கியில் போட்டு வைத்து, உரிய நேரத்தில் மீண்டும் வங்சியிலேயே முதலீடு செய்து... என்று இப்படியே என் இரண்டு தங்கைகளுக்கும் கல்யாணம் செய்து வைத்தார் என் அம்மா. வங்கியில் சேமிப்பது பிரச்னை இல்லாதது. தேவைகளைப் பெருக்கிக் கொள்ளாமல் இருந்தால் இதுவே போதும்.

**வரதராஜன்:** ஆனால் தேவைகளைப் பெருக்காமல் இருப்பது சுலபமான விஷயமா? முன்பெல்லாம் மாதத்துக்கு இரண்டாயிரம் ரூபாய் செலவழித்தேன் என்றால் இன்று கிரெடிட் கார்ட் இருப்பதாலேயே மாதம் 20,000 ரூபாய் செலவழிக்கிறேன். ஏதோ மெஸ்மரிசம் செய்வதுபோல் பேசி, கடன் அட்டையைப் பெற்றுக் கொள்ள வைத்துவிடுகிறார்கள். பிறகு ''சேர்த்துச் சேர்த்து என்ன செய்யப் போகிறோம்? வாழ்க்கையைச் சந்தோஷமாக அனுபவிக்கலாமே'' என்கிற மனப்போக்கு வந்துவிடுகிறது.

**வெங்கட்ராமன்:** கரெக்ட். முன்பெல்லாம் சேமித்ததைக் கொண்டு செலவு செய்வோம். இப்போதெல்லாம் மேலை நாட்டுச் சித்தாந்தப்படி செலவழித்துவிட்டு அதற்குத் தகுந்த மாதிரி சம்பாதிப்பது என்று முயற்சி செய்கிறோம். வீட்டுக்கடன்களையும் இப்போது வங்கிகள் தாராளமாக அளிக்கத் தொடங்கிவிட்டன.

**வெங்கடேஸ்வரன்:** மென்பொருள் என்ஜினியர்கள், பி.பி.ஓ என்று அதிகம் சம்பாதிப்பவர்கள் பெருகினதில் பணப்புழக்கம் அதிகமாகிவிட்டது. முன்பெல்லாம் வேலைக்குச் சேர்ந்து பத்து வருடங்களாவது ஆன பிறகுதான் சொந்த வீடு கட்டுவது பற்றி யோசிப்பார்கள். இப்போது வேலைக்குச் சேர்ந்த இரண்டாவது வருடமே ஒரு பெரிய 'அபார்ட்மென்டை' வாங்கிவிடுகிறார்கள். வங்கியும் இவர்களுக்குக் கடன் வழங்கத் தயார். தவணைகளைச் சுலபமாகத் திருப்பிச் செலுத்த முடியும் என்கிற நம்பிக்கை இரு தரப்புக்குமே வந்துவிட்டது.

**லதா:** இதுபோன்ற வசதிகளை புத்திசாலித்தனத்துடன் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். கடன் அட்டையைக் கொண்டு 45 நாட்களுக்கு வட்டியில்லாத கடன் பெற முடியும். சரியான திட்டமிடல் தேவை.

**பாலகுமார்:** வங்கிக் கணக்கில் உள்ள வசதிகள் பெருகிக்கொண்டே போகின்றன. முன்பெல்லாம் ஒரு வெளியூர் காசோலையை நம் கணக்கில் போட்டால் அதைப் பெற நாள் கணக்கில் காத்திருக்க வேண்டும். இப்போதோ சில மணி நேரங்கள் போதுமானது. உள்ளூர் காசோலை என்றால் ஒரே மணி நேரத்தில் கூட



வரவு வைக்கப்படுகிறது.



**வெங்கட்ராமன்:** என்றாலும்கூட மிகப் பிரபலமான அளவில் பலர் ஏ.டி.எம் வசதியைப் பயன்படுத்துவதில்லை என்றுதான் படுகிறது. டெக்னாலஜியின் மீது இன்னமும் கூட பயம் முழுமையாக நீங்கிவிடவில்லை. வேறு யாராவது இந்த வசதியைப் பயன்படுத்திக்கொண்டு நம் கணக்கில் இருந்து பணத்தை எடுத்துக்கொண்டு விடுவார்களோ என்கிற பயம்! வெவ்வேறு ஷிப்டுகளில் வேலைக்குச் செல்பவர்களுக்குத்தான் ஏ.டி.எம் ஒரு வரமாகத் திகழ்கிறது.



**லதா:** 'கோர் பேங்கிங்' வந்துவிட்டதால் சேமிப்புக் கணக்குகளை இயக்குவது ரொம்ப சுலபமாகிவிட்டது. மைலாப்பூரில் உள்ள என் கணக்கை, மீனம்பாக்கத்தில் என் உறவினர் வீட்டுக்குப் போகும்போதும் அங்குள்ள வங்கி கிளைகளிலிருந்தே இயக்கிப் பணம் எடுத்துக் கொள்ளலாம் என்பது எவ்வளவு வசதி!

**வெங்கட்ராமன்:** ஓய்வு பெற்றவர்கள் தங்கள் வாழ்நாள் சேமிப்பை வைக்க வங்கியைத்தான் பெரும்பாலும் தேர்ந்தெடுக்கிறார்கள். ஆனால் இதிலும் ஒரு விதிவிலக்கு. இப்போதெல்லாம் 45 வயதிலேயே தாங்கள் பார்க்கும் வேலையில் இருந்து விலகி, தங்களுக்குப் பிடித்த வேறு ஒரு துறையில் பணம் சம்பாதிக்கப் பலரும் முடிவெடுக்கிறார்கள். இவர்கள் மியூச்சுவல் ஃபண்டுகளைத்தான் அதிகமாக நாடுகிறார்கள்.

**வெங்கடேஸ்வரன்:** வங்கிகளும்தான் இப்போது பரஸ்பர நிதியில் ஈடுபடுகின்றனவே?

**வரதராஜன்:** ஐந்து வருடங்களுக்கு முன் என் நண்பர் ஒருவர் வியாபாரம் செய்வதற்காக கோவையில் உள்ள ஒரு வங்கிக் கிளையை அணுகினார். அவரிடம் பெரிய முதலீடு இல்லை. ஆனால் அவரது வேகத்தையும் ஆர்வத்தையும் சரியாக எடை போட்ட அந்த வங்கி அதிகாரி அவருக்கு மிகவும் அதிகமான கடன் உதவியை வழங்கினார். இன்று அவர் ஆடை வியாபாரத்தில் ஓஹோ என்று இருக்கிறார். இப்படி மனிதர்களைக் கணிக்கும் திறமை கொண்ட அதிகாரிகள் இருக்கும்வரை, வங்கிகளைப் பயன்படுத்திக் கொள்வது நமக்கும் நல்லது. நாட்டுக்கும் நல்லது.



படங்கள்: **ஸ்ரீஹரி**

**'டீ.வி. நியூஸ்' வரதராஜன்:**

**பா**ங்க் ஆஃப் இந்தியாவில் 27 வருடங்கள் பணியாற்றி ஓய்வு பெற்ற டீ.வி நடிகர் வரதராஜன்.

"1973-ஆம் ஆண்டு பாங்க் ஆப் இந்தியாவில் பணியில்



• வரதராஜன்

இணைந்தபோது, 'ஐந்து கதிர்கள் கொண்ட நமது நட்சத்திரத்தின் ஒரு கதிர், மேல் நோக்கிச் செல்வது, நம்மை வாழ்க்கையின் உயரத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்ற லட்சியத்தில்தான் என்றார்கள். எந்த ஒரு நிறுவனமும் தன்னைப் பற்றிச் சொல்லிக் கொள்ளும் சுய புராணம்தான் இது என்று நான் விளையாட்டாக ஒதுக்கிவிட்டேன். சரியாக 27 ஆண்டுகளுக்குப் பிறகு விருப்ப ஓய்வில் விடை பெற்றபோதுதான் என்னுடைய வளர்ச்சிக்கும் உயர்வுக்கும் காரணமே இந்த நட்சத்திர வங்கிதான் என்கிற உண்மையை உணர்ந்துகொண்டேன்.

'மாதா பிதா குரு தெய்வம்' இது நம் அனைவருக்கும் நிரந்தர வேதம். நல்ல பண்புகளை ஊட்டி வளர்த்தவர்கள் மாதா பிதா; உலகத்தை உணர வைத்தவர்கள் குரு; ஆனால், உயரிய வாழ்க்கையை அளித்து என்னை வாழ வைத்த தெய்வம் எனது பாங்க் ஆஃப் இந்தியா.

யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம். இது மீசைக்கார பாரதியின் பெருமிதம். யாமறிந்த வங்கிகளில், பாங்க் ஆஃப் இந்தியா போல சேவையாற்றும் பிறிதொரு வங்கி காணோம். இது மீசையற்ற இந்த வரதுவின் கர்வம்.

கிளைகளும், விழுதுகளுமாக 100 ஆண்டு கடக்கும் மாபெரும் ஆலமரம் எனது பாங்க் ஆஃப் இந்தியா. அந்த ஆலமரத்தின் அடியில் நின்று அத்தியாயம் கண்டவன் நான்; அதனைத் துருவ நட்சத்திரமாகக் கண்டு, வாழ்க்கைக் கரையைத் தொட்டவன் நான்; பணியில் இருந்தாலும், இல்லாவிட்டாலும், பாங்க் ஆஃப் இந்தியா என்ற கூட்டுக் குடும்பத்தின் அடிப்படை உறுப்பினன் என்பதே எனது பலம்!

**சுதா ரகுநாதன்:**
**(கர்நாடக இசைப் பாடகி)**

"**எ**ன் அனுபவத்தில் வாடிக்கையாளர் சேவையின் மேன்மையைக் கண்கூடாக நான்

# எங்கள் குடும்ப வா



• சுதா ரகுநாதன்

பாங்க் ஆஃப் இந்தியாவில் பார்த்து வருகிறேன். பத்து வருடங்களுக்கும் மேலாக அந்த வங்கியின் மைலாப்பூர் கிளையின் வாடிக்கையாளராக இருந்து வருகிறேன்.

பாங்க் ஆஃப் இந்தியாவின் நூற்றாண்டுவிழா தொடக்க விழாவில் சில வாடிக்கையாளர்களைப் பேசச் சொல்லி கௌரவித்தார்கள். அந்த அங்கீகாரம் எனக்கும் கிடைத்தது. இதில் அவர்களுக்குப் பெருமை என்றார்கள். எனக்குத்தான் சந்தோஷம்.

ஒரு குழந்தை கேட்கும் எதையுமே தாய் செய்வாள். குழந்தை கேட்காமலேயே கூட அதற்கு என்னென்ன வேண்டுமோ அதையெல்லாம் செய்வாள். பாங்க் ஆஃப் இந்தியாவும் இந்த விதத்தில் எனக்குத் தாய்தான். 'நீங்கள் பிஸியாக இருப்பீர்கள். இதை யோசித்திருக்க மாட்டீர்கள்' என்றபடி அவர்கள் அளிக்கும் ஆலோசனைகள் மிகவும் பயனுள்ளவையாக இருந்திருக்கின்றன.'

**அருணா சாய்ராம்:**
**(கர்நாடக இசைப்பாடகி)**

"பாங்க் ஆஃப் இந்தியாவுக்குப் போவதென்றால் எனக்குச் சொந்த வீட்டுக்குப் போவதுபோன்ற ஓர் உணர்வு ஏற்படும். மிகவும் சிறப்பான வாடிக்கையாளர் சேவை அளிக்கும் வங்கி அது. சென்னையில் செட்டில் ஆன கடந்த நான்கு வருடங்களாக இந்த வங்கியின் மைலாப்பூர் கிளையில் கணக்கு வைத்திருக்கிறேன். அவர்கள் குடும்பத்தில் ஒருவராகத்தான் என்னை நடத்துகிறார்கள். மும்பையிலும் இந்த வங்கியில் கணக்கு வைத்திருந்தோம்.

நானும் என் கணவரும் அப்போது பாஸ்டனில் இருந்த எங்கள் மூத்த மகளிடம் சென்றிருந்த சமயம். எங்கள் இரண்டாவது மகள் மேல்படிப்புக்காக (MBA, MAA இணைந்த படிப்பு அது) பல்கலைக்கழகங்களுக்கு விண்ணப்பித்திருந்தாள். அப்போது சின்சினாடி பல்கலைக் கழகத்தில் இருந்து உடனடியாக ஒரு வங்கிச் சான்றிதழ் கேட்டிருந்தார்கள். பாஸ்டனிலிருந்தே நாங்கள் தொலைபேசியில் வங்கியை அணுக, அவர்கள் எங்கள் கவலையைப் புரிந்துகொண்டு, உடனடியாக ஆவன செய்வதாக உறுதி அளித்ததுடன் ஃபேக்ஸில் அந்தச் சான்றிதழையும் உடனடியாக அனுப்பி வைத்தார்கள். அந்த உதவியை மறக்கவே முடியாது!"



• அருணா சாய்ராம்

# என்.ஆர்.ஐ வங்கிக் கணக்கு!

**இந்திய வங்கியொன்றில் ஒரு என்.ஆர்.ஐ எப்படிக் கணக்கைத் துவக்கலாம்?**

ஏற்கெனவே வாடிக்கையாளராக இருக்கும் ஒருவரின் அறிமுகம் தேவை. அல்லது தூதரக அதிகாரிகளும் அறிமுகம் செய்யலாம். இப்படிக் கணக்கு துவக்கும் போது பாஸ்போர்ட்டின் முக்கியமான பக்கங்களின் நகல்கள் (உண்மையானவை என்று 'நோட்டரி பப்ளிக்'கால் உறுதி செய்யப்பட்டவை), பின்புறம் கையெழுத்திடப்பட்ட இரண்டு பாஸ்போர்ட் அளவுப் புகைப்படங்கள் ஆகியவற்றுடன் வங்கியை அணுகி கணக்கு துவக்கலாம்.

**இந்தியாவில் வசிக்கும் ஒருவருக்கு ஒரு என்.ஆர்.ஐ பவர் ஆஃப் அட்டார்னி கொடுக்கலாமா?**

கொடுக்கலாம். என்.ஆர்.ஐ கணக்கை இயக்குவதற்கும், டெபாசிட்டைப் புதுப்பிக்கவும் இந்த அதிகாரத்தை வழங்கலாம்.

**என்.ஆர்.ஓ கணக்கு என்றால் என்ன?**

இங்கு வங்கிக் கணக்கு வைத்திருக்கும் இந்தியர் வெளிநாட்டுக்குச் சென்றுவிட்டால், ஏற்கெனவே உள்ள அவர்களது கணக்கை என்.ஆர்.ஓ கணக்கு என்பார்கள். என்.ஆர்.ஐ.க்களும் கூட உள்ளூர் கொடுக்கல் வாங்கலுக்கு என்.ஆர்.ஓ கணக்கைத் துவங்கலாம். உள்ளூரில் வழங்கப்படும் வட்டிதான் இதற்கு வழங்கப்படும். சேரும் வட்டிக்கான உரிய வருமானவரியும் கழித்துக் கொள்ளப்படும்.




**என்.ஆர்.ஐ எப்போது மீண்டும் வழக்கமான இந்தியர் (ரெஸிடெண்ட்) ஆகிறார்?**

இந்தியா திரும்பியவுடன் என்.ஆர்.ஐ இது குறித்து வங்கிக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும். அவரது கணக்கில் இத்தகவல் உடனே குறிக்கப்படும். ஆனால் பிக்ஸட் டெபாசிட் போன்ற டெர்ம் டெபாசிட் என்றால் அது முடியும் காலம் வரை (பாதியிலேயே வாடிக்கையாளர் இந்தியா திரும்பி விட்டாலும்) முதலில் ஒப்புக்கொண்ட (அதிக) வட்டியே அளிக்கப்படும். அமெரிக்க டாலர்களிலேயோ அல்லது பிரிட்டிஷ் பவுண்ட்களிலேயோ தங்கள் கணக்கைத் தொடர வேண்டும் என்று என்.ஆர்.ஐ விருப்பப்பட்டால் அதுவும் சாத்தியம் தான்.

**ஒரு என்.ஆர்.ஐயால் தன் டெர்ம்**

**டெபாசிட்டுகளுக்கெதிராக வங்கியிடமிருந்து கடன் பெற முடியுமா?**

முடியும். கடன், ஓவர் ட்ராப்ட் என இரண்டு விதமான வசதிகளை வங்கி அளிக்கலாம். தனிப்பட்ட தேவைகள், வணிகத் தேவைகள் இப்படி நோக்கம் எதுவாகவும் இருக்கலாம். மேலும் வெளிநாட்டுக்கு அந்நியச் செலவாணியைத் திருப்பி அனுப்பாத பட்சத்தில், இந்திய பங்கு சந்தைகளில் முதலீடு செய்யலாம். சுய வாழ்க்கைக்காக இந்தியாவில் ப்ளாட் அல்லது வீடு வாங்கவும் கடன் வசதி உண்டு. விவசாயம் மற்றும் ரியல் எஸ்டேட் துறைகளில் முதலீடு செய்ய கடன் வசதி மறுக்கப்பட்டுள்ளது.

**என்.ஆர்.ஐக்களால் சில சமயம் குறிப்பிட்ட தேதியில் தங்கள் டெபாசிட்டைப் புதுப்பிக்க முடியாமல் போகிறது. இதனால் வட்டி நஷ்டம். இதைத் தவிர்க்க என்ன செய்யலாம்?**

தானாகவே புதுப்பிக்கும் திட்டத்தில் (ஆட்டோமேடிக் ரென்யூவல் ஸ்கீம்) சேர்ந்து கொள்ளலாம். டெபாசிட் ரசீதுகளை வங்கியின் பாதுகாப்பிலேயே வைக்கும் வசதியையும் பயன்படுத்திக் கொள்ளலாம். இந்த வசதியின் கீழ், தவணைக் காலம் முடிந்தவுடன் வங்கி அதே கால அளவில் அந்த டெபாசிட்டை புதுப்பித்து, புதிய ரசீதின் ஒரு நகலை வாடிக்கையாளருக்கு அனுப்பி வைக்கும். ஒரிஜினல் ரசீது வங்கியின் வசம் இல்லாத பட்சத்திலும், வங்கி டெபாசிட்டைப் புதுப்பிக்கவும் வாய்ப்பு உண்டு. ஆனால் தவணை முடிந்த டெபாசிட்டின் ஒரிஜினல் ரசீதைத் திருப்பித் தந்த பின்னரே புதுப்பிக்கப்பட்ட டெபாசிட்டின் ரசீதைப் பெற இயலும். பாங்க் ஆஃப் இண்டியா இந்தச் சேவையை, வாடிக்கையாளரின் நலனைக் கருத்தில் கொண்டு இலவசமாக செய்து வருகிறது.

**என்.ஆர்.ஐக்கள் எப்படிப்பட்ட கணக்கைத் துவங்கலாம்?**

ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட என்.ஆர்.ஐக்கள் கூட்டாக கணக்கைத் துவங்கலாம். இது என்.ஆர்.ஐ. எக்ஸ்டர்னல் கணக்கிற்குப் பொருந்தும்.

என்.ஆர்.ஓ என்ற கணக்கில் இந்திய தேசப் பிரஜையையும் கூட்டாகச் சேர்த்துக் கொள்ள வாய்ப்பு உண்டு.

மேற்கண்ட கணக்குகளை

1. சேமிப்பு 2. நடப்பு 3. ரிகர்ரிங் 4. பிக்ஸட் என்று எந்த வகையிலும் துவங்கலாம்.




இந்தக் கணக்குகளில் நாமினேஷன் வாய்ப்பு உண்டு.

*(பாங்க் ஆஃப் இந்தியாவின் பார்வை இது. மற்ற வங்கிகளில் இவை ஓரளவு மாறுபடக் கூடும்)*

# தந்தை விதைத்

கிரானைட் தொழிலில் காலடி எடுத்து வைப்பதற்கு முன்னாலேயே, எம்.ஜி. நாராயணசுவாமி, பாங்க் ஆஃப் இந்தியாவின் தலைமைக் கிளையில் சேமிப்புக் கணக்கு வைத்திருந்தார்.

நாராயணசுவாமி கடுமையான உழைப்பாளி. கட்டுப்பாட்டுடன் செயல்படுபவர். எதிர்காலம் பற்றிய கணிப்பு அவரிடம் இருந்தது.

ஆர்மீனியன் தெரு பாங்க் ஆஃப் இந்தியா கிளையில் கிரானைட் தொழில் தொடங்க 1986ல், நாராயணசுவாமிக்கு ரூ.90,000 வரை கடன் வசதி கொடுக்கப்பட்டது. அப்போது இருந்த ஊழியர்கள் ஐந்து பேர்தான். இன்றைக்கு குவாரிகளில் வேலை செய்கிறவர்களையும் சேர்த்து 250 பேர் இருக்கிறார்கள்!

முதன்மைக் கிளையில் இருந்த சேமிப்புக் கணக்கை, 1990-ல், சென்னை ஓவர்சீஸ் கிளைக்கு மாற்றிக் கொண்டார் நாராயணசுவாமி. காரணம், ஸ்பெயின், இத்தாலி, ஜெர்மனி, தைவான், அமெரிக்கா என்று வாடிக்கையாளர்கள் இந்த நாடுகளில அதிகரித்தனர். இவருடைய கிரானைட்டை வாங்கத் தொடங்கினர்.



• நந்தகுமார்



• மகேஷ்



• மகேந்திர குமார்



• சுதாகர்

"நாங்கள் நால்வரும் உடன் பிறந்த சகோதரர்கள். கூட்டுக் குடும்பமாகவே இன்றைக்கும் இருக்கிறோம். பிஸினஸை நாங்கள் நால்வரும் கவனித்துக் கொள்கிறோம்!'' என்கிறார் இளையவர் சுதாகர், சகோதரர்கள் மகேஷ், நந்தகுமார், மற்றும் மகேந்திரகுமார் சார்பாக. நால்வரும் தேவி நாராயண் எக்ஸ்போர்ட்டர்ஸ் பிரைவேட் லிமிடெடின் இயக்குனர்களாக இருந்து வருகிறார்கள். ''தந்தை போட்டுக் கொடுத்த பாதையில் அடி பிசகாமல் செல்கிறோம். தாயார் விமலா நாராயணசுவாமி முடிந்தபோதெல்லாம் அலுவலகம் வருவார். எந்த விஷயங்களிலும் ஒரு முடிவெடுக்க உதவுவார்.

''நாங்கள் இந்த வங்கியுடன் வளர்ந்தோம். எந்த ஒரு சமயத்திலும் வங்கியை மாற்ற வேண்டும் என்ற எண்ணமே எங்களுக்கு வந்ததில்லை. காரணம், இவர்களுடைய சேவை அணுகுமுறை பாராட்டும்படி இருக்கிறது. 'புரொஃபஷனல்' என்பார்களே, அப்படி இருக்கிறது வங்கியின் பணி. அயல்நாட்டு வங்கிகளில் 'பெர்சனல் டச்' இருப்பதில்லை. அது மட்டுமல்ல, மறைந்திருக்கும் சார்ஜுகள் ஏராளமாக இருக்கும். வெளிப்படையாகத் தெரியாது. பாங்க் ஆஃப் இந்தியாவில் அது

# வித்து!

போன்ற பிரச்னையே இல்லை."

சமயத்தில் கை கொடுப்பவர்கள் என்பதை விளக்கினார் சுதாகர்:

"குவாரிகளில் பயன்படுத்த எங்களுக்கு எக்ஸ்கவேட்டர் தேவைப்பட்டது. இதற்கு முன்னால் அவற்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டிருந்தோம். எனவே எர்த் மூவிங் கருவி வாங்கியாக வேண்டும் என்ற நிலையில் பாங்க் ஆஃப் இந்தியாவை அணுகினோம். இந்த மாதிரி கருவி வாங்க நிதி வசதி அளிப்பது வங்கிக்குப் புதிது. ஆனால் அவர்கள் துணிந்து எங்களுக்கு எர்த் மூவர் வாங்க நிதி வசதி செய்து கொடுத்தார்கள். இன்றைக்கு எங்களால் நான்கு எர்த் மூவர் இயந்திரங்கள் வைத்திருக்க முடிகிறது என்றால், அதற்குக் காரணம் பாங்க் ஆஃப் இந்தியாதான்!




"வங்கியின் அதிகாரிகள் திறமையான, சிறந்த பயிற்சி பெற்றவர்கள். அசாதாரணமான செயல்திறன் கொண்டவர்கள்!" என்கிறார் சுதாகர்.

இன்றைக்கு முப்பது கோடி ரூபாய் அளவுக்கு வர்த்தகம் இருப்பதற்கு, பாங்க் ஆஃப் இந்தியாவின் உதவிதான் காரணம்.

முதல் பத்து நிறுவனங்களுள் ஒன்றாக தேவி - நாராயண் எக்ஸ்போர்ட்ஸ் இடம் பிடிக்க முடியும் என்ற நம்பிக்கை இவர்களுக்கு இருக்கிறது.

தேவிநாராயண் எக்ஸ்போர்ட்டர்ஸ் பிரைவேட் லிமிடெட், கிராமார் என்டர்பிரைசஸ் என்ற இரு நிறுவனங்கள் தவிர, தேவி நாராயண் ஹவுசிங் அன்ட் பிராப்பர்ட்டி டெவலப்மென்ட் என்ற ரியல் எஸ்டேட் வர்த்தகத்திலும் சகோதரர்கள் தங்கள் துறையை விரிவாக்கி இருக்கிறார்கள்.

சென்னையில் தியாகராய நகரிலும், ராஜா அண்ணாமலைபுரத்திலும் கட்டடங்கள் கட்டியிருப்பது தவிர, பெங்களூரிலும் இவர்கள் காலூன்றி விட்டார்கள். "இங்கே கட்டப்பட்டவை எல்லாமே விற்றுப் போய் விட்டன!"

"நாங்கள் அரசாங்க கான்ட்ராக்ட்டுகளைச் செய்து கொடுத்துக் கொண்டிருந்தோம். அந்த அனுபவம் கை கொடுக்கிறது. அதனால்தான் இந்தத் துறையில் ஈடுபடுவதற்குத் தைரியம் வந்தது!" என்கிறார் சுதாகர்.

தந்தை நாராயணசுவாமி தொடங்கி வைத்த வர்த்தகத்தை, இன்னும் விரிவாக்கி, அவர் காலடிச் சுவடுகளில் தடம் பதிக்க சகோதரர்கள் நால்வரும் ஒற்றுமையுடன் உழைப்பதும், அதற்கு பாங்க் ஆஃப் இந்தியா கைகொடுத்து உதவுவதும் ஒரு வெற்றிக் கதையின் சுவாரசியமான பகுதிகள்!

**ப**த்தே வருடங்களில், 14 மல்லியன் டாலர் ஆக இருந்த வணிகத்தை, 160 மில்லியன் டாலர் அளவுக்கு உயர்த்திய பெருமை கே.ராகவேந்திர ராவுக்கு உண்டு.

மஸ்கட்டிலிருந்து இந்தியாவுக்கு 1992-ல் திரும்பிய ராகவேந்திரராவ். ஆர்க்கிட் கெமிகல்ஸ் அன்ட் ஃபார்மசூடிகல்ஸ் என்ற மருந்துகள் தயாரிப்பு நிறுவனத்தைச் சென்னையில் தொடங்கினார். அக்டோபர் 98-ல் ஆர்க்கிட் ஹெல்த் கேர் என்ற தனிப் பிரிவு உருவாயிற்று.

1997-ல் இளம் இந்தியத் தொழிலதிபர் விருது. 99-ல் ஆண்டின் மிகச் சிறந்த தொழிலதிபர் என்ற கௌரவம். 2000-ல் அரசின் 'சாதனையாளர்' என்ற பாராட்டு. 2002-ல் துடிப்பு மிக்க தொழிலதிபர் என்ற விருது! ஆனால் "சாதிக்க நிறைய இருக்கிறது" என்கிறார்.

47 வயதே ஆன, ஆர்க்கிட் கெமிகல்ஸ் அன்ட் ஃபார்மசூடிகல்ஸின் மானேஜிங் டைரக்டர் கே. ராகவேந்திரராவைச் சந்தித்தோம்:

உலகச் சந்தையில் நுழைய எளிதானது ஆதார நிலை உற்பத்திதான். மருந்துகள் வடிவத்தில் தயாரித்தால் மார்க்கெட்டை விரைவாகப் பிடித்துவிட முடியாது. அதற்கு அதிகக் காலம் ஆகும். எனவேதான் பல்க் டிரக் தயாரிப்பையும், அதன் மூலம் உலக மார்க்கெட்டையும் தேர்ந்தெடுத்தோம். எங்கள் செஃபலோ ஸ்போரின் அப்படித்தான் விரைவில் சர்வதேசச் சந்தையில் இடம் பிடித்தது. (இது இன்ஃபெக்ஷனுக்கு எதிராகச் செயல்படும் மருந்து.)

நாங்கள் 1992-ல் இந்த நிறுவனத்தைத் தொடங்கிய போது என்னுடன் ஐந்தே பேர்தான் இருந்தார்கள். 1994-ல் திட்டம் முடிவடைந்து, உற்பத்தி பிப்ரவரி முதல் தேதி தொடங்கியது. அந்த மார்ச் மாத முடிவில் எங்கள் விற்பனை அளவு 5 கோடியே 5 லட்சம் ரூபாய். இந்த 2004 - 05-ஆம் ஆண்டு வணிகம், சுமார் 713 கோடி ரூபாய். இன்று 2600 ஊழியர்கள் இங்கே பணி புரிகிறார்கள்.

***உங்கள் தொழிற்சாலைகள் எங்கே இருக்கின்றன?***

# சாதிக்க வேண்டியது

***உங்கள் நிறுவனத்தைப் பற்றிச் சொல்லுங்கள்....***

தேர்ந்தெடுத்த சில தெரபுடிக் மருந்துகள், குறிப்பிட்ட சில மருந்துகளின் ஆதார நிலை உற்பத்தி - அதாவது bulk drugs சில ஆன்ட்டிபயாடிக் மருந்துகள் என்று தயாரித்து வருகிறோம்.

***ஏன் பல்க் டிரக்ஸ்?***

சென்னையில், பழைய மகாபலிபுரம் சாலையில் உள்ள ஆலத்தூரில்தான் செஃபலோஸ்போரின் தயாரிப்பு நடைபெறுகிறது. இருங்காட்டுக் கோட்டையிலும் தொழிற்சாலை இருக்கிறது. இவை தவிர, மகாராஷ்டிராவிலுள்ள அவுரங்காபாத்திலும் தொழிற்சாலை இயங்கிவருகிறது. 60 மருந்துகள் உள்நாட்டு - வெளிநாட்டுச் சந்தைகளுக்காகத் தயாராகின்றன. 21 ஆன்ட்டிபயாடிக் மருந்துகளில் 14 இஞ்செக்ஷன் வடிவிலும், 7 வாய் வழியே உட்கொள்ளும் மருந்துகளாகவும் தயாரித்து வருகிறோம்.

# இன்னும் இருக்கிறது!

**பாங்க் ஆஃப் இந்தியாவுடனான தொடர்பு எப்போது ஏற்பட்டது?**

துவக்கத்தில் இருந்தேதான்! IDBI, பாரத ஸ்டேட் வங்கி இவை ஆரம்பத்தில் 'பிராஜக்ட் காஸ்ட்' விஷயத்தில் எங்களுக்குக் கை கொடுத்தன. பிறகு வொர்க்கிங் காபிடல் நிதி தேவைப்பட்டது. அசோக் லேலண்டில் நான் ஏற்கெனவே பணியாற்றியதால், அதன் எம்.டி. திரு சேஷசாயி என்னை பாங்க் ஆஃப் இந்தியாவுக்கு அறிமுகம் செய்து வைத்தார். எங்கள் வங்கிகள் குழுமத்தில் இன்றும் பாங்க் ஆஃப் இந்தியா முக்கிய இடத்தை வகிக்கிறது என்று பெருமையுடன் சொல்வேன். அதுமட்டுமல்ல, தேவையைப் புரிந்து கொண்டு, செயல்படுவதில் பாங்க் ஆஃப் இந்தியாவுக்கு முதலிடம் கொடுக்க வேண்டும்.

**இந்தியாவில் மருந்துத் தயாரிப்புத் தொழிலின் எதிர்காலம் எப்படி இருக்கிறது?**

நன்றாகவே இருக்கிறது. உங்கள் கேள்விக்கான பதிலை நான் மூன்று பகுதிகளாகச் சொல்கிறேன்.

ஒன்று, உள்நாட்டுத் தேவைக்கான மருந்துகளை உற்பத்தி செய்வது. இதில் போட்டா போட்டி அதிகம். என்றாலும் கூட, புதிய மருந்துகளைக் கண்டுபிடித்து அறிமுகம் செய்வது; அதன் மூலம் மக்கள் நன்மை பெறுவது. இதில் இரட்டை இலக்க வளர்ச்சி அதாவது 12 முதல் 15 சதவிகித வளர்ச்சி காண முடிந்திருக்கிறது. கடந்த 5, 6 வருடங்களாக நடைபெற்று வரும் ஆராய்ச்சிகள் காரணமாக, புதிய மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன.

இரண்டாவது, 'பல்க் டிரக்' எனப்படும் ஆதார நிலை உற்பத்தி அதிகரிப்பு மற்றும், தயாரான மருந்துகள் இவற்றை சர்வதேசச் சந்தைக்கு எடுத்துச் செல்லுதல்.

மூன்றாவது, புதிய கண்டுபிடிப்புகளை உருவாக்க, ஆராய்ச்சிகளை முடுக்கிவிடுவது.



**இந்தத் தொழிலில் உங்களுக்குத் தடைகள் அல்லது பிரச்னைகள் என்னென்ன?**

தடைகள் என்று குறிப்பிட்டுச் சொல்லும்படியானவை ஏதும் இல்லை. பி.வி. நரசிம்மராவ் பிரதமராகவும், மன்மோகன் சிங் நிதி அமைச்சராகவும் இருந்தபோதே தாராளமயமாக்கல் திட்டம் செயல்படத் தொடங்கிவிட்டது. அதன் நிதரிசனமான உதாரணம் என்று ஆர்க்கிட் நிறுவனத்தைக் கூடச் சொல்லாம். அரசின் ஆதரவு முற்போக்கானதாகவே இருந்து வருகிறது.



# “ரேஷன் அரிசிக்கு கியூவில் நின்றேன்!”

“தகப்பனார் நாராயணசாமி ஆரம்பித்து வைத்த தொழிலைத்தான் நானும் என் சகோதரர் மோகனும் தொடர்ந்து நடத்தி வருகிறோம். ஆனால் 1979-80ல் எங்களுக்கு ஏற்பட்ட இரண்டு கோடி ரூபாய் நஷ்டம் எங்களை அப்படியே முடக்கிப் போட்டு விட்டது. வசதியாக வாழ்ந்த வாழ்க்கை தலை கீழாக மாறிப் போய்விட்டது. ரேஷன் கடை என்றால் என்ன என்றே தெரியாதபடி வளர்ந்தவன், அங்கே அரிசிக்காக க்யூவில் நிற்க வேண்டிய நிலைமை உண்டாயிற்று. ஆனால் 1988-ல் மீண்டும் தொழிலைத் தொடங்கினேன். கையில் அப்போது இருந்த பணம் ஐயாயிரம் ரூபாய்தான் மூலதனம். கடினமான உழைப்பு, நாணயம், நேர்மையான தொழில்முறை, பாங்க் ஆஃப் இந்தியாவின் ஆதரவு இவற்றோடு, மறுபடி விட்ட இடத்தைப் பிடித்துவிட்டோம்!" என்கிறார் ஜே.கே.எம். லெதர்ஸ் உரிமையாளர் என். குமார்.

"நாங்கள் ஏற்றுமதி செய்யும் நாடுகள் ஐரோப்பா, கொரியா, ஆஸ்திரேலியா, யு.கே. ஜப்பான், இந்த நாடுகள் பலவற்றில் பாங்க் ஆஃப் இந்தியாவின் கிளைகள் இருக்கின்றன!"

நூறு ஊழியர்கள் பணிபுரியும் ஜே.கே.எம். லெதர்ஸில் சுறுசுறுப்பு முக்கிய அம்சமாகத் தெரிகிறது. மாதிரி வடிவங்கள் அயல்நாட்டு விற்பனையாளரிடமிருந்து வந்ததும், சாம்பிள் தயாரித்து அனுப்பிவிட்டு, அவர்கள் ஒப்புதலுக்காகக் காத்திருக்கிறார்கள். ஒப்புதல் கிடைத்த உடனே ஆடைகள் தயாராகின்றன. அப்படி தயாராகக் கிட்டத்தட்ட ஐந்து மாதங்கள் ஆகிறதாம்!

"அஜாக்கிரதை காரணமாக வாடிக்கையாளரே ஆடையைக் கிழித்துவிட்டால்கூட, கடையில் திருப்பிக் கொடுத்தால், வேறு புதிய ஆடை கொடுத்து விடுகிறோம். வாடிக்கையாளரின் திருப்தியும் நம்பிக்கையுமே முக்கியம் இந்தத் தொழிலில்!" என்கிறார் குமார்.

ஆனால் இத்தாலி போன்ற நாடுகளில், நம்முடைய லேபிலைக் கழற்றிவிட்டு, அவர்கள் பெயரை ஒட்டி, நான்கு மடங்கு விலைக்கு விற்பதும் உண்டாம். "எல்லா நாடுகளிலும் நல்லது - கெட்டது இரண்டும் உண்டு!"

வெள்ளாடு, செம்மறி ஆட்டின் தோல்தான் இந்தத் தொழிலுக்குத் தேவைப்படுகிறது.

பூனாவிலும், திருச்செங்கோடு, ஈரோடு, சேலம் ஆகிய ஊர்களிலுமே இவ்வகை ஆடுகள் வளர்கின்றனவாம். அதிலும் கடாவின் தோல்தான் தேவை.

"ஓர் ஆடை தயாரிக்க மட்டும் 10 -12 ஆடுகளின் தோல் தேவைப்படும்!" என்கிறார் குமார்.

வெளிநாடுகளில் தொழில் கூலி, சம்பளம் எல்லாம் அதிகம் என்பதால் இந்தியா போன்ற நாடுகளில் இருந்தே அயல் நாடுகள் இவ்வகை ஆடைகளை இறக்குமதி செய்துகொள்கின்றன.

"கடின உழைப்பு மட்டும் அல்ல, நேரிடையான பணி ஆர்வமும் இந்தத் தொழிலில் இருந்தால்தான் முன்னேற முடியும். நேர்மையும் இந்தத் தொழிலில் முக்கியம். பாங்க் ஆஃப் இந்தியாதான் ஆரம்பத்திலிருந்து எங்கள் வங்கி. வங்கியில் கட்ட வேண்டிய தவணையை ஒருதடவை கூடத் தள்ளிப் போட்டது கிடையாது. அவர்களைப் புரிந்துகொண்டு செயல்படுவதால், அவர்களைப் போன்ற பாங்க் கிடையாது என்று சொல்லலாம். ரொம்பவும் பிராக்டிகல் மட்டுமல்ல, சிநேகமாக வியாபாரத்துக்கு ஒத்துழைப்புக் கொடுப்பார்கள்!" என்கிறார் குமார்.

சிறிய அளவில், 1991-ல் 'ஜெமினி ஹைடெக்' என்று ஆரம்பித்து, 1995-ல் 'ஜெமினி கம்யூனிகேஷன்' என்று ஆனது குட்டிக்கதை என்றால், '95க்குப் பிறகு தொடர்ந்து வெற்றிக்கதைதான்!

கம்ப்யூட்டர்களுக்கு மோனோக்ரோம் மானிடர்கள் மட்டுமே தயாரித்து வந்த நிறுவனம், PC எனப்படும் பர்சனல் கம்ப்யூட்டர்கள் பெருகிய பிறகு, கலர் மானிட்டர்கள் தயாரிக்கத் தொடங்கினார்கள்.

"95-ல் பப்ளிக் லிமிடெட் கம்பெனியாக அறிவித்தோம். இப்போது வயர்லெஸ் சொல்யூஷன் அளிக்கும் மிகச் சிறந்த டாப் - 10 கம்பெனிகளில், எங்களது ஒன்று!" என்கிறார் ராம்குமார். இவரும் சகோதரர் விஜயகுமாரும்தான் ஜெமினி கம்யூனிகேஷன்ஸின் நிறுவனர்கள்.

"இன்றைக்கு வயர்லஸ் இனிஷியேடிவ், நெட்வொர்க் ஸ்டோரேஜ் மற்றும் செக்யூரிடி சொல்யூஷன்ஸ், கம்ப்யூட்டர் டெக்னாலஜி இன்டர்ஃபேஸ், ரேடியோ ஃப்ரீக்வன்ஸி ஐடென்டிஃபிகேஷன் உட்பட ஐந்து பிரிவுகளில் செயல்படுகிறோம்."

# வங்கியின் உறவு– வணிகத்தையும் தாண்டிய உறவு!



நெட்வொர்க்கிங் தவிர டேட்டா செக்யூரிடி, ஆன்ட்டி - வைரஸ் செக்யூரிடி எல்லாமே இவர்களின் ஸ்பெஷாலிடி.

"எங்கள் நோக்கம் நாளையைத் தாண்டியும் சிந்தித்துச் செயல்படுவது. ஒரு குழு புது ஐடியாக்களையே யோசித்துக்கொண்டிருக்கும். இன்னொரு குழு இப்போது என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைக் கவனித்துச் சொல்லும். இன்னொரு குழு ஆர்டர்களைக் கொண்டு வரும். இந்தக் கலவைதான் எங்கள் வெற்றிக்குக் காரணம்" என்கிறார் ராம்குமார்.

"உள்நாட்டில், எங்கள் தொழில் நுட்பத்திலேயே ஒரு பெயரைப் பதிவாக்க வேண்டும் என்பது எங்கள் குறிக்கோள். எல்லோரும் வாங்கக் கூடிய விலையிலும் இருக்க வேண்டும். 'சிஸ்டம் இன்டக்ரேடர்' என்ற வகையில் இருக்கிற, தொழில் நுட்பத்தோடு இணைந்து செயல்பட வேண்டும். அதை இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் விற்பனை செய்து சாதனை படைக்க வேண்டும். அதன் பலன்தான் எங்கள் ரேடியோ ஃப்ரீக்வன்ஸி ஐடென்டிஃபிகேஷன் தயாரிப்பு. இதற்கு பிரான்ட் பெயர் Traze. வயர்லெஸ் நெட்வொர்க்கிங் ஸ்டோரேஜுக்கு Vatsa என்று பெயர். எங்கள் தயாரிப்புகளுக்கு சிங்கப்பூர், மத்திய கிழக்கு நாடுகள், சார்க் நாடுகள், அமெரிக்கா என்று பல இடங்களில் வரவேற்பு இருக்கிறது!"

"1997-ல் பாங்க் ஆஃப் இந்தியா எங்கள் வங்கியாக இருந்தது. மூன்று கோடி ரூபாய் மட்டுமே அன்றைய வணிகம். இன்று 110 கோடி ரூபாய்க்கு வளர்ந்திருக்கிறது. பாங்க் ஆஃப் இந்தியாவின் ஆதரவு எங்களுக்கு முழுக்க முழுக்க இருந்து வருகிறது. வங்கி அதிகாரிகளே சொல்வதுண்டு, 'ஜெமினி கம்யூனிகேஷனும் பாங்க் ஆஃப் இந்தியாவும் ஒன்றோடு ஒன்று பிணைந்தவை, வணிகத்தையும் தாண்டிய உறவு உள்ளவை!' என்று."

இரண்டு கிளைகளுடன் துவங்கியவர்கள், இன்று 12 கிளைகளுடன் வளர்ந்திருக்கிறார்கள். அமெரிக்காவில் நியூஜெர்ஸியிலும் ஒரு கிளை! 60 சப்போர்ட் சென்டர்கள். 25 ஊழியர்களுடன் தொடங்கிய நிறுவனத்தில், இன்று சுமார் 400 பேர் பணிபுரிகிறார்கள் என்கிறார் ராம்குமார்.

கிராமங்கள் ஓரளவு முன்னேறி, பொருளாதாரமும் சிறக்க வேண்டுமானால், அங்கே உள்ள பெண்கள் ஒன்று சேர்ந்து, தாங்களாகவே சிறு சிறு குழுக்களாக அமைத்துக் கொண்டு, தங்கள் சேமிப்பைச் சேர்த்து வைத்து, தங்கள் கைவினைத் தொழில்களால் மேலும் மேம்பாடு அடைய முடியும்.

இதை நிரூபித்துக் காட்டும் கிராமங்கள் இன்று தமிழ்நாட்டில் ஏராளம். ஒவ்வொரு மாவட்டத்திலும் செயல்படும் சிறு சிறு சுய உதவிக் குழுக்கள் இன்று மெள்ள மெள்ள கிராமப் பொருளாதாரத்தின் முகத்தையே மாற்றியமைத்து வருகின்றன.

ஒரே கிராமத்தில் வசிக்கும் ஒருமித்த கருத்துடைய பன்னிரண்டு ஏழைப் பெண்கள், ஒற்றுமை மனப்பான்மையுடன் செயல்பட்டால் போதும். தங்கள் குடும்பமும், அதன் தொடர்ச்சியாகக் கிராமமும் முன்னேற்றம் அடையும். இந்தக் குழுக்கள் பதிவு செய்யப்பட வேண்டும் என்ற அவசியம்கூட இல்லை!

ஒரு குழு உருவாக ஒரு மாதம் போதும். ஆனால் சில குழுக்கள் உருவாக ஆறு மாதங்கள்கூட ஆகலாம்.

வங்கிக் கணக்கை சுய உதவிக் குழுவின் பெயரில்தான் துவங்க வேண்டும். சேமிப்பு முதல் மாதத்திலேயே தொடங்கி விடுகிறது! அதேபோல, முதல் மாதத்திலிருந்தே குழு உறுப்பினர்களுக்குள்ளே கடன் கொடுப்பதும் தொடங்கிவிடுகிறார்கள். வட்டி, கடன் தொகை அளவு, கடன் வாங்கக் காரணம் எல்லாமே குழு நிர்ணயிக்கிறது. தொடக்கத்திலிருந்தே கணக்குகளை அழகாக எழுதி



• தஞ்சை மாவட்டம் பாப்பநாடு மகளிர் சுயஉதவிக் குழு

வைத்துக் கொள்கிறார்கள்.

குழுக்கள் மாதந்தோறும் கூடி விவாதிக்கின்றன. ஆறு மாதங்களுக்குப் பிறகு சமூக விஷயங்களில் அக்கறை காண்பிக்கத் தொடங்குகிறார்கள். முழுப் பொறுப்பும் ஏற்க இரண்டு முதல் நான்கு வருடங்கள் ஆகிவிடுமாம். ஆனால் தொடங்கப்பட்ட எட்டு மாதங்களிலேயே, வங்கியிலிருந்து கடன் பெறும் அந்தஸ்தை சுய உதவிக் குழுக்கள் எட்டி விடுகின்றன.

**ஏன் பிறந்தன சுய உதவிக் குழுக்கள்?**

ஏழைகள் இன்னும் ஏழைகளாவதைத் தடுக்க. கந்து வட்டியின் கிடுக்கிப் பிடியிலிருந்து விடுபட. பெண்கள் விழிப்புணர்வு பெற; அவர்கள் தங்களுக்குள்ளே இருக்கும் திறமையை வெளிப்படுத்த.

**சிறந்த சுய உதவிக் குழு எது தெரியுமா?**

நிதியைக் கையாள்வதில் ஒழுங்கும்

நேர்மையும். தொடர்ந்த சேமிப்பு. குழுவைத் தொடங்கிய கையோடு, வங்கிக் கணக்கையும் துவங்கி விடுவது. துவக்கத்திலிருந்தே குழுக்குள் கடன் கொடுக்கத் தொடங்கி, நூறு சதவிகிதம் திரும்பச் செலுத்துவதைக் கடைப்பிடிப்பது, கணக்குகளை ஒழுங்காக வைத்திருப்பது போன்றவற்றை கடைபிடிக்கும் குழுவே சிறந்தது.

**தொண்டு நிறுவனங்களின் பணி என்ன?**

குழுவை அமைப்பதிலும், நிர்வகிப்பதிலும், மாலை நேரக் கூட்டங்கள் நடத்துவதிலும், குழுவின் கணக்குப் புத்தகங்களை ஒழுங்காகப் பராமரிக்கவும் தொண்டு நிறுவனங்கள் சுய உதவிக் குழுக்களுக்கு உதவுகின்றன.

**குழு உறுப்பினர்களைத் தேர்வு செய்வது எப்படி?**

- வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழும் ஏழைகள்.
- ஒரே கிராமத்தில் வசிப்பவர்கள்.
- 18 முதல் 60 வயதுக்கு உட்பட்டவர்கள்.
- தன்னார்வம், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை, ஒற்றுமை உணர்வு உள்ளவர்கள்.

'கடன் வாங்கித் தருவோம், மான்யம் வாங்கித் தருவோம்' என்ற ஆசை காட்டி, சுய உதவிக் குழுக்கள் உருவாக்குவது நல்லதல்ல, அது தவறு.

பாங்க் ஆஃப் இந்தியா, தமிழ்நாட்டில் மட்டும், இன்றுவரை 3900 சுய உதவிக் குழுக்களுக்குக் கடன் உதவி செய்திருக்கிறது. இதில் சுமார் 3700- குழுக்கள் முழுக்க முழுக்கப் பெண்களாலேயே நடத்தப்படுகின்றன.

# சுய உதவிக் குழுக்கள் சமூக மாற்றத்தின் சக்திகள்!



* சுயஉதவிக் குழு - கூடை பின்னுதல்

மொத்தக் கடன் தொகையான 35.48 கோடியில், பெண்கள் சுய உதவிக் குழு மட்டும் பெற்ற கடன் தொகை 33.62 கோடி ரூபாய். இதன் மூலம் சுமார் 60,000 உறுப்பினர்கள் பயன் அடைந்துள்ளனர்.

சுய உதவிக் குழுக்கள் ஆல் போல் வளர்ந்து சிறக்க, தொண்டு நிறுவனங்களும் வங்கிகளும் இணைந்து செயல்படுகின்றன.

Star

**Internet Banking**

# இன்டர்நெட் பாங்க்கிங்கில் இருக்கிற வசதிகள்!



உங்களுக்கு கம்ப்யூட்டர் வசதி இருந்துவிட்டால், இன்டர்நெட் பாங்க்கிங் ரொம்ப சுலபம்!

- உங்கள் கணக்கில் எவ்வளவு தொகை இருக்கிறது என்று நீங்களே பார்த்துக் கொள்ளலாம்.
- உங்கள் கணக்குப் பட்டியலை நீங்களே பிரிண்ட் அவுட் எடுத்துக் கொள்ளலாம்.
- கடைசி ஐந்து கொடுக்கல் - வாங்கல் தொகைகளை சட்டென்று பார்த்துக் கொண்டு விடலாம்.
- குறிப்பிட்ட காசோலை கணக்கில் சேர்ந்து விட்டதா என்று பார்க்கலாம். நீங்கள் அனுப்பிய காசோலைக்குப் பணம் கொடுக்கப்பட்டுவிட்டதா என்று அறியலாம்.

**சரி, கூடுதலாக என்ன வசதி?**

- செக் புத்தகம் தீர்ந்து விட்டது என்றால், உடனே அனுப்பச் சொல்லலாம்.
- இன்னோர் அக்கவுண்டுக்கு பணம் அனுப்ப வேண்டியிருந்தால், 'ஆன் - லைன்' மூலமாக அனுப்பலாம்.

**அப்புறம்?**

- உங்கள் 'பாஸ்வேர்டு' மாற்ற வேண்டும் என்றால் தாராளமாக மாற்றிக் கொள்ளலாம்!
- வேறு எந்தெந்தக் கிளைகளில் இந்த இன்டர்நெட் பாங்க்கிங் வசதி இருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம்.
- பாதுகாப்புக் கருதி, பழைய கணக்கை - ஒரு குறிப்பிட்ட கால அவகாசத்துக்கு பார்த்துக் கொள்ளலாம். வேறு யாராவது உங்கள் கணக்கில் புகுந்து விளையாடியிருக்கிறார்களா என்று பார்த்து விடலாம்!

**யார் யாருக்கு இந்த வசதிகள் கிடைக்கும்?**

- சேவிங்ஸ் (சேமிப்புக் கணக்கு) வைத்திருப்பவர்களுக்கு.
- நடப்புக் கணக்கு (கரண்ட்) வைத்திருப்பவருக்கு.
- கேஷ்-கிரெடிட் அக்கவுண்ட் வைத்திருப்பவருக்கு.
- ஓவர் டிராஃப்ட் வசதி உள்ளவருக்கு.
- கடன் வசதி பெற்றவருக்கு.

**எந்த எந்தக் கிளைகளில்?**

220 நகரங்களில் உள்ள 731 இன்டர்நெட் இணைப்பு உள்ள பாங்க் ஆஃப் இந்தியா வங்கிக் கிளைகளில்!

பாங்க் ஆஃப் இந்தியா, தன் வாடிக்கையாளருக்கு உதவ வைத்திருக்கும் வீட்டு வசதிக் கடன் திட்டத்தின் முக்கிய அம்சங்கள் என்ன என்று பார்ப்போம்:

**எதற்கெல்லாம் கடன்?**

வீடு அல்லது ஃப்ளாட் வாங்கவோ, கட்டவோ. மாற்றி அமைக்க அல்லது பழுது பார்க்க. வீடு கட்டும் நோக்கத்துடன் பிளாட் அல்லது நிலம் வாங்க. வீட்டை அலங்கரிக்கத் தேவையான சாதனங்கள் வாங்க. வேறு நிதி நிறுவனங்கள் அல்லது வங்கிகளில் இருந்து வீடு கட்டக் கடன் வாங்கியிருந்தால் அதைத் திரும்பச் செலுத்த.

**எவ்வளவு தொகை கிடைக்கும்?**

ஒரு லட்சத்துக்கு மேற்பட்ட ஜனத்தொகை உள்ள நகர்களில் என்றால், அதிகபட்சமாக 50 லட்ச ரூபாய். பிற நகரங்களில், அதிகபட்சம் 25 லட்ச ரூபாய்.

விதி விலக்கான சிலர் விஷயத்தில் 300 லட்ச ரூபாய் வரை கடன் பெற வசதி இருக்கிறது!

**வட்டி விகிதம் என்ன?**

7½ சதவிகிதத்தில் இருந்து 8½ சதவிகிதம் வரை, திரும்பச் செலுத்துகிற காலத்தைப் பொறுத்து அமைகிறது வட்டி விகிதம். பத்து லட்சம் ரூபாய் வரையிலான கடன் என்றால் 15 சதவிகிதம். பத்து லட்ச ரூபாய்க்கும் மேலே என்றால் 20 சதவிகிதம்.




# சொந்த வீடு வாங்க சுலபமான கடன் வசதி!

**திரும்பச் செலுத்த வேண்டிய வருடங்கள்?**

வீட்டையோ, ஃப்ளோட்டையோ கட்டி முடிக்க 18 மாதங்கள் ஆகின்றன என்று வைத்துக் கொள்வோம். அப்படிக் கட்டி முடித்ததில் இருந்து, அதிக பட்சமாக 20 வருடங்கள் வரை, கடனைத் திரும்பச் செலுத்த வசதி இருக்கிறது.

**விண்ணப்பத்தைச் சரிபார்த்துக் கொடுக்கக் கட்டணம்?**

உண்டு. இரண்டு லட்ச ரூபாய் வரை என்றால் 0.55% உடன் ரூ.500/- இதுவே இரண்டு லட்ச ரூபாய்க்கும் மேலே என்றால் 0.55% உடன் ரூ.2200/- செலுத்த வேண்டும்.

**வேறு என்ன விதிமுறைகள்?**

ஈக்விடபிள் மார்ட்கேஜ், தவிர சொந்த கியாரன்டி.

**கூடுதலாக என்ன வசதிகள் கிடைக்கும்?**

- இலவசமாக விபத்து இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு. துரதிர்ஷ்டவசமாக உயிரிழப்போ, கால் - கை இழந்து செயல் இழப்போ ஏற்பட்டால் மீதிக் கடன் தொகை முழுவதையும் இன்ஷ்யூரன்ஸ் தொகை மூலமே செலுத்திவிடக் கூடிய வசதி!
- முதல் வருடத்துக்குக் கட்டணம் ஏதும் இல்லாமலே கிரெடிட் கார்டு வசதி!

வருமான வரியிலிருந்து குறிப்பிட்ட தொகை வரை விலக்கு

வட்டித் தொகைக்கு மட்டுமல்ல, கடனைத் திரும்பச் செலுத்தும் மாதத் தவணைக்கும்!

बैंक ऑफ़ इंडिया
Bank of India




# பெறுங்கள், பெர்சனல் லோன்!

**த**லைப்பைப் பார்த்தால் கண்டி இழுக்கிறது. அவ்வளவு சுலபமா என்ன, தனி நபர் கடன் பெறுவது? 'சுலபம் தான்' என்கிறது பாங்க் ஆஃப் இந்தியா!

உதாரணமாக?

கல்வி, திருமணம், மருத்துவம், வீடு பழுதுபார்த்தல் போன்ற செலவுகளுக்கு கடன் கிடைக்கும்.

இவை எல்லாம் க்ளீன் அல்லது அன் செக்யூர்டு லோன் என்பார்கள். இதில் அதிக பட்சமாக ரூ.1,50,000 வரை கடன் பெறலாம். மாதச் சம்பளம் பெறுபவர், பிடித்தம் போகக் கைக்கு வரும் தொகையில் பத்து மடங்கு பெற முடியும். வழக்கறிஞர் - டாக்டர் முதலியவர்கள் விஷயத்தில், அவர்களுடைய வருடாந்தர வருமானத்தில் ஐம்பது சதவிகிதம் வரை பெறலாம். ஓய்வூதியம் பெறுகிறவர் என்றால் ஓய்வூதியத் தொகையில் 10 மடங்கு பெறலாம்; ஆனால் இவர்களுக்கான உச்ச வரம்பு ரூ.50,000/-

கடன் உதவி பெற்ற மறு மாதத்திலிருந்து 36 மாதாந்திரத் தவணைகளாகத் திருப்பிச் செலுத்தினால் போதும். சில அசாதாரண சூழ்நிலையில் இருக்கும் பட்சத்தில் 60 மாதங்களில்கூடக் கட்டலாம்.

எல்லோருக்கும் 13.25% என்றால், ஓய்வூதியம் பெறும் மூத்த குடிமகன்களுக்கு வட்டி விகிதம் 10.75% தான்.

**'செக்யூர்டு லோன்' என்கிறார்களே அது என்ன?**

ஆகா, அப்படியும் இருக்கிறது. அதில் அதிகபட்சமாக ரூ.10 லட்சம் வரை கடன் பெறலாம்!

வேறு ஓர் இடத்தில் சற்று அதிக வட்டிக்குக் கடன் பெற்று வீட்டை வாங்கியிருந்தாலோ, கட்டியிருந்தாலோ, இங்கே புதுக் கடன் வாங்கி அதைத் திருப்பிக் கட்டி விடலாம். அது மட்டுமல்ல. வீட்டை மாற்றி அமைக்கிறீர்கள்; பெரிய அளவில் சீரமைப்புச் செய்கிறீர்கள் என்றால் அதற்கும் கடன் பெறலாம். இந்தப் பிரிவிலும் கல்விக் கடன் பெற வாய்ப்பு இருக்கிறது. இல்லை, கம்ப்யூட்டர் வாங்க வேண்டும், ஏர்கண்டிஷனர் வாங்க வேண்டும், அல்லது கருவியோ இயந்திரமோ வாங்க வேண்டும் எனறால் அதற்கும் இந்தக் கடன் வசதி உண்டு.

பத்து லட்சம் ரூபாய் வரை கடன் பெறும்போது, அதிக பட்சமாகப் பெறும் தகுதி உண்டல்லவா? சம்பளம் பெறும் ஊழியர் விஷயத்தில், 20 மாதச் சம்பளம் (பிடித்தம் ஏதும் இல்லாத முழுத் தொகை) தனியாகத் தொழில் செய்பவர் என்றால், வருமான சராசரித் தொகையின் அடிப்படையில் வருட வருமானத்தில் நூறு சதவிகிதம் ஓய்வூதியம் பெறுகிறவர் என்றால் 2[illegible] மடங்கு மாத ஓய்வூதியத் தொகை; ஆனால் அதிகபட்சமாக ரூ. 1,00,000/-

வட்டி 12.75% (இப்போதைய விகிதம்.)

**இதற்கு அடைமானம் வைக்க வேண்டியிருக்குமே?**

ஆம். சொத்தின் அடைமானம் அவசியம். இது தவிர, தங்க நகைகள், என்.எஸ்.ஸி இந்திரா விகாஸ் பத்திரங்கள். எல்.ஐ.சி பாலிசி.

**கட்டணம் இருக்குமே?**

இருக்கிறது. குறைந்தபட்சம் ரூ.550/, அதிக பட்சம் ரூ. 2200. ஓய்வூதியம் பெறுபவருக்கு இவை ரூ.500 மற்றும் ரூ.110[illegible] தான்.

# உயர் கல்விப் படிப்புக்கு உங்களுக்கு உதவும் வங்கி!

STAR EDUCATION LOAN

நம் நாட்டில் உள்ள கல்லூரிகளிலோ, வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களிலோ உங்கள் மகன் அல்லது மகள் படிப்பை மேற்கொள்ள விரும்பினால், கவலைப்படாதீர்கள், பாங்க் ஆஃப் இந்தியா உங்களுக்குக் கடன் உதவி செய்யக் காத்திருக்கிறது!

இந்தியாவில் இஞ்சினியரிங், மருத்துவம், வேளாண்மை, சட்டம், நிர்வாக இயல், கம்ப்யூட்டர் துறை என எல்லாப் பிரிவுகளுக்கும் கடன் உதவி பெறலாம்.

அயல்நாட்டில் பல்கலைக் கழகங்களில் மேற்படிப்பைத் தொடரவோ, தொழில்நுட்பம் அல்லது ஆராய்ச்சித் துறைகளில் உயர் கல்வி பெறவோ இந்தக் கடன் வசதி பெறலாம்.

இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும் என்பது முதல் தகுதி. அடுத்த தகுதி மேற்படி கல்லூரிகளிலோ, பல்கலைக் கழகங்ளிலோ சேரக் கிடைத்திருக்கும் அழைப்புக் கடிதம் வந்திருக்க வேண்டும்.

கல்லூரிக் கட்டணம், ஹாஸ்டல் கட்டணம், தேர்வுக் கட்டணம், நூலகக் கட்டணம், புத்தகங்கள் வாங்கும் செலவு, பயணச் செலவு, பிராஜக்ட் அல்லது தீஸிஸ் இவற்றுக்கு ஆகும் தொகைகள் என, கடன் வசதி அளிக்கப்படுகிறது.

இந்தியாவில் கல்வி பெற, அதிகபட்சக் கடன் தொகை ரூ.7.5 லட்சம்; வெளிநாட்டில் கல்வி பெற என்றால் ரூ.15லட்சம் கடன் உதவி அளிக்கப்படும்.

'மார்ஜின்' தொகையாக, இந்தியாவில் மேற்படிப்பு மேற்கொள்ள, நான்கு லட்ச ரூபாய் வரை, தொகை ஏதும் கட்ட வேண்டாம். கடன் தொகை நான்கு லட்ச ரூபாய்க்கு மேல் என்றால் 5% வங்கியில் கட்ட வேண்டும்; அல்லது வைத்திருக்க வேண்டும்.

சேவைக் கட்டணம் எதுவுமில்லை!

நான்கு லட்ச ரூபாய்க் கடன் வரை எந்த 'செக்யூரிடி'யும் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. அதற்கு மேல் என்றால் தொகைக்கு ஈடான செக்யூரிடி தேவை. அத்துடன், வேலை கிடைத்த பிறகுப் பணத்தைத் திரும்பச் செலுத்தும் உத்தரவாதமும் தேவை.

ஏழு வருடங்களில் கடனைத் திரும்பச் செலுத்த, கால அவகாசம் இருக்கிறது!

படிக்கிற காலத்திலேயே கடனைத் திரும்பக் கட்டுகிற மாணவருக்கு வட்டியில் சலுகை காண்பிக்கப்படுகிறது!



बैंक ऑफ़ इंडिया
Bank of India



# "வாடிக்கையாளர் வளமே எங்களது வளர்ச்சி"

- பி.எல். கெய்ரோலா,
(நிர்வாக இயக்குனர்)

1906-ல் நிறுவப்பட்ட எங்கள் வங்கி, மக்கள் சேவையில் நூறு ஆண்டுகளை நிறைவு செய்யும் தருவாயில் உள்ளது. அரசாங்கம் தாராளமயமாக்கல் கொள்கையைக் கடைப்பிடிக்க ஆரம்பித்த பின்னர், வங்கிகளின் இடையே போட்டி அதிகரித்துள்ளது. புதிதாக வந்த தனியார் வங்கிகள், புதுத் தொழில் நுட்பங்களைப் புகுத்தி, வாடிக்கையாளர்களுக்கு அளப்பரிய சலுகைகளையும், திருப்தி அடையாத வாடிக்கையாளர்களையே திருப்தி அடையும் வகையில், வியக்கத்தகு சேவையையும் செய்து வரும் வேளையில், எங்கள் வங்கி, ஒரு நூற்றாண்டு சேவையை முடித்தது என்பது, இந்த வங்கி நிறுவுவதில் பங்கேற்ற அனைவருக்கும் ஒரு கனவு நினைவானது என்ற திருப்தியை நிச்சயம் ஏற்படுத்தும்.

வங்கி கடந்த நூறு ஆண்டுகளில் செய்துள்ள அபரிமிதமான வளர்ச்சிக்கும் சாதனைகளுக்கும் காரணம் வாடிக்கையாளர்களின் பங்கே. மற்ற வர்த்தகங்களைப் பொறுத்தவரை, வாடிக்கையாளர்களோடு ஏற்படும் தொடர்பு, ஒரு குறுகிய கால தொடர்பாக முடிந்து விடும். வங்கியின் வளர்ச்சிக்குக் குறுகிய காலத் தொடர்புகள் பலனளிக்காது. வாடிக்கையாளர்கள் உகந்த வங்கியைத் தேர்வு செய்யும் முன்பு, பல கோணங்களிலும் அணுகி, பிறகே முடிவு செய்கிறார்கள். இந்த நிலையில், சம்பந்தப்பட்ட வங்கிகளின், சேவை செய்யும் திறனையும், அதைச் செயல்படுத்தும் மனத் திண்மையையும் ஆராய்ந்து, சக மக்களின் கணிப்பையும் மனதில் கொண்டே தேர்வு செய்கிறார்கள்.

இதனைக் கருத்தில் கொண்டே எங்களது வங்கி வாடிக்கையாளர் சேவைக்கு துவக்க முதலே முதன்மை இடம் கொடுத்து வருகிறது. தேசியமயமாக்கப்படுவதற்கு முன்பும், அதன் பிறகும் எங்கள் வங்கியின் நோக்கமே The Bank that Cares அதாவது 'உங்கள் நலம் பேணும் வங்கி.'

எந்தச் சிறு தேவையையும் எப்படிப்பட்ட வாடிக்கையாளராக இருந்தாலும் பாகுபாடு இல்லாமல் குறித்த காலத்தில் நிறைவு செய்யும் வங்கி, 'குறை ஒன்றும் இல்லை' என்று வாடிக்கையாளர்களே சொல்லும் நிலையையே எங்களது இலட்சியமாகக் கொண்டு எங்கள் வங்கி செயல்பட்டு வருகிறது. இதனை மனதில் கொண்டு தனியார் வங்கி மற்றும் அந்நிய நாட்டு வங்கிகளுக்கு ஈடாக எல்லாவிதமான சேவைகளையும் கடன் உதவிகளையும், சிறப்பான முறையில் செய்து வருகிறது. ஒவ்வொரு திருப்தி அடைந்த வாடிக்கையாளரும் வங்கியின் நல்லெண்ணத் தூதுவராகச் செயல்பட்டு, மற்ற வாடிக்கையாளர்களை நமது வங்கிக்கு அறிமுகம் செய்வதில் பெருமை கொள்ள வேண்டும். அதன் மூலம் நாம் வளர்ச்சி பெற வேண்டும். இந்த வங்கியின் நூற்றாண்டு வளர்ச்சிக்கு, தலைமுறை தலைமுறையாக, தேச நலனுக்காகவும், குடிமக்கள் நலனுக்காகவும், தொண்டு செய்ய எங்களுக்கு வாய்ப்பு தரும் எங்களது வாடிக்கையாளர்களுக்கு எங்களது மனங்கனிந்த நன்றி. அவர்களுக்கு மேலும் சிறப்பான முறையில் சேவை செய்ய, எங்களது வங்கியில் சேவை புரியும் அனைத்து ஊழியர்களும் உறுதிபூணுகிறோம்.

பேட்டிகள், கட்டுரைகள்:
**சாருகேசி, ஜி.எஸ்.எஸ்**

Registered with the Registrar of Newspaper of India under No. 10415/7 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki issue Dated 22.1.2006